# கல்கி

## பொருளடக்கம்

**அக்டோபர் 11, 1959**



"கல்கி" யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 19 இதழ் 11

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

விகாரிஞு புரட்டாசி 25உ.

# கண்டிப்பான கடிதம்

பாரதப் பிரதமர் நேருஜி சீனப் பிரதமர் சூ என் லாய்க்குக் கண்டிப்பாகவும், அதே சமயம் நியாயமான முறையிலும் எழுதியுள்ள கடிதம் பாரத மக்களுக்குப் புது உற்சாகமும் நம்பிக்கையும் அளித்திருக்கிறது.

சில வாரங்களுக்கு முன்பு பிரதமர் நேருஜி, புது தில்லி மக்கள் சபையில் சென்ற நான்கு ஆண்டுகளாகவே இந்திய வட எல்லையில் சீனு ஓயாமல் சில் விஷமம் செய்து வந்திருக்கிறதென்றும், அவை யெல்லாம் தனது சகாக்களான மந்திரிகளுக்குக்கூடத் தெரிவிக்காமல் இருந்து வந்திருக்கிறார் என்பதையும் தெரிவித்தார். இந்தச் செய்தியைக் கேட்ட போது பாரத மக்கள் துணுக்குற்றனர். இந்த நான்கு ஆண்டுகளும், "இந்தி சீனி பாய் பாய் !" என்று பைத்தியக்காரத்தனமாக அல்லவோ சீனுவுடன் நட்புறவு கொண்டாடினேம் என்று பாரத மக்கள் தங்களுக்குள் அவமானப்பட்டனர். இந்தியா தைரியமாகச் சீனுவின் அக்கிரமத்தை எதிர்க்க முடியாதா என்று ஒருவரை யொருவர் கேட்டுக் கொண்டனர்.

பிரதமர் நேரு உலக விவகாரங்களைப் பொறுத்த வரையில் சமாதானப் பிரியர் ! எதையும் கொடுத்துச் சமாதானம் செய்துகொள்ளலாம் என்ற அளவுக்குத் தீவிரஉணர்ச்சியுள்ளவர். சீனப் பிரதமர் சூ-என்-லாயிடம் தமக்குள்ள சொந்தச் செல்வாக்கைப் பயன்படுத்திச் சமாதானத்தை நிலைநாட்டலாம் என்று முயன்றார். அவர் முயற்சிகள் தோல்வியுறவே, பாரத நாட்டு மக்களுக்கு விஷயத்தைப் பகிரங்கப்படுத்தி விட்டார்.

சீனு பாரதத்தின் வட எல்லையில் சுமார் 40,000 சதுர மைலுள்ள பிரதேசத்தைத் தனதாக்கிக் கொள்ளப் பார்க்கிறது. லவுஞ்சு என்ற வட எல்லையிலுள்ள இந்திய ராணுவ பாதுகாப்பு ஸ்தலத்தை ஆக்கிரமித்துக் கொண்டுள்ளது. சீனு இந்தியாவுடன் உண்மையில் சிநேகம் கொள்ள விழையுமானல் இப்படி யெல்லாம் நடந்து கொண்டிருக்கக் கூடாது ! சீனுவின் போக்கு எப்படியாயினும் நமது நிலையைத் தெளிவாக்கிவிட வேண்டும். பாரதப் பிரதமர் அதைத் தெளிவாக்கி விட்டார்.

சீனு இந்திய எல்லையை விட்டு நகர்ந்த பிறகே, எல்லைப் பிரச்னையைப் பற்றிப் பேச முடியும் என்று நேருஜி கண்டிப்பாகக் குறிப்பிட்டிருப்பது வரவேற்கத் தக்க விஷயம்.

பஞ்சசீலக் கொள்கை ஒரு நாட்டுக்கு மட்டும் ஏற்பட்டதல்ல, கையெழுத்திட்ட இரண்டு நாடுகளும் அனுசரிக்க வேண்டியது என்பதை ஏட்டளவில் மட்டும் அங்கீகரித்தால் போதாது; செயலிலும் கடைப்பிடிக்க வேண்டும் என்பதைச் சீனப் பிரதமர் உணர்ந்து கொள்ள வேண்டும். இந்திய மக்களின் உண்மை நேசத்தை அப்பொழுதுதான் பெற முடியும்.

சமீபத்தில் ருஷ்யப் பிரதமர் குருஷேவ் சீனத் தலைநகரத்துக்குச் சென்று சீனத் தலைவர்களுடன் பேசி வந்திருக்கிறார். அப்பேச்சுப் பெரும்பான்மையும் ரகசியப் பேச்சாகும். அந்தப் பேச்சுக்களில் இந்திய எல்லையை விட்டுச் சீனுவை அகலும்படி குருஷேவ் அறிவுறுத்தியிருக்கலாம் என்று நம்ப இடமிருக்கிறது ! ருஷ்யப் பிரதமரின் வார்த்தைகளைக் கேட்டாவது சீனு ஒழுங்காக நடந்து கொள்ளுமென எதிர்பார்ப்போமாக.

# நேருஜியும் சுதந்திரக் கட்சியும்

காங்கிரஸ் திட்டங்கள் நிலச்சொந்தக்காரர்களுக்கும் உழவர்களுக்குமிடையே துவேஷத்தை வளர்த்து வருகின்றன; கிராம வாழ்க்கை வாழ்வதற்குத் தகுதியற்ற நிலைமையை யுண்டாக்கி வருகின்றன என்று குறை சொன்னால், அந்த நிலைமையைப் போக்குவதற்கு வழிவகைகள் தேடுவதற்குப் பதில், ''அது அப்படித்தான் இருக்கும். இன்றுள்ள 'ப்யூடல்' முறையில் இதைப் போக்குவதற்கு வழியில்லை' என்று காங்கிரஸ் அக்கிராசனாதிபதியாகிய ஸ்ரீமதி இந்திரா காந்தி சொல்லுகிறார். அதாவது இருக்கும் துவேஷத்தை வளர்க்கும் வகையில் பேசுகிறார். பாரத மக்களின் நல்வாழ்வுக்காகத் தோற்றுவிக்கப்பட்ட காங்கிரஸ் ஸ்தாபனத்தின் தலைமைப் பதவிக்குச் சற்றும் ஒவ்வாத வகையில் அவர் பேசுகிறார்!

ஸ்ரீமதி இந்திரா 'ப்யூடல் முறை' என்று குறிப்பிடுவது மிகப் பழங்காலத்தில் பிரிட்டன் போன்ற நாடுகளில் நிலவி வந்த முறையைத்தான். ஜமீன்தார்கள், நிலத்தில் பாடுபட்டு வேலைசெய்யும் உழவர்களை அடிமைகளைப்போல் நடத்தி, அவர்களைக் கசக்கிப் பிழிந்து வரி வசூலித்து வந்த காலத்தைச் சொல்லுகிறார். பாரத நாட்டில் வடநாட்டில் இத்தகைய ஜமீன்தாரி முறை இருந்தது. ஜமீன்தார் என்பவர் பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்துக்கு உழவர்களிடமிருந்து வரி வசூல் செய்து அரசாங்கத்துக்குச் செலுத்தும் ஏஜண்டுகளாக இருந்தார்கள். அப்படி வரி வசூலிக்கும்போது தங்களுக்கு வேண்டிய பணத்தையும் விவசாயிகளிடமிருந்து வசூலித்துக் கொள்வார்கள். அவர்களுக்கு நிலத்தில நேரடியான அக்கறை ஏதொன்றும் கிடையாது. இந்த வகுப்பாரை ஒழிக்கத்தான இருபது முப்பது ஆண்டுகளுக்கு முன்பே காங்கிரஸ் பெருந்தலைவர்கள பலமான இயக்கம் நடத்தித் தாங்கள் பதவிக்கு வந்ததும் ஜமீன்தார் ஒழிப்புச் சட்டம் இயற்றினார்கள். இதனால் பழைய ஜமீன்தாரி முறை ஒழிந்து விவசாயி ஒவ்வொருவனும் நேரிடையாகச் சர்க்காருக்கு கிஸ்தி செலுத்தும் சுதந்திர புருஷனானான். ஆகவே, இன்று பழங்கால 'ப்யூடல்' முறை என்பது பாரத நாட்டில் எங்குமே கிடையாது.

இப்பொழுதுள்ள நிலச் சொந்தக்காரர்கள் நிலத்தில் அக்கறையுள்ளவர்கள். விவசாயம் தெரிந்தவர்கள். நிலத்துக்கு உரமிடுதல், தண்ணீர் இறைத்தல், வேலி கட்டுதல், போரடித்தல் எல்லாக் காரியங்களிலும் உழவனுக்குப் பொருளாலும் பணத்தாலும் நேர்முகமாகவும் உதவிவருபவர்கள். ஆகவே இன்றைய நிலச் சொந்தக்காரர்களுக்கும் உழவர்களுக்கும் நெருங்கிய நட்பும் தொடர்பும் மரியாதையும் உண்டு. உழவர் வீட்டில் கல்யாணம் என்றால் நிலச் சொந்தக்காரர் மனமுவந்து பலவித உதவிகள் புரிவதுண்டு. இப்படியொரு அந்தியோந்திய பாவம் நிலவி வருவதைக் காங்கிரஸின் திட்டங்கள் குலைத்து வருகின்றன என்றால் ஸ்ரீமதி இந்திரா தந்தையைப் போலவே பிரத்யட்ச நிலைமையை உணராமல் 17வது, 18வது நூற்றாண்டு பிரிட்டிஷ் வரலாற்றை எடுத்துப் பேசுகிறார்.

இப்படியெல்லாம் பேசுவது, நிலத்தை வைத்துக் கொண்டு சுதந்திரமாக வாழ விரும்பும் மக்களின் வாழ்வை வேண்டுமென்றே பாழாக்கி அவர்களைக் கொடுமைப் படுத்துவதாகும்!

தொழில் துறையிலும் நிர்வாகிகளுக்கும் தொழிலாளர்களுக்குமிடையே வெறுப்பு வளர்க்கும் வகையில் பேசுவது அறிவுடைமையாகாது. எந்தத் தொழிலும் நிர்வாகிகள், தொழிலாளர்கள் என்ற இரு பிரிவினரின்றி நடைபெற முடியாது. இவர்களிடையே நட்புறவை வளர்ப்பதற்குப் பதில் வெறுப்பும் துவேஷமும் ஏற்படுவது இயல்புதான் என்று பேசுவது நாட்டில் தொழில் வளத்தைப் பெருக்குவதற்கு வழியல்ல. இதேமாதிரி விவசாயத் துறையில் பேசுவது உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு வழியல்ல.

இத்தகைய பேச்செல்லாம் காந்தி மகானின் பிறந்த நாளைக் கொண்டாடும் பாரதத்தில் நிகழ்வது பரிதாபம். வாழ்நாளெல்லாம் எல்லா வகை மக்களிடையேயும் ஒற்றுமையையும் நேசத்தையும் வளர்க்கப் பாடுபட்ட காந்தி மகான் பிறந்த நாளைக் கொண்டாடும் வாரத்தில், காங்கிரஸ்காரர் துவேஷப் பிரசாரம் செய்யப் புகுவது மிகமிகப் பரிதாபம். 'இன்று அதிகாரத்திலிருக்கும் மக்களுக்கு அறிவளிக்காவிட்டாலும் அடக்கமாவது அருள்வாயாக, ஆண்டவனே!' என்று பாரத மக்கள் பிரார்த்தனை செய்வது தவிர வேறு வழியில்லை!

சமீபத்தில் சண்டிகர் நகரத்தில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸில் நேருஜி, சுதந்திரக் கட்சியைப்பற்றிப் பேசியிருக்கிறார். அதன் கொள்கைகள் தமக்குப் புரியவில்லை என்கிறார். புரியாவிட்டால் அது அவருடைய குறையே தவிரக் கட்சிக் கொள்கைகளின் குறையல்ல. அவை மிகத் தெளிவாக இருக்கின்றன. அவற்றைப் பற்றிக் குழந்தைகளும் புரிந்து கொள்ளும் வகையில் விளக்கப்பட்டு விட்டன! ஆனால் நேருஜி சுதந்திரக் கட்சிக் கொள்கைகளை அந்தக் கட்சியிலுள்ள மக்களை வைத்து, அவர்களைப்பற்றித் தமக்குள்ள அபிப்பிராயங்களைக் கொண்டு புரிந்து கொள்ளப் பார்க்கிறார். சுதந்திரக் கட்சியிலுள்ளவர்கள் ஒவ்வொருவர் மீதும் நேருஜிக்கு வெறுப்பு. அதனால் சுதந்திரக் கட்சியின் கொள்கைகள் மீதும் வெறுப்பு. வெறுப்புடன் படித்தால் எதுதான் புரியும்?

'பல ரகமான மக்கள் சேர்ந்த கட்சி சுதந்திரக் கட்சி' என்று நேருஜி பரிகாசமாகக் குறிப்பிடுகிறார். நமது தேசம் எப்படிப்பட்டது? பலப்பல மொழிகள் பேசும் மக்கள், பலப்பல பழக்க வழக்கங்கள் கொண்ட மக்கள் வாழும் தேசம். இந்த நாட்டில் உண்டாக்கப்படும் கட்சியில் பலவகை மக்கள் இருப்பது தானே இயல்பு? அதனால் நேருஜி சுதந்திரக் கட்சியைப் பற்றிப் பரிகாசமாகச் சொன்ன வார்த்தைகள் உண்மையிலேயே பாராட்டுரைகளாகும்!

ஆனால் ஒரே மாதிரியான மனோபாவம் கொண்ட ஒரு கும்பல் இந்தப் பரந்த தேசத்தை ஆளுவது இந்த நாட்டுக்குச் சிறிதும் நல்லதல்ல.


அன்று
காந்தி மகான் கற்பித்த பாடம்
"நீங்கள் இருவரும் ஒருவருக்கொருவர் உதவிக் கொண்டு அன்போடு வாழுங்கள்"
பணக்காரர்


இன்று
காங்கிரஸ் செய்வதென்ன?
காங்கிரஸ்
பணக்காரர்
ஏழை


பிரதமர் நேரு, இந்தியாவை வளரும் குழந்தையுடன் ஒப்பிட்டு, குழந்தை வளர வளர உடைகளும் மாற வேண்டியதுதான் என்றார்!
ஆ! நீ எவ்வளவு அழகாக இருக்கிறாய்!
சுதந்திர இந்தியா
சோஷலிஸ பாணி


"ஏய்! நீ எழுந்திருந்து போய், மகாநாட்டுக்கு வா"
பிரதமர் நேரு, சீன இந்திய எல்லையை விட்டு அகன்ற பிறகே எல்லைப் பிரச்னை பற்றிப் பேச்சு வார்த்தைகள் நடத்த முடியும் என்று சீனாவுக்கு எழுதியிருக்கிறார்!
இந்திய எல்லை

சுதந்திரக் கட்சியானது காப்புத் தர வேண்டிய சந்தர்ப்பத்தில் காப்புத் தருவதை மறக்கவில்லை. அபரிமிதமான லாபம் முதலாளிகள் சம்பாதிப்பதைக் கட்டுப்படுத்தவும் மறக்கவில்லை. தொழில் துறையில் போட்டி யிருந்தால் அபரிமித லாபம் சம்பாதிக்க முடியாது. முதலாளிகள் உற்பத்தி செய்யும் பண்டங்களின் விலை ஏற்றத்தைப் போட்டி கட்டுப்படுத்தும். ஆகவே, சுதந்திரக் கட்சி தொழில்களில் போட்டி மனப்பான்மை வளர வேண்டும் என்று விரும்புகிறது. போட்டியினால் விலை ஏற்றமும், கொள்ளை லாபமும் தடைபடும். அப்படித் தடுக்க முடியவில்லை என்றால் சர்க்கார் நுழைய வேண்டும் என்று கருதுகிறது. ஆகவே, சுதந்திரக் கட்சி, பண்டித நேரு நினைப்பது போல் ஆலை முதலாளிகள் மனம் போன போக்கில் போவதற்காக ஏற்படுத்தப்பட்டதல்ல. தனி மனிதர்களின் உரிமைகளைப் பறித்துத் தன் மனம்போன போக்கில் சர்க்கார் செல்வதைத் தடுக்க ஏற்படுத்தப்பட்டது. சர்க்கார், வர்த்தகத்திலும், விநியோகத்திலும் நுழைந்து, திறமையற்ற உத்தியோகஸ்தர் படையிடம் இவ்வேலைகளை ஒப்படைத்து மக்கள் வாழ்வைக் கொடுமைப்படுத்தி வருவதைத் தடுக்க இச் சுதந்திரக் கட்சி முனைந்திருக்கிறது. ஆளும் கட்சி, தனக்கு உதவியவர்களை மறக்க முடியாது. ஆகவே, வாழ்க்கையின் முக்கியமான அம்சங்களில் சர்க்கார் தலையிட்டால் அந்தச் சர்க்கார் தன் கட்சியைச் சேர்ந்தவர்களுக்கு உதவத்தான் முற்படும். அதனால் மக்களிடையே பாரபட்சம் காட்டப்படும். இந்தக் கொடுமைகளைத் தடுப்பதுதான் சுதந்திரக் கட்சியின் லட்சியம்.

பாரதப் பிரதமர் நேருஜிக்கு மேல்நாட்டு நவீனங்களிலுள்ள மோகம் யாவரும் அறிந்ததே. அதனால் சுதந்திரக் கட்சி பரம்பரை முறைகளில் நம்பிக்கை தெரிவிப்பதைக் கண்டிக்கிறார்.

ஒரு முறை, ஒரு பழக்கம், ஒரு சம்பிரதாயம் பண்டை நெடுங்காலமாக வந்திருக்கிறது என்றால் அது அத்தனை காலமாக மக்களுக்குப் பயனளித்து வந்திருக்கிறது என்பதுதான் பொருள். பழைய முறை என்ற உடனேயே உபயோகமற்ற முறை என்று சொன்ன முடியாது! ஆகவே பழைய முறைகளிலும் சம்பிரதாயங்களிலும் பண்பாட்டிலும் நம்பிக்கை கொள்வதில் தவறில்லை.

நவீன முறை என்று சொல்லி, சர்க்கார் தொழில் துறைகளிலும் வர்த்தகத் துறையிலும் நுழைந்து செய்த காரியங்கள் யாவும் படுதோல்வியடைந்திருக்கின்றன. மக்களுக்குச் சொல்லொணுக் கஷ்டங்களை அளித்திருக்கின்றன. வரி செலுத்துவோரின் பணம் ஏராளமாக விரயமாகியிருக்கிறது! முடிவாக, ஜனநாயக தத்துவத்துக்கே முற்றும் மாறுபட்ட முறையில் இயங்கி வருகின்றன!

இதுதான் இருபதாம் நூற்றாண்டின் முற்போக்குக் கொள்கைகளைக் கடைப்பிடித்த இலட்சணம். இது மட்டுமா? இன்னொரு விஷயமும் குறிப்பிட வேண்டும்.

விஞ்ஞானத் துறையிலும் இயந்திர வசதித் துறையிலும் பெரிதும் முன்னேறியுள்ள நாடுகளெல்லாம், அணுசக்தி இயந்திர சாலையை வைக்கத் தயங்குகின்றன. ஏனெனில் அதற்கு வேண்டிய பணச் செலவு அபரிமிதமானது. ஒரு முன்னேற்றத்தையும் காணுமல், சமீபத்தில் சுதந்திரமடைந்துள்ள ஏழைப் பாரத நாட்டில் அணுசக்தி உற்பத்திச் சாலையாம்! இது ஒன்று போதும் ஒழுங்கும் சீரியுமற்ற திட்டங்கள் மூலம் நமது செல்வம் எப்படி விரயமாக்கப்படுகின்றது என்பதை எடுத்துக் காட்டுவதற்கு! இதற்குக் காரணம் அர்த்தமற்ற மேனுட்டு மோகம்! ஆகவே சுதந்திரக் கட்சியைப்பற்றி நேருஜியினால் புரிந்துகொள்ள முடியவில்லை என்றால் அது அவருடைய குற்றமே தவிரக் கட்சியின் குற்றமல்ல!

ஒரு விஷயத்தை நினைவில் கொள்ளவேண்டும். எந்தத் திட்டம் வெற்றியடைய வேண்டும் என்றாலும் தனி மனிதனுடைய குணம் சத்தியத்திலும் தர்மத்திலும் நேர்மையிலும் நிலைபெற்றிருக்க வேண்டும். நமது திட்டங்கள், நமது தார்மீக உணர்ச்சியை உறிஞ்சி எடுத்து விடுவதாக இருக்கின்றனவே தவிர வளர்ப்பனவாக இல்லை. இது போதாதென்று நமது பிரதமரும், காங்கிரஸ் அக்கிராசனுதிபதி ஸ்ரீமதி இந்திரா காந்தியும் வகுப்புத் துவேஷம் காங்கிரஸ் திட்டங்களில் நிச்சயமாக இருந்தே தீரும் என்று வேறு பேசுகிறார்கள்! இந்த நிலையில் நம் நாட்டில் நேர்மை வளர்வதற்கு வழியையே காணும்.

இத்தருணத்தில், சுதந்திரக் கட்சி, எல்லா வகுப்பு மக்களிடையும் அன்பும் நல்லுறவும் நிலவ வேண்டும் என்று போதிக்கிறது. தார்மீகப் பண்பு வளர வேண்டும், பாரதப் பண்பாடு காப்பாற்றப்பட வேண்டும் என்று கூறுகிறது. நல்லுறவு நிலையிலிருந்து கிடைக்கும் பயன் சிறிதேயாயினும் மிக மிக உயர்ந்ததாகும். வகுப்புத் துவேஷத்தை வளர்த்துப் பெறப்படும் நிலையில்லா லாபத்தில் தீமையே தவிர நன்மையில்லை. இதை அனைவரும் உணர வேண்டும்.

## வட ஆற்காடு மாவட்டச் சிறுகதைப் போட்டி

ரூ. 200 முதற் பரிசு பெற்ற கதை 18-10-59 கல்கி இதழில் பிரசுரமாகிறது

பரிசு பெற்றவர்: திரு கே. காளிதாசன் (அன்பன்)

c/o திரு ஜெ. எச். சுவாமி, கோத்தகிரி கிளப். கோத்தகிரி (நீலகிரி)

ரூ. 100 இரண்டாவது பரிசு பெற்ற கதை 25-10-59 கல்கி இதழில் வெளியாகிறது

பரிசு பெற்றவர்: கோமதி நாகராஜன்

c/o ஸ்ரீமதி கே. ஞானம்பாள், 4, கோயில் தெரு திண்டுக்கல்

# சகலகலாவல்லி

கலைத் தொடர்புடைய எந்தக் காரியங்களையும் கலைமகளை வழிபட்டுத் தொடங்குவது தமிழ்நாட்டு மரபு. கலைக்கு உரிய கலைமகளே தொழிலுக்கும் உரிய தெய்வம் என்பதைக் கண்டு, கலைமகள் விழாவன்றே தொழிலாளர் ஆயுத பூஜை செய்யும் வழக்கத்தை ஏற்படுத்திக் கலைக்கும் தொழிலுக்கும் சமத்துவத்தை ஏற்படுத்திய நமது முன்னேரின் பண்பை என்னவென்பது! தொண்டர் தம் உள்ளத்தில் பெருகும் கலைத்தமிழ்த் தீம்பாலமுதம் என்று குமரகுருபரர் கலைமகளை உருவகம் செய்து கூறினர். சகலகலாவல்லி, நாமகள், சொல்லின் கிழத்தி என்றெல்லாம் அழகும், கருத்தும் இணைந்த பல பெயர்களால் கலைமகளைத் தமிழ்ப்புலவர்கள் அழைத்திருக்கிறார்கள்.

'படிக நிறமும் பவழச் செவ்வாயும்
கடிகமழ்பூந் தாமரைபோற் கையும்—
துடியிடையும்,
அல்லும் பகலும் அனவரதமும் துதித்தாற்
கல்லும் சொல்லாதோ கவி'—

என்று கலைமகளை வியந்து கவியுள்ளத்தின் தனிமை உணர்வெல்லாம் பொங்கப் பொங்கப் பாடியுள்ளார் கம்பர். ஞான விழி நோக்கும், நற்றாமரை மேலமர்ந்த இருக்கோலமும், வீணைக்கர மலர்களும், வெள்ளையன்னமுமாகக் காட்சியளிக்கும் சகலகலாவல்லியே இவ்விதழின் அட்டையை அலங்கரிக்கிறாள்.

# ஆகாச வெடி!

*''சென்னை மதுரைக்கிடையே துரித கூட்ஸ் வண்டிகள் விடப்படும்.''* —செய்தி

''அப்படியானல் நாம் இப்போது பிரயாணம் செய்வது எந்த வண்டியில்?'' என்று விழிக்கிறார் ஒரு பிரயாணி.

✽

*''மந்திரிகள், பிரமுகர்கள் தங்கும் மாளிகைகள் கொண்ட ஒரு பகுதி சிம்லா நகரில் பூமியில் அழுங்கி வருகிறது.''* —செய்தி

இந்தச் சந்தர்ப்பத்தை உபயோகித்து, மற்றவர்களை விடத் தாங்கள் தாழ்ந்து வாழ்வதாக நமது மந்திரிகள் சொல்லிக் கொள்ளலாமே!

✽

*''அரசாங்க எதிர்ப்பாளர்கள் மீது சுடச் சொன்னல் ஈராக் ராணுவம் சுட மறுக்கிறது.''* —செய்தி

துப்பாக்கி இருக்கும் தைரியத்தினல்தான் அது சுடமாட்டேன் என்கிறது போலும்!

✽

*''கேரளத் தேர்தல் கூட்டு, சில கட்சிகளுக்குக் கசப்புத் தட்டுகிறது.''* —தலைப்பு

கசப்புக்கு இடமில்லாமல், அவியலாகச் செய்து பார்க்கலாமே.

✽

*''மாஜி கேரள முதன் மந்திரி ஸ்ரீ ஈ. எம். எஸ்.ஸுக்குத் தங்கத்தினல் செய்யப்பட்ட அரிவாளும், ஒரு சுத்தியும் பம்பாயில் அளிக்கப் பட்டது.''* —செய்தி

சாணை பிடிப்பவனிடம் அவர் இந்த அரிவாளை மட்டும் நீட்டுவதற்குக் கொடுக்க மாட்டார் என்பது நிச்சயம்!

*''சென்னையில் சீக்கிரத்திலேயே மலிவான கார்கள் உற்பத்தி செய்யப் போகிறார்கள்!''* —தினசரி

''மலிவாயிருந்தால், தம்முடன்கூட ஒருவரை அழைத்துச் செல்லலாமா?'' என்று கேட்கிறார் இரவல் சவாரி நண்பர்.

✽

*''காய்கறி உணவு உண்போர் மகாநாட்டை ஜனாதிபதி சென்னையில் டிஸம்பர் மாதம் ஆரம்பித்து வைப்பார்.''* —செய்தி

வருட இறுதியில், இதைவிட ருசிகரமான மகாநாடு இருக்க முடியாது!

✽

*''சட்டசபையில் ரகளை செய்த பி. சோ. அங்கத்தினரை வெளியே இழுத்துச் சென்ற போது பக்கத்திலிருந்த காங்கிரஸ் அங்கத்தினரை அவர் கட்டிக் கொள்ள முயன்றார்.''* —மத்தியப் பிரதேச செய்தி

இதனல் அவர் கட்டிக்கொள்ள முயன்றது அபவாதமே தவிர வேறென்ன?

✽

*''சிறு வயதில் வீட்டில் நான் மண்டுவாகவே விளங்கினேன்!''* —மத்திய மந்திரி கிருஷ்ணப்பா

இருந்தாலும் அதைச் சிறு குழந்தை போல் இப்படி வெளியிடுவதா?

✽

*''சர்க்கார் பொது மரத்தைக் கரியாக்கிய தாகக் கரி வியாபாரிக்குத் தண்டனை.''* —திருவண்ணாமலைச் செய்தி

சர்க்கார் மட்டும் பணத்தைக் கரியாக்கலாமா என்று அவர் நினைத்திருக்கலாம்.

# காலத்தை வெல்லும் வீரர்!

சில மாதங்களுக்கு முன்பு ராஜாஜி பெங்களூருக்குத் தாம் படித்த கல்லூரியின் நூற்றாண்டு விழா வைபவத்துக்காகப் போயிருந்தார். அப்போது அவர் சர்க்கார் விருந்தினர் மாளிகையில் தங்கியிருந்தார்.

ஒரு முதுபெருங் கிழவர் காலை 9-55 மணிக்கு ராஜாஜியைப் பார்க்கவந்தார். வந்தவர் முன் ஹாலில் இருந்த நாற்காலியில் அமர்ந்து விட்டார்.

''ராஜாஜியை நீங்கள் பார்க்க வரலாமே!'' என்றேன்.

''இல்லை, ராஜாஜி என்னைப் பார்க்கக் குறிப்பிட்ட நேரம் பத்து மணிதான். பத்து மணியாவதற்கு இன்னும் ஐந்து நிமிடங்கள் இருக்கின்றன. பத்து மணியாகட்டும், வருகிறேன்!'' என்றார்.

பத்து மணி என்றால் பத்து மணிக்குத்தான் ராஜாஜியைப் பார்ப்பேன் என்று பிடிவாதம் செய்த மனிதர் யார் தெரிகிறதா? அவர்தான் ஸர் எம். விஸ்வேஸ்வரய்யா அவர்கள்.

இச்சம்பவம் ஒன்றே அவர் காலத்தைப் பற்றி எத்தகைய கருத்துக் கொண்டவர் என்பதை விளக்கும். காலத்தில் மட்டுமல்ல இவ்வளவு சத்தம் — உடையிலும் அவர் அப்படி!

கோட், டை, டர்பன், கால் சராய், பூட்ஸ் அணிந்து இன்றும் தொண்ணூறு அறுபது வருஷங்களுக்கு முன்பு எப்படி உடை அணிந்து வந்தாரோ அப்படியே அணிந்து கொள்கிறார்.

ஸர் எம். விஸ்வேஸ்வரய்யா பாரதம் தந்த அரும் புதல்வர்களில் ஒருவர். பாரத நாடு தொழில் துறையில் முன்னேற வேண்டும். அதற்குரிய திட்டங்கள் வகுக்க வேண்டும் என்று பாரதம் சுதந்திரம் பெறுவதற்கு முன்பே கனவு கண்டவர். மைசூரில் கிருஷ்ணராஜ ஸாகரம் என்ற மாபெரும் அணையைக் கட்டிக் காவேரி நீரைத் தேக்கி நெல் வளம் கொழிக்கச் செய்தவர். இது தவிர, எத்தனையோ தொழிற் கூடங்கள் ஏற்படுத்தி மைசூர் ராஜ்யத்தை முன்னணிக்குக் கொண்டு வந்த பெரியார்!

ஸர் எம். விஸ்வேஸ்வரய்யா அவர்களுக்கு வயது 99 ஆயினும் தினம் தவறாமல் இரண்டு மணி நேரம் ஒரு அன்பரை வைத்துப் பத்திரிகைகளைப் படிக்கச் சொல்லிக் கேட்கிறார். இவ்வாறு அவர் இன்றைய உலக விவகாரங்களுடன் தொடர்பு கொள்கிறார்.



ஸர் எம். விஸ்வேஸ்வரய்யா

இப்பெரியவருக்குச் சென்ற மாதம் 15-ம் தேதி 99-வது பிறந்தநாள் வந்தது. அன்று, பெங்களூர் பிரமுகர்களும், அகில இந்திய பொருள் உற்பத்தியாளர் சங்கத்தினரும் சேர்ந்து அவரது 99வது பிறந்த நாளைச் சிறப்பாகக் கொண்டாடித் தங்கள் வணக்கங்களைச் செலுத்திக் கொண்டார்கள்.

அந்தக் கூட்டத்தில் ஸர் எம். வி. அவர்கள் இன்றுள்ள நாட்டின் நிலைமையைப் பற்றி ஆணித்தரமாகப் பல கருத்துக்களை வெளியிட்டிருக்கிறார். அவற்றில் ஒன்றைப் பாருங்கள்:

நாற்பத்தாறு ஆண்டுகளுக்குமுன்பு, மைசூர் ராஜ்ய வர்த்தகப் பெருமக்களின் நலன்களை மனத்தில் கொண்டு ஸர் எம். விஸ்வேஸ்வரய்யா அவர்கள் அளித்த ஊக்கத்தின்மீது பாங்க் ஆப் மைசூர் ஆரம்பிக்கப்பட்டது. அந்த பாங்கை இப்பொழுது ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவுடன் இணைக்க முயற்சிகள் நடைபெற்று வருகின்றன.

''மிக உபயோககரமான இந்த ஸ்தாபனத்தை ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவுடன் இணைத்து அதன் சொந்தத் தன்மையை இழக்கச் செய்யப் பார்க்கிறார்கள் என்பதைக் கேள்விப்பட என் உள்ளம் நோகிறது. இது இப்பிரதேச வர்த்தக சமூகத்துக்குப்பெரும் தீங்கு விளைக்கும் என்று சென்ற ஆண்டே சொன்னேன். ஆதலால் இப்பகுதி வர்த்தகர்களின் கோரிக்கை உரிய அதிகாரிகள் காதில் ஏறும் என்றும் இம் முயற்சி கைவிடப்படும் என்றும் எண்ணுகிறேன்'' என்று பேசுகிறார்.

இது ஒன்று போதும், சர்க்காரின் இன்றையப் போக்கு ஸர் எம். வி. அவர்களுக்கு எவ்வளவு வருத்தத்தைத் தருகிறது என்பதை எடுத்துக் காட்ட.

அதனால்தான் நான் சென்றவாரம் ஸர் எம். விஸ்வேஸ்வரய்யா அவர்களைச் சுதந்திரக் கட்சியைப் பற்றித் தங்கள் அபிப்பிராயம் என்ன என்று கேட்டபோது, அதைத் தாம் முழுமனத்துடன் வரவேற்பதாகக் கூறினார்.

திட்டங்களைப் பற்றிப் பேச்சு வந்தது. ஸர் எம். வி. அவர்கள் ஆதிநாளிலிருந்தே திட்டங்கள் போட்டுத்தான் தொழில் துறையில் முன்னேற முடியும் என்ற கருத்துக் கொண்டவர். அதனால் ஸர் எம். வி. ''இந்தத் திட்டங்களை நான் வரவேற்கிறேன். ஆனால் ஊழல்களும் லஞ்சமும் மலிவதைச் சர்க்கார் கடுமையாகத் தடுக்கவேண்டும்'' என்றார். இன்றுள்ள நிலையில் ஸர் எம். வி. போன்றவர்கள் அதிகாரத்தில் இருந்தால் அல்லவா இவ்வூழல்களைத் தடுக்க முடியும்?

தமது நீண்ட வாழ்வின் ரகசியம், குறித்த வேளையில் உண்பது: ஆறு மணி அல்லது ஏழு மணி நேரம் தூங்குவது, நான் தவறாமல் உலாவச் செல்வது ஆகியவையே என்கிறார்.

அடுத்த செப்டம்பர் 15-ம் தேதி அவரது நூறாவது பிறந்த நாளாகும். மூதுமை அவரைப் பணியவைக்க முயலும்போது, ஸ்ரீ விஸ்வேஸ்வரய்யா அதனைத் திரமாக எதிர்த்து நின்று வெற்றி கொண்டு வீரராகக் காட்சியளிக்கிறார். அவர் இன்னும் பல்லாண்டுகள் வாழ்ந்து வருவாராக. —எஸ். வி. எஸ்.

- ஒவ்வொரு மனிதனும் தன் மனைவி எப்படி இருக்க வேண்டும் என விரும்புகிறான் என்பதைக் காட்டும் கவிஞனின் கற்பனை ஓவியம்.
- எழில் மிகுந்த — உற்சாகமூட்டக் கூடிய — மனத்தைக் கவரக் கூடியதுமான அற்புத நடனங்கள்.
- ஒரு சாம்ராஜ்யத்திற்கே சலாம் விட்ட கவிஞனின் இன்பக் கனவை இன்னிசையில் உருவாக்கும் சிறந்த சித்திரம்.

**சென்னையில் அக்டோபர் 2-ந் தேதி முதல்**

**மிட்லண்ட்** (சமசீதோஷ்ண நிலை கொண்டது) ✱ **பிராட்வே** (அழகு மிகுந்த அகலமான வெண் திரை)

## வி. சாந்தாராமின்

# நவ்ரங்



டைரக்ஷன்: V. சாந்தாராம்

இசையமைப்பு: C. ராமச்சந்திரா

பாடல்கள்: பாரத்வியாஸ்

✱

நடிகர்கள்:

**சந்தியா & மகிபால்**

இப்பொழுது கீழ்க்கண்ட இடங்களில் நடைபெறுகின்றன

பிரபாத் - ஹைதராபாத் ★ பாரடைஸ் - செகந்திராபாத்

9-10-59 முதல் கீழ்க்கண்ட இடங்களிலும் நடைபெறும்

அலங்கார் - பெங்களூர் ★ பிரபா - மைசூர்

ராஜகுமாரி - விஜயவாடா ★ லீலாமஹால் - விசாகப்பட்டினம்

டிஸ்ட்ரிபியூட்டர்கள்

## அலங்கார் சித்ரா பிரைவேட் லிமிடெட்

பெங்களூர் & செகந்திராபாத்

சப் டிஸ்ட்ரிபியூட்டர்கள்: விஜயா பிக்சர்ஸ், விஜயவாடா & குண்டக்கல்

# இலங்கைப் பிரதமரின் பரிதாப முடிவு

கொழும்பு, செப்டம்பர் 30உ.

இலங்கையின் சரித்திரத்தில் என்றுமே ஏற்பட்டிராத ஒரு அதிர்ச்சியான சம்பவம் இவ்வாரம் நடைபெற்று நாட்டுமக்கள் அனைவரும் கலங்கிப்போய் ஆழ்ந்த துக்கத்தில் மூழ்கியிருக்கிறார்கள். நாட்டின் பிரதம மந்திரி திரு பண்டாரநாயகா கொலை வெறியன் ஒருவனது குண்டுக்குப் பலியாகிக் குரூரமான மரணத்தை எய்தினார். அவரது முடிவு இப்படி ஏற்படுமென்று அவரது கொடிய அரசியல் எதிரிகள்கூட எதிர்பார்க்கவில்லை. சென்ற வெள்ளிக்கிழமை காலை பிரதமர் பண்டாரநாயகா தமது வழக்கமான வேலைகளைச் சற்றுச் சீக்கிரமாகவே முடித்துக் கொண்டு இந்தியாவிலிருந்து வந்திருக்கும் பிரபல ஆயுர்வேத நிபுணரான டாக்டர் சிவசர்மாவுக்கு அன்பளிப்பாக வழங்க ஏதாவது நல்ல பொருளைத் தேர்ந்தெடுத்து வைக்குமாறு தமது மனைவி ஸ்ரீமதி ஸ்ரீமாவிடம் சொல்லிவிட்டு பார்லிமெண்ட் கூட்டத்துக்குப் போவதற்காக மாடியிலிருந்து கீழே இறங்கி வந்தார். அனுதினமும் அவர் வெளியே புறப்படும் சமயத்தில் அவரைக் காணப் புத்த பிக்ஷுக்கள் யாராவது வந்து பிரதமர் வீட்டு வராந்தாவில் காத்திருப்பது வழக்கம். அதேபோல் அன்றும் இரண்டு பிக்ஷுக்கள் பிரதமர் வீட்டு வராந்தாவில் காத்திருந்தார்கள். பிரதமர் வழக்கம் போல் அவர்களிடம் வந்து கரம் குவித்து வணங்கினார். ஒரு பிக்ஷு பிரதமரிடம் ஒரு மகஜரைக் கொடுத்தார். பிரதமர் அதைக் கையில் வாங்கிக் கொண்டு கவனிப்பதாகச் சொல்லிய பின்னர் பார்லிமெண்டுக் கூட்டத்துக்குப் போகத் திரும்பியபொழுது மற்றொரு பிக்ஷு தமது மஞ்சள் அங்கியில் மறைத்து வைத்திருந்த துப்பாக்கியை எடுத்துப் பிரதமரை நோக்கி மளமளவென்று ஆறு தடவைகள் சுட்டார். குண்டினால் தாக்கப்பட்ட பிரதமர் தமது மனைவியின் பெயரைக் கூவி உள்ளே ஓடியும் அந்த பிக்ஷு விடாமல் அவரைத் துரத்தி மறுபடியும் துப்பாக்கிப் பிரயோகம் செய்தார். இரண்டு மூன்று குண்டுகள் பிரதமரின் வயிற்றிலும் விலாப்புறத்திலும் பாய்ந்து இரத்தம் பிரவாகமாகப் பெருக்கெடுத்து ஓடத் தலைப்பட்டது. இதற்கிடையில் அங்குபெருங் கூட்டம் கூடிவிடவே, துப்பாக்கிப் பிரயோகம் செய்த கொலைஞன் ஓட்டம்பிடிக்க யத்தனித்தான். நல்லவேளையாக, காவலுக் கிருந்து கொண்டிருந்த ஒரு கான்ஸ்டபிள் துப்பாக்கிப் பிரயோகம் செய்து அந்தப் பிக்ஷுவைக் காயப்படுத்தித் தடுத்து நிறுத்தினான்.

படுகாயமடைந்த பிரதமரைக் காப்பாற்ற மனித முயற்சியினால் சாத்தியமானதெல்லாம் செய்து பார்க்கப்பட்டது. ஆனால் அவை ஒன்றும் பயன்படாமல் மறுநாள் காலை பிரதமர் பண்டாரநாயகா காலமாகி விட்டார். சுட்டவர் ஒரு புத்த பிக்ஷுவாக இருந்தும்கூட, சில விஷமிகள் பல மாதிரியான வதந்திகளைக் கிளப்பி விட்டார்கள். ஆயினும் போலீஸ் இலாகா தலைவர் அந்த வதந்திகளைப் பலமாக உடன் மறுத்து, சுட்டவர் புத்த பிக்ஷுதான் என்பதை உறுதிப்படுத்தியதுடன் அவரது படத்தையும் பத்திரிகைகள் வெளியிட்டது பொய் வதந்திகளை முளையிலேயே கிள்ளி யெறிந்துவிட்டது.

இலங்கை அரசியல் கட்சித் தலைவர்களுக்கிடையில் எவ்வளவோ கடுமையான கருத்து வேற்றுமைகள் இருந்து வந்ததுண்டு. ஒருவரையொருவர் காரசாரமாகப் பார்லிமெண்டில் தாக்கிப் பேசுவதுண்டு. ஆனால் அரசியல் பிரச்னைகளை ஜனநாயகப் பார்லிமெண்டரி முறைப்படிப் பேசித் தீர்த்துக் கொள்ளுவதுதான் இலங்கையில் இதுவரையில் இருந்து வந்த வழக்கமே தவிர, பலாத்காரத்தைக் கையாள இந்நாட்டில் யாரும் கனவில்கூடக் கருதியதில்லை. அந்த நிலைமையில் கொலைஞன் குண்டுக்கு நாட்டின் பிரதமர் பலியாகியிருப்பது எல்லா அரசியல் கட்சிகளுக்கும் ஒரு புதிய கவலையை இப்பொழுது உண்டு பண்ணியிருக்கிறது. உள்ளூர்ப் பத்திரிகையொன்று சுட்டிக்காட்டியிருப்பதைப் போல் இப்படு கொலைக்குச் சொந்தத் தகராறு காரணமாக இருக்கும் என்று தோன்றவில்லை. கொலை செய்யக்கூடிய அளவுக்குப் பிரதமர் பண்டாரநாயகா எவருடனும் தகராறு வைத்துக் கொள்ளக் கூடியவரல்ல. இதில் அரசியல் காரணம் ஏதாவது இருக்குமோ என்ற பலரும் கருதுகின்றனர். எதற்கும் இவ்விஷயத்தை வெகு சீக்கிரமாகவும் ஆதியோடந்தமாகவும் புலன் விசாரணை செய்து உண்மையான காரணத்தைக் கண்டுபிடிக்க வேண்டுமென்றும், குற்றவாளிகளைக் கடுமையான தண்டனைக்கு உட்படுத்த வேண்டுமென்றும் எல்லாப் பத்திரிகைகளும் வலியுறுத்தி யிருக்கின்றன.



இலங்கைப் பிரதமர் திரு பண்டாரநாயகாவின் இறுதி யாத்திரை



"எப்பொழுதும் உன் விரோதிகளை மன்னித்து விடு...... முக்கியமாக அவர்கள் உன்னைவிடப் பலசாலிகளாக இருந்தால்!"

சபாஷ்! தமாஷ்!



இரவில் மாடு முட்டவே டாக்டரிடம் சென்றார்.

டாக்டர்: இது நான் பார்க்கிற நேரமில்லை என்பது உமக்குத்தான் தெரியுமே!

வந்தவர்: எனக்குத் தெரியும்; ஆனால் மாட்டுக்குத் தெரியாதே, சார்!

பிரதமர் கொலையுண்ட சம்பவம் இலங்கைக்கு ஒரு பெரிய படிப்பினையைப் போதித்திருப்பதாகவும் பொதுவாகக் கருதப்படுகிறது. சென்ற மூன்று ஆண்டுகளாக நாட்டின் பல துறைகளிலும் அராஜகம் தலைவிரித்தாடி வருகிறது. சட்டத்துக்கு மதிப்பில்லாமற் போயிருப்பதுடன் பலாத்காரச் சம்பவங்கள் தலைவிரித்தாடுகின்றன. கொலை, கொள்ளை பெண் கடத்துதல் முதலியவை தண்ணீர் பட்ட பாடாக இருந்து வருகிறது. இன, மொழி, சமய, வகுப்புத் துவேஷங்கள் மலிந்துள்ளன. இந்த நிலைமை எதில் கொண்டு போய்விடுமென்பதை இவ்வார பயங்கரச் சம்பவம் எல்லோருக்கும் அறிவுறுத்திக் காட்டுவதாக இருக்கிறது. சகல வகுப்பினர்களுக்கிடையிலும் நல்லுறவை நிலைநிறுத்தப் புதிய அரசாங்கம் சாத்தியமானதைச் செய்ய வேண்டுமென்பதையும் எல்லாப் பத்திரிகைகளும் இடித்துக் காட்டியிருக்கின்றன.

## புதிய பிரதமர்

இலங்கையின் புதிய பிரதம மந்திரியாகியிருக்கும் திரு விஜயானந்த தஹநாயக ஏற்கனவே கல்வி மந்திரியாக இருந்தவர். சென்ற மூன்று ஆண்டுகளுக்கு இடையில் திரு பண்டாரநாயகாவுடன் நெருங்கிப் பழகியவர். இடைக்காலத்தில் பிரதம மந்திரி பதவி காலியானால் சபை முதல்வராக இருப்பவர் பிரதம மந்திரி பதவியை ஏற்பதென்பது ஒரு சம்பிரதாயம். சபை முதல்வராக இருந்த திரு ஸி. பி. டி. ஸில்வா என்பவர் கடுமையான சுகவீனமடைந்து சிகிச்சைபெறுவதற்காகச் சில தினங்களுக்கு முன்தான் லண்டனுக்குச் சென்றார். அவருடைய ஸ்தானத்தில் திரு தஹநாயகா நியமிக்கப்பட்டார். திரு டி. ஸில்வா சுகவீனமடையா விட்டால் அவரே பிரதம மந்திரியாகியிருக்கவேண்டும். ஆனால் அந்த அதிர்ஷ்டம் திரு தஹநாயகாவுக்கு இருந்தது.

## ஸ்ரீமதி வன்னியசிங்கம்

காலஞ்சென்ற தமிழரசுக் கட்சித் தலைவர் திரு வன்னியசிங்கத்தின் கோப்பாய் தொகுதி பார்லிமென்ட் ஸ்தானத்துக்கு வெகு விரைவில் ஒரு உப தேர்தல் நடைபெற இருக்கிறது. அத்தேர்தலில் காலஞ்சென்றவரது மனைவியாரான திருமதி வன்னியசிங்கத்தையே அபேட்சகராக நிறுத்துவதென்று தமிழரசுக் கட்சி தீர்மானித்திருக்கிறது. தமிழரசுக் கட்சியின் சத்தியாக்கிரகப் போராட்டத்திலெல்லாம் ஸ்ரீமதி வன்னியசிங்கமும் பங்கு கொண்டிருக்கிறார். இத்தேர்தல் தமிழர்களிடையில் மிகமிக அதிகச் செல்வாக்கு பெற்றிருக்கும் அரசியல் கட்சி எது என்பதை வெளிப்படுத்தும். தமிழரசுக் கட்சியுடன் அக்கட்சியை எதிர்க்கும் மற்றும் பல அரசியல் கட்சிகள் போட்டியிடத் தீர்மானித்திருக்கின்றன.

—ரஜனி



குறைந்த விலையில் நடுத்தர மக்களுக்கு உபயோகமாகும்படி நம் நாட்டில் எந்தமாதிரி மோட்டார் உற்பத்தி செய்யப்பட வேண்டுமென்பதை ஸ்ரீ ஜா அவர்கள் தலைமையில் ஒரு கமிட்டி இப்போது ஆராய்ந்து வருகிறது. மோட்டார் தொழிலில் ஈடுபட்டுள்ள தொழில் ஸ்தாபனங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சிறிய மோட்டாரை மாதிரிக்காகத் தயாரித்திருக்கின்றது. சென்னை நகருக்கு அடுத்த வண்டலூரில் இயங்கும் ஸ்டாண்டர்ட் மோட்டார் தொழிற்சாலையும் "ஸ்டான் மொபைல்" என்று ஒரு சிறிய மோட்டாரை இதற்காகத் தயாரித்திருக்கிறது.

# சுதந்திரக் கட்சியின் அடிப்படைக் கொள்கைகள்

[பம்பாயில் ஆகஸ்டு 1, 2 தேதிகளில் நடைபெற்ற அகில இந்திய சுதந்திரக் கட்சி மகாநாட்டில் கீழ்க்கண்ட கொள்கைகள் ஏகமனதாக அங்கீகரிக்கப்பட்டன.]

1. ஜாதி, மதம், தொழில், அரசியல் சார்பு ஆகிய எவ்வித வித்தியாசமும் பாராட்டாமல் எல்லா மக்களுக்கும் நீதியும், சமமான வேலை வாய்ப்புகளும் அளிப்பது சுதந்திரக் கட்சியின் உறுதியான கொள்கை.

2. மக்களின் முன்னேற்றம், க்ஷேமம், சந்தோஷம் யாவும் தனி மனிதனின் ஊக்கம், உற்சாகம் முயற்சியையே பொறுத்திருக்கின்றன என்று இக் கட்சி கருதுகிறது. இக்கட்சி தனி மனிதனின் அதிகபட்ச சுதந்திரத்துக்கும் சர்க்காரின் குறைந்தபட்ச தலையீட்டுக்கும் பாடுபட உறுதி கொண்டிருக்கிறது. ஆனால் சமுதாயத்தில் பலவீனமாக உள்ளவர்கள் மற்றவர்களால் இன்னல்களுக்கு ஆளாகும் போது அவற்றைத் தடுக்கவும், பாதுகாப்பு அளிக்கவும் சர்க்கார் கடமைப்பட்டிருக்கிறது என்பதையும் அங்கீகரித்தே மேற்கண்ட முடிவுக்கு வந்திருக்கிறது. அத்துடன் தனி நபர்களின் முயற்சிகள் பலனளிக்கக்கூடிய சூழ்நிலையைச் சர்க்கார் உருவாக்க வேண்டும் என்று கருதுகிறது. ஆகவே, தற்போதைய அரசாங்கம் கடைப்பிடித்து வரும் சர்க்கார் தலையீட்டுக் கொள்கையை இக்கட்சி எதிர்க்கிறது.

3. மக்களின் இயற்கைப் பண்பு, தார்மீகப் பண்பு. பிறருக்கு உதவவேண்டும் என்ற ஆசை அவர்களுக்கு இயல்பாகவே இருக்கிறது. அதில் திருப்தியும் பெருமையும் அடைகின்றனர். இப் பண்பு நம் மக்களிடையே பரம்பரை பரம்பரையாக வந்தது. இந்த அரிய பண்பை வளர்த்துப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். அதற்குப் பதில் தேர்தல் வோட்டுக்களின் பலத்தின் மூலம் பதவிக்கு வந்துள்ள அரசாங்கம் மக்களின்மேல் நம்பிக்கையின்றி, அவர்களைப் பலாத்காரப்படுத்தும் சட்ட திட்டங்களை இயற்றி அவர்களை அரசாங்க அதிகார வர்க்கத்தின் கீழ் மிதிபடும் அடிமைகளாக்கிவிடுகின்றன. அதனால் இக் கட்சி மேற்கண்ட அரசியல் முறையை எதிர்த்து, காந்தி மகானால் கூறப்பட்ட ஒப்புரவு முறையை ஆதரிக்கிறது.

4. மக்களிடம் நம்பிக்கை வைத்துச் சர்க்காரின் திட்டங்கள் அமைய வேண்டும் என்று இக்கட்சி கருதுகிறது. அப்படிக்கின்றி, சர்க்கார் தன் அதிகாரத் திலேயே நம்பிக்கை கொண்டு ஒரு வகுப்பாருக்கும் இன்னொரு வகுப்பாருக்கும் பூசலையும் பொறாமையும் வளர்த்தல், சொத்துக்களைப் பறிமுதல் செய்தல், ஒப்பந்தங்களை அலட்சியப்படுத்துதல், தனி மனிதர்களின் உரிமைகளையும், சுதந்திரங்களையும் பறித்துவிட்டுச் சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு அதிகாரங்கள் அதிகமாக வழங்குதல் ஆகிய காரியங்கள் செய்வதை இந்தக் கட்சி எதிர்க்கிறது.

5. பாரத நாட்டுப் பண்பாட்டில் உள்ள நல்ல அம்சங்களைக் காப்பாற்றவும், தார்மீகப் பண்பை வளர்க்கவும் நிலைநாட்டவும் எல்லா வித முயற்சிகளும் எடுக்க இக்கட்சி பாடுபடும். வாழ்க்கையின் பண்பும் சிறப்பும் எப்படி இருக்க வேண்டும் என்பதைக் கருத்தில் கொள்ளாமல், வாழ்க்கைத்தரம் உயர வேண்டும் என்று சொல்லி வெறும் லோகாயதக் கொள்கைக்கே முக்கியத்துவம் அளிக்கும் திட்டங்களை ஒதுக்கவும் இந்தக் கட்சி உறுதிகொள்கிறது. வாழ்க்கைத்தரம் என்பது செலவு செய்யும் ரூபாயின் மொத்தத் தொகை மட்டுமல்ல.

6. இன்றைய சர்க்கார் கடைப்பிடித்து வரும் கொள்கையின் காரணமாக எங்கும் எதிலும் நம்பிக்கையின்மை நிலவுவதாலும், இனிமேல் கடைப்பிடிக்கப் போவதாகச் சொல்லும் பலவிதத் திட்டங்களின் காரணமாகவும், நிலத்திலும், ஆலைகளிலும், கடைகள் வைத்தும் பணி செய்யும் எல்லா மக்களிடையேயும் ஊக்கமும் உற்சாகமும் வறண்டு விட்டன. பரவலாகக் காணப்படும் இந்த நிச்சயமற்ற நிலைமையைப் போக்க முயற்சிகள் எடுக்க வேண்டும் என்று இந்தக் கட்சி உறுதி கொள்கிறது. அரசியல் நிர்ணயச் சட்டத்தில் சொத்து, வியாபாரம், தொழில் சம்பந்தமாக அளித்துள்ள உரிமைகளைக் காப்பாற்ற வேண்டும். பொது நலனைக் கருதிச் சர்க்கார் எடுத்துக்கொள்ள நேரும் சொத்துக்களுக்கு நியாயமான

நஷ்ட ஈடு கொடுக்க வேண்டும். இப்படிச் செய்தாலேதான் தனி நபர்கள் தொழில் துறையில் ஈடுபட உற்சாகமும் ஊக்கமும் பெறுவார்கள் என்று இந்தக் கட்சி உறுதியாக நம்புகிறது.

7. தேசீய வளர்ச்சிக்காக வகுக்கப்படும் திட்டங்களில் மக்களின் அடிப் படைத் தேவையான உணவு, நீர், வீடு, உடை ஆகியவற்றுக்கு முதன்மையிடம் அளிக்கப்பட வேண்டும் என்று இந்தக் கட்சி கருதுகிறது.

8. ஒவ்வொரு பிரஜையும் தனது குழந்தைகளை அவரவர்களுடைய சம்பிர தாயப்படி அரசாங்க உத்தரவுகளால் கட்டுப்படுத்தப்படாத சுதந்திரச் சூழ்நிலையில் கல்வியறிவு புகட்ட உரிமை உண்டு என்று இந்தக் கட்சி நம்புகிறது. அத்தகைய கல்விக்கு வேறு எவ்வித பாகுபாடுமின்றிச் சர்க்கார் வசதியளிக்க வேண்டும் என்றும் நம்புகிறது.

9. இன்றைய முக்கியமான தேவை அதிக உணவு உற்பத்தி என்பது இக்கட்சியின் உறுதி. தம் நிலத்தைத் தாமே பார்த்து வரும் சொந்தக்காரர்கள் தங்கள் நிலத்திலிருந்து அதிக விளைச்சலைக் காண்பதில் அக்கறைகொண்டுள்ளார்கள். அவர்கள் மூலமாகத்தான் உணவு உற்பத்தியைப் பெருக்க முடியும் என்று இந்தக் கட்சி கருதுகிறது.

உற்பத்தியைப் பெருக்குவதற்குக் கிராம வாழ்க்கையின் சௌஜன்யத்தைக் கெடுக்காத வகையில் முயற்சிகள் எடுத்துக்கொள்ள வேண்டும். அவர்களிடையே உற்சாகம் உண்டாக்கி, பொருளுதவியும் அளித்து, தீவிர விவசாய முறைகளைக் கடைப்பிடிக்கச் செய்ய வேண்டும். இன்றுள்ள நில உரிமையிலோ விவசாய மேற்பார்வையிலோ எத்தகைய மாற்றமும் செய்து குழப்பக் கூடாது என்று கருதுகிறது.

நீர்ப்பாசன வசதி, உர உதவி, கருவிகள் உதவி, கடன் உதவி, விற்பதற்கு உதவி ஆகியவை இன்று அளிக்கப்படுவதைவிட, இன்னும் நல்ல பயனளிக்கும் வகையில் கொடுக்கத் திட்டம் வகுக்க வேண்டும் என்று இக் கட்சி கருதுகிறது.

விவசாயத்துக்கு எல்லாவித உதவி அளிக்க வேண்டும் என்பது இக்கட்சியின் கொள்கை. ஆனால் தனி நபரின் நில உரிமையை வெறும் காகித உரிமைக்குக் கொண்டு வந்து, பொறுப்பைப் பலபேருக்கு ஒப்புவித்து, ஏனோதானோ என்று நிலத்தில் அக்கறையின்றி இருந்துவிடச் செய்து, அதன் காரணமாக விவசாயி யையும் அவன் குடும்பத்தினரையும் விவசாயத்திலேயே உற்சாகம் இழக்கச் செய்து, விளைவைக் குறைத்து, சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் மேற்பார்வைக்கு விவசாயத்தை விடக்கூடிய கூட்டுப் பண்ணை முறையை இக் கட்சி பலமாக எதிர்க் கிறது. கிராமப் பொருளாதாரத்தை அதிகார வர்க்க மேற்பார்வைக்கும் கூட்டுப் பண்ணைக்கும் விடுவதை வன்மையாக எதிர்க்கிறது.

கிராம மக்களின் தேவைகளுக்குப் போதிய கவனம் செலுத்தப்படவில்லை என்ற குறை கிராம மக்களிடையே இருப்பதை இக்கட்சி உணர்கிறது. அவர்கள் வாழ்க்கை நிலை உயரவேண்டும் என்று இக்கட்சி கருதுகிறது. இன்றுள்ள அவர்கள் வாழ்க்கை நிலையைவிட, அவர்கள் வாழ்க்கைத்தரம் உயர இடையூறாக உள்ளன வற்றை அகற்ற எல்லா முயற்சிகளும் எடுக்கவேண்டும். முக்கியமாக, மற்றப் பொருள்களின் விலைகளுக்குத் தகுந்தபடி உணவு தான்யங்களின் விலைகளையும் நியாயமான நிலையில் நிறுத்த முக்கியமாக முயற்சிகள் எடுத்து விவசாயிக்கு உதவி செய்ய வேண்டும் என்றும் இந்தக் கட்சி கருதுகிறது.

10. தொழில் துறையில் பொருள் உற்பத்தி பெருகுவதற்கும் தொழில்கள் விஸ்தரிப்பதற்கும் போட்டி முறையிலேயே ஊக்கத்துக்கு வேண்டிய அம்சங்கள் அடங்கியிருக்கின்றனவென்று கருதுகிறது. தொழிலாளர் நலனைப் பாதுகாப்ப தற்கும், கொள்ளை லாபம், அதிக விலையேற்றம், பங்குகள் மீது அதிக லாபம் வழங்குவது ஆகிய தீமைகளை ஒடுக்குவதற்கும் போட்டி முறையினால் முடியாத போதும், போட்டி முறை அனுஷ்டிக்க முடியாத தொழில்களிலும் சர்க்கார் தலையிட்டுத் தக்க பாதுகாப்புகள் அளிக்க வேண்டும் என்றும் இக்கட்சி கருதுகிறது.

தனி நபர்கள் நடத்தும் தொழில்களுக்கு உபரியாகவும், அவசியமாகவும் உள்ள கனரகத் தொழில்களை மட்டுமே சர்க்கார் மேற்கொள்ள வேண்டும். அதாவது

தனி நபர்களால் நடத்த முடியாத தொழில்களேயும், ரயில்வேக்கள் போன்ற வற்றையுமே சர்க்கார் ஏற்று நடத்த வேண்டும்.

சர்க்கார் வர்த்தகத் துறையில் நுழைவதையும், சுயேச்சையாக நடைபெறும் விநியோக முறைகளேக் கெடுப்பதையும் இக்கட்சி எதிர்க்கிறது. கண்ட்ரோல்களேப் புகுத்துவதையும் உத்தியோகஸ்தர்கள் வியாபாரத்தை நடத்துவதையும் இவற்றின் காரணமாக ஊழலும் பண விரயமும் ஏற்படுவதையும் எதிர்க்கிறது.

தொழில் துறையில் உற்பத்தியாளர் தங்கள் பண்டங்களே வாங்கும் மக்க ளுக்குத் திருப்தி யளிக்கும் வகையில் வேலேசெய்யவும், உபயோகிப்போர் தங்களுக்கு விருப்பமான உற்பத்தியாளரிடம் போகவும் பூரண சுதந்திரம் அளிக்கப்படவேண்டு மென்பது இக்கட்சியின் மிக முக்கியமான அடிப்படைக் கொள்கையாகும்.

11. இன்றைய சர்க்கார் எல்லாத் தொழில்களேயும் அரசாங்கமே மேற் கொள்ளவேண்டும் என்றதோர் கொள்கையைக் கடைப்பிடித்து வருவதால் சுதந்திர மாகத் தொழில் செய்து பிழைக்கும் கிராமத் தொழிலாளர்களும், தச்சன், கன்னுன் முதலிய கலேஞர்களும், சிறு வியாபாரிகளும் தங்கள் ஜீவனத்தை இழக்கும்படியான பேராபத்தில் இருக்கிருர்கள். அதனுல் இக்கட்சி கிராமத் தொழிலாளர்கள், கலேஞர்கள், சிறு வியாபாரிகள் இவர்களின் தொழில் சுதந்திரத்தைக் காப்பாற்ற இக்கட்சி உறுதி பூணுகிறது. இவர்கள் மிகவும் விரிவான முறையில், அதிக செல வில்லாமல் மக்களுக்கு அருந் தொண்டாற்றி வருகிருர்கள். அத் தொழில்களே அழித்து விடுவது தேசத்துக்குப் பெரிய நஷ்டமாகும். அதுமட்டுமின்றி அத் தொழில்கள் செய்து வந்தவர்களேயெல்லாம் வேலேயில்லாமல் திண்டாடும் கோஷ்டி யுடன் சேர்த்து, வேலேயில்லாத் திண்டாட்டப் பிரச்னேயை மிகப் பெரிய பிரச்னே யாக்கிவிடும் என்று இந்தக் கட்சி கூறுகிறது.

12. இக்கட்சி சர்க்கார் செலவு விஷயத்தில் சிக்கனம் கடைப்பிடிக்க வேண்டும் என்று வற்புறுத்துகிறது. கிராம — நகர மக்களின் நியாயமான வாழ் வைப் பாதிக்காத வகையில் வரித் திட்டம் அமைய வேண்டும் என்று இந்தக்கட்சி கருதுகிறது. அதே சமயம் சர்க்கார் நிர்வாகத்துக்கும் சர்க்கார் நடத்தும் சமூக நலப் பணி, பொருளாதாரத் துறைப்பணி ஆகியவற்றுக்குத் தேவைப்படும் அளவுக்கு வரி விதிக்கவேண்டியதுதான் என்று அங்கீகரித்தாலும் தனி நபர்கள் தொழில்களில் முதலீடு செய்ய முடியாதபடியும், பொதுமக்களிடம் தொழில் விஸ்தரிப்புக்கு அவசியமான மூலதனம் சேர முடியாதபடியும் கடுமையான வரிகள் போடக் கூடாது என்று இக்கட்சி கருதுகிறது.

13. இக்கட்சி கடுமையான வரித் திட்டங்களின் மீது நிர்மாணிக்கப்படும் முன்னேற்றத் திட்டங்களேயும், மிதமிஞ்சிய பற்ருக்குறை பட்ஜெட் சமர்ப்பிப் பதையும், தேசத்தின் கடன் அடைக்கும் சக்திக்கு மிஞ்சி வெளி நாடுகளிலிருந்து கடன் வாங்குவதையும் எதிர்க்கிறது.

14. பணவீக்கம் உண்டாக்கும் முறைகளேயும், சேமித்த பணம் முதலீடு செய்த பணம், நிரந்தரமாகக் குறிப்பிட்ட வருமானம் வரும் சொத்து ஆகியவற்றின் மதிப்பைக் குறைக்கும்படியாகவும், விலேவாசிகள் உயரும்படியாகவுமுள்ள காரியங்களே இக்கட்சி எதிர்க்கிறது. மேற்கூறிய காரியங்கள் எதிர்காலத்தில் ஏதோ ஒரு நாள் லாபம் உண்டாக்கலாம் என்ற நம்பிக்கையின் மீது செய்வதாகும். ஆனுல் இன்றைய மக்களுக்குத் தாங்க முடியாத இன்னல்களே விளேவித்து வருவதாகும். அதனுல் இக்காரியங்களே இக் கட்சி எதிர்க்கிறது.

15. இக்கட்சி சர்க்காரின் நிர்வாகச் செலவைக் கணிசமாகக் குறைக்க வேண்டும் என்று கருதுகிறது. சர்க்கார் உத்தியோகஸ்தர்களிடையே திறமையையும் ஒழுக்கத்தையும் வளர்க்கவேண்டும் என்று கருதுகிறது. தனி மனிதர்களும், தனி மனிதர்களின் ஸ்தாபனங்களும் திறமையாகச் செய்யக்கூடிய காரியங்களேச் சர்க்கார் அதிகாரிகளேச் செய்யச் சொல்வதையும், அதற்காக உத்தியோகஸ்தர்களேயும் அதிகாரிகளேயும் அதிகமாக நியமிப்பதையும் இக்கட்சி கண்டிக்கிறது. இப்படி அதிகார வர்க்கத்தை விரிவுபடுத்துவது தேசத்தின் செல்வத்தைப் பயனில்லாத வழியில் செலவழித்து வீணடிப்பதாகும்.

16. மத்திய சர்க்காரிடம் இருக்கும் ஆதிக்கத்தை ராஜ்ய சர்க்கார்களிடம் பரவலாகப் பிரித்து அளிப்பதன் மூலமே அரசாங்கம் மக்களுக்கு நல்ல சேவை

செய்ய முடியும் என்று இக்கட்சி கருதுகிறது. சமுதாய விரோதச் செயல்கள் எங்கேயாகிலும் தலையெடுத்தால் அவற்றைத் தடுப்பதிலும் அவற்றுக்குக் காரணமானவர்களைத் தண்டிப்பதிலும் அக்கறை செலுத்தினாலே தேசத்துக்குச் சிறந்த சேவை செய்ததாகும் என்று இக் கட்சி கருதுகிறது.

17. வாழ்க்கையில் எல்லாத் துறைகளில் ஈடுபட்டிருப்பவர்களுக்கும் நிரந்தரமான வேலை வாய்ப்புக்கள் ஏற்படுத்தித்தர வேண்டும் என்று இக்கட்சி கருதுகிறது. தேசிய செல்வத்தை வளர்க்கும் வகையிலும், வேலையில்லாத் திண்டாட்டத்தைக் குறைக்கும் வகையிலும் எல்லாவித தொழில்களும் வளர்ச்சி பெறும் திட்டம் வகுக்க வேண்டும் என்று கருதுகிறது. நாட்டில் கனரகத் தொழில்கள், மக்கள் வாங்கி உபயோகிக்கும் சில்லறைச் சாமான்களைத் தயாரிக்கும் தொழில்கள், விவசாயவேலைக்கு உதவுபடியாக இருக்கும் கிராமக் கைத்தொழில்கள், இவையாவும் வளர்ச்சி பெற வேண்டும் என்று இக்கட்சி கருதுகிறது.

18. இக்கட்சி, வயலில், ஆலைகளில், கடைகளில் வேலை செய்யும் தொழிலாளர்கள் சிப்பந்திகளுக்கு நியாயமானஊதியம் கிடைக்கவேண்டும் என்றகொள்கையையுடையது. உற்பத்திக்குத் தகுந்தபடி ஊதியமும் பெருக வேண்டும். தொழிலாளர்கள் ஒன்று சேர்ந்து சங்கம் அமைத்துத் தங்கள் நியாய உரிமைகளைக் கேட்டுப் பெறும் உரிமையுண்டு என்று இக்கட்சி கருதுகிறது. முதலாளிகளுக்கும், தொழிலாளிகளுக்கும் இடையே தகராறுகள் ஏற்பட்டால் இருபாலரிடையே நல்லுறவை ஏற்படுத்த வேண்டும் என்றும் இக்கட்சி கருதுகிறது.

19. எவ்வித பட்சபாதமுமின்றி நியாயமாகவும், யோக்கியமாகவும் வேலை செய்யும் அதிகாரிகள் தங்கள் கடமையிலிருந்து வழுவி வேலை செய்யும் வகையில் அரசியல் செல்வாக்கை நிர்வாகத் துறையில் அரசியல் கட்சியாளர்கள் புகுத்துவதை இந்தக் கட்சி எதிர்க்கிறது.

சட்டபூர்வமான ஆட்சி நிலைநிறுத்தவும், நீதிமன்றங்களின் சுதந்திரத்தை நிலைநாட்டுவதுமே இக் கட்சியின் நோக்கம். நமது நீதி மன்றங்கள் அரசியல் நிர்ணயச் சட்டம் அவைகளுக்கு அளித்துள்ள பூரண அதிகாரங்களைச் செலுத்தி வேலை செய்ய வேண்டும் என்று இக்கட்சி கருதுகிறது.

20. இக்கட்சி எல்லா முக்கியமான விஷயங்களிலும், காந்தி மகானின் உபதேசங்களை மனத்தில் கொண்டு நடக்கும். பொதுமக்களிடமும், சத்தியத்திலும், அஹிம்சையிலும் பூரண நம்பிக்கை வைத்து இயங்கும்.

21. கட்சியின் அடிப்படைக் கொள்கைகள் தவிர்த்து, மற்ற விஷயங்களில் அங்கத்தினர்களுக்கு அபிப்பிராய சுதந்திரம் ஒவ்வொரு அரசியல் கட்சியும் வழங்கினால் ஜனநாயகத்துக்கு நல்ல சேவை செய்ததாகும் என்று இக்கட்சி கருதுகிறது. ஆகவே, மேலே குறிப்பிட்ட கொள்கைகளுக்குப் புறம்பான எல்லா விஷயங்களிலும் சுதந்திரக் கட்சி தனது அங்கத்தினர்களுக்குப் பூரண சுதந்திரம் அளிக்கிறது.

**நவராத்திரி தீபாவளி விற்பனை!**

தீபாவளி பண்டிகை வரை கீழ்க்கண்ட எமது பிராஞ்சுகளில் காஞ்சீபுரம் விலைக்கே பட்டுச் சேலைகள் விற்பனை செய்யப்படும்.

பீர்டிவாலா பில்டிங்ஸ், மாதுங்கா (C. Ry.) பம்பாய் -19

டெலிபோன்: சென. 88041

## மகாலக்ஷ்மி ஸ்டோர்ஸ்

(கொள்ளேகாலம் பட்டு ஜவுளி வியாபாரம்)

84, பாண்டி பஜார்-தியாகராய நகர் சென்னை-17.

6/90, W.E.A. கரோல்பாக், நியூ டில்லி-5. வடக்கு மாட வீதி, மயிலாப்பூர், சென்னை-4

---

உங்கள் குழந்தையையும் குதூகல மடையச் செய்யும்

# ஸ்பென்ஸர்ஸ் கிரைப் ஸிரப்




குழந்தைகளுக்கு வரும் கோளாறு களைப் போக்கும் சிறந்த மருந்து.

வயிற்றை இறுக்கிப் பிடித்துத் துன் புறுத்தும் நோயின் சின்னங்கள், வாயு பிரிதல், உப்புசம், சிறிய வலிப்புகள், அதிகமான புளிப்புத்தட்டல், மந்தம், ஆகியவைகளை விரைவில் சாந்தப் படுத்துகிறது. பல் முளைக்கும் பருவத் துக்கு சிறப்பாக உபயோகிக்கத்தக்க தென்று சிபார்சு செய்யப்படுகிறது.



சென்னை (புதுச்சேரி உள்பட), கோலம் & மைசூர் இராஜ்யங்களுக்குப் பூரண விநியோகஸ்தர்கள்

**டிரக் (ஹ்) ஹவுஸ்**

தேர் நிலையம், சேலம்–1

கிளைகள்: சென்னை & பெங்களூர்

---

### நெசவாசிரியர் மற்றும் இதர பயிற்சிகள்

1. சர்க்கார் அங்கீகாரம் பெற்ற பயிற்சிப்பள்ளிக்கு *S.S.L.C. / E.S.L.C. / III* பாரம் பாஸ் செய்த மாணவ மாணவிகள் தேவை. ஹாஸ்டல் வசதி. ஸ்காலர் ஷிப் உண்டு. மாணவர் பொறுப்பு, மனு பாரம் பெற ரூ. 2/- *M. O.* அனுப்பவும்.

2. பெண்களுக்கும் தாய்மார்களுக்கும் எம்பிராய்டரி, டிரஸ் மேக்கிங், நீடில் ஒர்க்ஸ் முதலியவைகளுக்குச் சர்க்கார் பரீட்சைக்கான வகுப்பு குரோம்பேட்டையில் நடைபெறுகிறது. 5வது வகுப்புவரை இலவச ஆரம்பக் கல்வியும், நர்ஸரி வகுப்பும் ஒய்வு நேர, காலை அல்லது மாலைகளில் தமிழ் வித்துவான், *B. O. L.*, கர்நாடக சங்கீதம், *E.S.L.C.* முதலிய வகுப்புகளும் நடைபெறுகின்றன. விவரத்திற்கு ரூ. 1-13 *M. O.* அனுப்பவும். பணம் அனுப்பாதவர்கள் கடிதங்கள் கவனிக்கப்பட மாட்டாது.

**கோகுலம் முறை கிராம நல சங்கம்** (ரிஜிஸ்டர்டு)

11-B, எல்டாம்ஸ் ரோடு, தேனாம்பேட்டை, சென்னை -18

# ஒரு நல்ல யோசனை

○●○

**சங்கர் :** நமஸ்காரம். ஏது, ஒரு வாரமாக உங்களைக் கண்ணிலேயே காணோமே! ரொம்ப 'பிஸி' போலிருக்கிறது!

**ரமணி :** ஆமாம்! கொஞ்சம் 'பிஸி'தான். காந்தி ஜெயந்தி கதர் வாரம் எல்லாம் இந்த வருஷம் பிரபலமா கொண்டாடினோமே அதுலே கொஞ்சம் நானும் என்னாலான பங்கு எடுத்துக் கொண்டேன்.

**சங்கர் :** ஆமாம், ஸார்! இந்த வருஷம் எங்கே பார்த்தாலும் ஒரே கதர் முழக்கமா இருந்ததே! நான்கூட கதர் பொருட்காட்சி எல்லாம் போய்ப் பார்த்தேன்! என்னாலே நம்பவே முடியலே ஸார்! கதரிலே இவ்வளவு நல்ல ரகங்கள் எல்லாம் வந்திருக்கிறது என்று!

**ரமணி :** போகிறது! இப்போதாவது தெரிந்ததோ இல்லையோ! சந்தோஷம்! உங்களைப் போலவே இன்னும் பலபேர் இப்படித்தான், கதர் என்றால் என்னமோ முரட்டுத் துணி, அப்படி இப்படின்னு, முப்பது வருஷத்துக்கு முன்னால் சொன்னதையே சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் கண்களையும் மனத்தையும் திறந்து விடத்தான் இந்த மாதிரி பொருட்காட்சி யெல்லாம் வைத்து எல்லோருக்கும் கதரில் எவ்வளவு நேர்த்தியான வகைக் கதர் இருக்கிறது என்பதை எடுத்துக் காட்டுகிறோம்—அது சரி, நீங்கள் கதர் இவ்வளவு நன்றாக இருக்கிறதே என்று அதிசயப்படுவதில் மட்டும் பிரயோசனமில்லை. இந்தத் தீபாவளியை உங்கள் வீட்டில் எல்லோரும் கதர் தீபாவளி யாகக் கொண்டாடுங்கள்! என்ன?

**சங்கர் :** என்னைப் பொறுத்தவரையில் சரி தான், ஸார்! நான் ஒரு நாலு முழ வேஷ்டி, அங்கவஸ்திரம் வாங்கிப் போட்டுக் கொண்டு விடுவேன். என் 'ஒய்ஃப்' ஜரிகைப் பட்டுப் புடவை அல்லவா கேட்கிறாள்? குழந்தைகள் இப்ப இந்த 'மாடர்ன்' பொம்மை போட்ட சொக்காய் அல்லவா கேட்கிறார்கள்!

**ரமணி :** என்ன சங்கர்! கதர் பொருட் காட்சி பார்த்தேன் என்கிறீர்கள். அந்தக் கதர்ப் பட்டு ஜரிகைப் புடவை யெல்லாம் நீங்க பார்க்கவில்லையா? 'டிஷ்யூ' புடவை கூட கதரிலே இருக்கிறதே ஸார்! குழந்தை களுக்கு விதவிதமாகக் கண்ணைப் பறிக்கிற கலர்களிலே பொம்மை போட்ட துணி எல்லாம் வந்திருக்கிறதே! 'ரெடிமேட்' கூட புதுப்புது தினுசிலே இருக்கிறதே!

**சங்கர் :** நிஜமாகவா? அந்தப் பொருட் காட்சியிலே அவ்வளவு கண்ணைப் பறிக்கிற மாதிரி வைத்திருந்தார்களா? எனக்கே புரிய வில்லை. ஆமாம்! ஜரிகைப் பட்டுப் புடவை, குழந்தைகளுக்கு நல்ல பொம்மைத் துணி எல்லாம் எங்கே கிடைக்கிறது?

**ரமணி :** நீங்கள் பத்திரிகைகள் கூடச் சரி யாகப் படிக்கிறதில்லை போலிருக்கிறது! எல்லா **அத்தாட்சி பெற்ற** கதர்க் கடைகளி லேயும் கிடைக்கும். சென்னை அரசாங்கம் சென்னை நகரம், மற்ற முக்கிய இடங்களிலெல் லாம் காதி விற்பனை நிலையங்கள் வைத்திருக் கிறார்கள். உங்களுக்கு வேண்டிய கதர் தினுசுகள், கதர்ப் பட்டாடைகள் எல்லாம் அங்கே கிடைக்குமே!

**சங்கர் :** கதர் விலை கொஞ்சம் அதிகம்—இல்லையா!

**ரமணி :** நீங்கள் பத்திரிகையே படிப்ப தில்லை போலிருக்கிறது. உங்களைப்போல் இப்படிச் சொல்லுகிறவர்களுக்காகத்தான், காந்தி ஜெயந்தி, தீபாவளியை முன்னிட்டு இப்போது ரூபாய்க்கு **ஐந்தணா** 'ரிபேட்' கிடைக்கிறதே! மூன்றணா 'ரிபேட்' கதர் சில்லறை விற்பனையில் உண்டு, தெரியுமோ இல்லையோ? அதற்கு மேல் இரண்டணா விசேஷ 'ரிபேட்' கொடுக்கிறார்களே! தயங் காமல் போய் இப்பொழுதே வாங்குங்கள். தாமதித்து விட்டுப் பிறகு எல்லாம் காலியான தும் ஏமாந்து போகப் போகிறீர்கள்!

**சங்கர் :** நாளைக்கே என் மனைவி குழந் தைகள் எல்லோரையும் அழைத்துக் கொண்டு பக்கத்தில் உள்ள கதர்க் கடைக்குப் போகிறேன்.

**ரமணி :** சங்கர்ஜி! ஒரு எச்சரிக்கை! 'கதர்' என்று பேரைச் சொல்லி போலிச் சரக்கெல்லாம் இப்போது வருகிறது! அதனால் கதர் கிராமத் தொழில் கமிஷன் **அத்தாட்சி பெற்ற** கதர் ஸ்தாபனங்களிலேயே வாங்குங்கள்.

**சங்கர் :** அதுதான் சென்னை அரசாங்க காதி விற்பனை நிலையம் இருக்கிறதே. அங்கேயே போகிறேன்.

**ரமணி :** சந்தோஷம்! போய்வருகிறேன்!

அத்தாட்சி பெற்ற **சென்னை அரசாங்க காதி விற்பனை நிலையங்கள் :**

சென்னை நகரில் ஜார்ஜ் டவுன், தியாகராய நகர், திருவல்லிக்கேணி, மவுண்ட் ரோடு, மயிலாப்பூர், புரசைவாக்கம்.

மற்றும் கீழ்க்கண்ட ஊர்களிலும் உள்ளன :

மதுரை, திருப்பூர், கோயமுத்தூர், கும்ப கோணம், திருச்சிராப்பள்ளி, கடலூர், கோடைக்கானல், உதகமண்டலம், காரைக் குடி, சேலம், வேலூர், நாகர்கோயில், காஞ்சீபுரம், திருநெல்வேலி, விழுப்புரம், சிதம்பரம், விருதுநகர், திருவண்ணாமலை, தூத்துக்குடி, நாகப்பட்டினம், பொள்ளாச்சி, கரூர், ஈரோடு, கிருஷ்ணகிரி, டி. கல்லுப்பட்டி.

ADVT.







## தண்டையார்பேட்டையில்

தொழிலாளர்களும், மத்தியதர வகுப்பினரும் பெரும்பான்மையாக வாழும் தண்டையார் பேட்டையில் சென்ற மாதம் 30-ம் தேதி மாலை சுதந்திரக் கட்சிக் கூட்டம் நடைபெற்றது. இக் கூட்டத்துக்கு அப் பேட்டை வாசிகளும், வட சென்னையின் மற்றப் பேட்டைவாசிகளும் பெருந் திரளாகக் கூடி ராஜாஜியின் பேச்சைக் கேட்டனர்.

1. ராஜாஜி பேசுகிறார். 2. தண்டையார் பேட்டையின் முக்கிய பிரமுகரான திரு வீரஜின்னு செட்டியார் சுதந்திரக் கட்சிக்குத் தமது பூரண ஆதரவு அளிக்கிறார். 3. பழைய நகரசபை கவுன்ஸிலரும், ஏழை மக்களுக்குத் தென் சென்னையில் நல்ல தொண்டுகள் புரிந்தவருமான ஸ்ரீ கே. எம். சுப்பிரமணியம் அவர்கள் பேசுகிறார். 4. கூட்டத்தின் ஒரு பகுதி.



# கல்கி

# மாவட்டச் சிறுகதைப் போட்டி

**முதற் பரிசு ரூ. 200** **இரண்டாவது பரிசு ரூ. 100**

★

★ ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு மாவட்டத்தை இலக்காகக் கொண்டு இந்தச் சிறுகதைப் போட்டி நடத்தப்படும். ஒவ்வொரு மாதமும் தேர்ந்தெடுக்கப்படும் கதைகளில் இரண்டு கதைகளுக்குப் பரிசு வழங்கப்படும்.

★ தமிழ்நாட்டின் மாவட்டங்களான கன்யாகுமரி, திருநெல்வேலி, மதுரை, ராமநாதபுரம், திருச்சி, தஞ்சை, தென் ஆற்காடு, செங்கற் பட்டு, வட ஆற்காடு, சென்னை, சேலம், கோயமுத்தூர், நீலகிரி ஆகிய பதின்மூன்று மாவட்டங்கள் இந்தப் போட்டியில் இடம் பெறும்.

★ எல்லா மாவட்டங்களைப் பற்றிய கதைப் போட்டிகளிலும் எல்லாத் தமிழ் எழுத்தாளர்களும் கலந்து கொள்ளலாம்.

★ கதைகள் பண்பட்ட தமிழ் நடையில் அந்தந்த மாவட்டத்தைப் பின்புலமாகக் கொண்டு, முழுவதும் அந்தப் பிரதேச மணம் கமழ்வ தாக இருப்பதோடு சொந்தக் கற்பனையாகவும் இருக்க வேண்டும்.

### ஐந்தாவது போட்டி

## திருச்சி மாவட்டம்

### விதிகள்

1. கதைகள் திருச்சி மாவட்டத்தின் சூழ்நிலை எல்லாவகையிலும் அமையுமாறு எழுதப்பட வேண்டும். திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த ஊர்கள், பழக்க வழக்கம், காவிரி நதிதீர வாழ்வு போன்ற வற்றைச் சித்திரிக்கும் கதைகளே இப்போட்டியில் இடம் பெறும்.
2. கதைகள் 'கல்கி' இதழின் ஐந்து பக்கங்களுக்குக் குறையாமல் ஏழு பக்கங்களுக்கு மேற்போகாமல் இருக்க வேண்டும்.
3. ஒரு எழுத்தாளரே ஒன்றுக்கு மேற்பட்டும் கதைகள் அனுப்பலாம்.
4. பரிசுக் கதைகளைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் "கல்கி" ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.
5. பரிசு பெறாத கதைகளில் பிரசுரிக்கத் தகுதியுடையவை, உரிய சன்மானம் அளித்துப் பிரசுரத்துக்கு ஏற்றுக் கொள்ளப்படும்.
6. பிரசுரத்துக்கு ஏற்றுக் கொள்ளப்படாத கதைகளைத் திரும்பப் பெற, கதைகளோடு உரிய தபால் பில்லைகள் இணைக்க வேண்டும்.
7. கதைகள் சம்பந்தமாக எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.
8. திருச்சி மாவட்டப் போட்டிக்கான கதைகள் நவம்பர் 30-ந் தேதிக்குள் 'கல்கி' காரியாலயத்துக்கு வந்துசேர வேண்டும்.
9. போட்டி முடிவு டிசம்பர் மாத இறுதிக்குள் அறிவிக்கப்படும்.
10. கதைகளின் உறைகளிலும், தலைப்புக்களிலும் "கல்கி திருச்சி மாவட்டச் சிறுகதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டும்.

குறிப்பு:—திருச்சி மாவட்டத்தின் சிறுகதைப் போட்டி முடிவு வெளியாகும் இதழிலேயே அடுத்த மாவட்டச் சிறுகதைப் போட்டிக்குரிய விவரங்கள் அறிவிக்கப்படும்.

**ஆசிரியர், கல்கி**

# விவசாயியும் கூட்டுப் பண்ணையும்

கே. கிருஷ்ணமூர்த்தி

ஆறு நிறைய தண்ணீர் போனாலும் நாய் நக்கித்தான் குடிக்க வேண்டும். அது போலத்தான் விவசாயியினுடைய இன்றைய நிலையும் மாறுமலே இருந்து வருகிறது. கூட்டுப் பண்ணை கொண்டு வருவதில் யாதொரு கட்டுப்பாடோ, நிர்ப்பந்தமோ இருக்காது என்றும் இஷ்டப்பட்டவர்கள் மட்டுமே சேரலாமென்றும் மந்திரிகள் பிரசாரம் செய்து வருகிறார்கள். தற்கால ரீதியில் ''கட்டாயம்'', ''நிர்ப்பந்தம்,'' ஆகிய வார்த்தைகளுக்கு விளக்கம் தேவை. ஏனென்றால் சமீப காலத்தில் சிறு சேமிப்புத் திட்டத்தை அமுல் நடத்தியபோது ஒவ்வொரு ஜில்லாவும் ஒரு கணிசமான தொகையைச் சேமிப்பு செய்ய வேண்டுமென்று திட்டம் போட்டு ஜில்லா அதிகாரிகளும் தாலூக்கா அதிகாரிகளும் ஊர்ஊராகச் சென்று, பொதுஜனங்களைச் சந்தித்து, கட்டாயத்தின் பேரில்தான் வசூல் செய்தார்கள். தாங்களாகவே விரும்பிச் சேமிப்பு நிதிக்குக் கொடுத்ததாகத் தெரியவில்லை.

அவ்வாறே கூட்டுப் பண்ணைக்கும் கட்டாயம், நிர்ப்பந்தம் இவை இருக்காது என்ற போதிலும் கண்டிப்பாக அவை இருந்தே தீரும் என்பதில் ஐயமில்லை.

கூட்டுப் பண்ணை அமுலுக்கு வருவது என்று வைத்துக் கொள்ளுவோம். எவ்வளவுக்கெவ்வளவு அதிகம் விஸ்தீரணம் உள்ள நிலங்கள் ஒன்றுபடுகின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு நலம் என்று தெரிகிறது. ஏனெனில் அப்பொழுதுதான் டிராக்டர் முதலிய யந்திர சாதனங்களை உபயோகிக்க முடியும். அப்படிச் செய்வதில் வரப்புகளை அப்புறப்படுத்தாமல் செய்ய முடியாது. ஏற்கனவே ஒன்பது நபர்கள் ஒவ்வொருவருடைய 10 ஏக்கரா நிலத்தையும் கொடுத்துப் பண்ணையில் சேருகிறார்கள் என்று வைத்துக் கொள்ளுவோம். இந்த நிலங்களின் மத்தியிலுள்ள ஒருவன் கூட்டுப்பண்ணை அதிகாரிகள் வரப்பை அழித்துப் பண்ணைச் சாகுபடி ஆரம்பித்துக் கொஞ்ச காலம் கழித்துப் பண்ணையிலிருந்து விலக விரும்பினால் என்ன ஆகும் என்று கொஞ்சம் யோசிக்க வேண்டும். அவர் விலகுவதற்குத் தடை ஏதும் போட முடியாது. விலகினவருக்கு அவருடைய நிலத்தைத் திருப்பிக் கொடுப்பார்களா, அல்லது அதே விஸ்தீரணத்துக்கு வேறு நிலம் கொடுப்பார்களா என்று தெரியவில்லை. பண்ணையின் எல்லைப் புறத்திலுள்ள ஏதோ நிலத்தைக் கொடுத்தால் அவர் எப்படி ஏற்றுக் கொள்ளுவார்? எனவே நடைமுறையில் இவ்விதமான பல சங்கடங்கள் ஏற்படுமென்பதில் ஐயம் இல்லை.

தற்காலத்தில் ஸ்தலத்தில் வசிக்காத நிலச் சொந்தக்காரர்களின் துயரம்தான் சொல்லொணாதது. உத்தியோகங்களில் இருந்து கொண்டு இம்மாதிரி நிலச்சுவான்தார்கள் எப்படியோ நிலத்தை விற்காமல் தங்கள் பிதுரார்ஜித சொத்துக்களைக் காப்பாற்றி வருகிறார்கள். அனேகமாக இவர்கள் நிலத்தைக் குத்தகைக்கு அல்லது வாரத்துக்கு விட்டிருக்கிறார்கள். ஏற்கனவே பண்ணையாள் சட்டத்தினாலும் நியாய வாரச் சட்டத்தினாலும் பாதிக்கப் பட்டிருக்கிறார்கள். குத்தகைதாரர்களும் சுய முயற்சியினால் கஷ்டப்பட்டு எவ்வளவுக்கெவ்வளவு நிலத்தில் சம்பாதிக்க முடியுமோ அவ்வளவுக்கவ்வளவு சம்பாதித்துக் கொண்டு ஒரு சிறுபகுதியைத்தான் சொந்தக்காரர்களுக்குக் குத்தகையாக அளிக்கிறார்கள். எனவே அந்தக் குத்தகைக்காரனும் அதிகமாகவே விளைபொருளை உற்பத்தி செய்ய முயலுவான். அப்பொழுதுதான் அவனுக்கு அதிக ஆதாயம் கிடைக்கும். சொந்தக்காரர்களுக்கும் சிறிது கிடைக்கும். அப்படிப்பட்டவர்கள் தங்கள் நிலங்களைக் கூட்டுப் பண்ணையில் சேர்த்து விட்டால் இப்போது கிடைத்துக் கொண்டிருக்கும் அவ்வளவு வருமானமாவது கிடைக்குமா என்பது நிச்சயமில்லை. அவ்வாறே குத்தகைக்காரரும் வருமானத்தை இழக்க நேரிடும். காரணம் கூட்டுப் பண்ணையில் செலவு அதிகம். சொந்தப் பண்ணையில் எவ்வளவு சிக்கனமாக அதிக லாபம் அடையமுடியுமோ, அவ்வளவு சிக்கனமாகக் கூட்டுப் பண்ணையில் பயிர்செய்ய முடியாது.

கூட்டுப் பண்ணையில் சேர்ந்தால் விதை உரம் மற்றும் இதர பயிர்ச் செலவுகளுக்கு மான்யம் அளிக்கப்படுமென்று கூறப்படுகிறது. ஆனால் விவசாயிகளின் தேவைகள் இவ்வளவுதானா? விவசாயிகளுக்குக் குடும்பச் செலவும் உண்டு. தன் மகன் அல்லது மகளுக்குக் கலியாணம் செய்வதாயின் விவசாயி கடனுக்கு எங்கு செல்வான்? தனியார் வங்கிகளில் தான் கடன் வாங்க வேண்டும். சாதாரணமாக நம் நாட்டில் விவசாயிகளுக்கு 90சதவீதம் கடன் கொடுப்பவர்கள் வட்டிக் கடைக்காரர்கள்தான். நிலத்தைக் கூட்டுப் பண்ணைக்கு விட்டு விட்ட விவசாயி தன் மகள் கலியாணத்துக்கு எப்படிக் கடன் கேட்க முடியும்? வட்டிக்கடைக்காரர்களும் எதை நம்பிக் கடன் கொடுப்பார்கள்?

படிப்பையும் விவசாயத்தையும் ஒன்றுபடுத்திக் கூறலாம். ஒரு மாணவன் மற்றொரு மாணவனைப் பார்த்துப் போட்டி போட்டுப் படித்தால் இருவரும் பரீட்சையில் அதிக பலன் அடைவார்கள். அவ்வாறே ஒவ்வொரு விவசாயியும் மற்றொரு விவசாயியைப் பார்த்து அதிகம் பயிரிட்டால் எல்லோருக்கும் அதிக விளைவுகள் ஏற்படும். மாணவன் தனியாகப் படித்தால் படிப்பு எப்படி ஏறுமோ, அம்மாதிரியே விவசாயி தன் நிலத்தில் சுய முயற்சியோடு உழைத்தால் அவனுக்கு அக்கறை ஏற்பட்டு அதிக சாகுபடி அடைய முயலுவான். நான்கைந்து மாணவர்கள் ஒன்று சேர்ந்து படித்தால் சினிமாவைப் பற்றிப் பேசுவார்களே தவிர, படிப்பில் கவனம் செலுத்த மாட்டார்கள். அவ்வாறே கூட்டுப் பண்ணையிலும் மந்திரியின் வருகை அல்லது அதிகாரியின் வருகை இவைகளைப் பற்றித்தான் பேசப்படுமே யன்றி நிலத்தில் கவனம் செலுத்தப்பட மாட்டாது.

# உச்ச நிலைக்கு விருத்தியடைந்துள்ள உன்னத விற்பனை.

லோமா உங்கள் கேசத்தை கருமை யுடன் விளங்கச் செய்வதுடன் அதை எழிலுடன் பிரகாசிக்கவும் செய்கின்றது. அதனால்தான் பெரியோரும், சிறியோரும், ஆடவரும், பெண்டிரும், எல்லோரும் ஒருமுகமாக, இந்தியாவிலும், மற்றும் வெளிநாடுகளிலும் லோமாவையே விரும்பி வாங்குகிறார்கள்.




**கேசத்தைக் கருமையாக்குவதில் பாரினில் புகழ்பெற்றது.**




பூரண ஏஜெண்டுகள் :

**எம். எம். கம்பாத்வாலா அஹமதாபாத்- 1**

ஏஜெண்டுகள் :

**ஸி. நரோத்தம் அன்டு கோ. பம்பாய்—2**

TAM.

சென்னை ஏஜண்டுகள் ஜே பாலபாசம் & கம்பெனி. 260, எஸ்பிளனேட். மதராஸ் - 1
இலங்கை ஏஜண்டுகள் . சிர்குல் சுதீர் & கோ., 41 & 43, இரண்டாம் குறுக்குத் தெரு. கொழும்பு-11

# வட்ட மேஜை

## எது பணக்காரக் கட்சி?

நாங்கள் 30-8-59 கல்கி இதழில் மந்திரிகள் சுற்றுப் பிரயாணத்தின்போது "சுதந்திரக் கட்சி" பணக்காரர்கள் கட்சி என்று பிரசாரம் செய்து வருவதைப் பற்றிச் சுட்டிக் காட்டியிருக்கிறீர்கள். உண்மையில் பணக்காரர்கள் காங்கிரஸ் கட்சியினரே என்பதை என் அனுபவ வாயிலாகத் தெரிவிக்க விரும்புகிறேன்.

நான் புதூர் கிராமத்தில் ஒரு சிறு விவசாயி. இந்த வருஷம் தஞ்சை ஜில்லாவுக்கு 17 லக்ஷ ரூபாய் வரை ரசாயன எரு உர விநியோகத்துக்குச் சென்னை சர்க்கார் ஒதுக்கி வட்டார வளர்ச்சி அதிகாரிகளுக்கு விநியோக அதிகாரம் வழங்கியிருக்கிறார்கள். இந்த வருஷம் திருவிடமருதூர் வட்டார வளர்ச்சி அலுவலகத்துக்கு எரு விநியோகத்துக்கு ரெவின்யூ இன்ஸ்பெக்டர் நியமிப்பதில் தாமதம் ஏற்பட்டதால் குறுவைச் சாகுபடி முடிந்த பிறகு தான் எரு விநியோகம் ஆரம்பித்தார்கள். அதிலும் கிராம சேவக்குகள் என் போன்ற சிறு விவசாயிகளிடம் எருக்கடன் விண்ணப்பங்கள் வாங்கிப் போயிருந்தும் இக்க வட்டார வளர்ச்சி அதிகாரி என் போன்ற சிறு விவசாயிகளுக்கு எவ்வித முன்னறிவிப்பு இன்றியும், ஒரு பொது ஸ்தலத்தில் விநியோக ஏற்பாடுகளை வைத்துக் கொள்ளாமலும் இக்கிராமத்தில் உள்ள ஒரு தனவந்தர் வீட்டில் முகாம் போட்டு அவருக்கு வேண்டியவரும் இன்னொரு பெரிய தனவந்தருமான கிராம பெரியதனக்காரரை அழைத்து அவர்களுக்கு வேண்டிய பெரிய பணக்கார மிராசுதார்களாகப் பார்த்து ரூ. 5000 வரை எரு விநியோகம் செய்திருக்கிறார்கள்.

எரு விநியோகம் இந்த முறையில் நடந்தது பற்றி கலெக்டர், மந்திரிகள் முதலியோர்களுக்கு எழுதியும் நாளதுவரை யாதொரு நடவடிக்கையும் காணோம்.

ஆனால் சென்னை "ஹிந்து" பத்திரிகை 28-8-59 தேதி இதழில் ஐந்தாம் பக்கத்தில் "தஞ்சை ஜில்லாவில் குறுவைச் சாகுபடி" என்ற தலைப்பில் ஜாயிண்ட் விவசாய டைரக்டர் கொடுத்துள்ள ஸ்டேட்மெண்டில் தஞ்சை ஜில்லாவில் குறுவைப் பயிர் அமோகமாக வளர்ந்து இருப்பதாகவும் 500 மருந்து தெளிக்கும் கருவிகள் பாதி விலைக்கு விவசாயிகளுக்கு வழங்கியிருப்பதாகவும் தெரிவிக்கிறார். அதுவும் ஜில்லாவில் உள்ள பணக்காரர்களுக்கு விநியோகிக்கப்பட்டிருக்குமே தவிர உண்மையில் நிலத்தில் பாடுபடும் ஒரு ஏழை விவசாயிக்குக் கிடைத்திருக்காது. இப்போதாவது பணக்காரர்களை ஆதரிப்பவர்கள் காங்கிரஸா அல்லது சுதந்திரக் கட்சியா என்று மந்திரிகள் தெரிந்து கொள்ளட்டும்.

புதூர்
1-9-59
பி. கே. வேங்கடராமன்

## ஸ்ரீ தொண்டைமானும், ஆலயமும்

தமிழ் மக்களின் கல்வியில் வேங்கடம் முதல் குமரிவரை என்று நம் தமிழ் நாட்டின் ஆலய வரலாறுகளை அழகாக விவரித்து எழுதி வருகிறார் திரு பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள். இரு வகையில் நமக்கு அறுதாட்டுகிறார்கள். எழுதும் வசன நடையில் தமிழ் கொஞ்சுகிறது. அந்தந்த ஸ்தல புராணங்களை நாம் படித்தாலும் கூடத் தெரிந்து கொள்ள முடியாத விவரங்களை நேரில் கண்டு அனுபவித்து ஆலய வரலாறுகளை நமக்கு மனத்தில் பதியும்படி படம் பிடித்துக் காட்டுகிறார்.

அம்பலசேரி
28-8-59
மு. மா. முத்தையா பிள்ளை

## தாமத விளைவு!

மீமிசலில் பிற்பகல் 12-30 மணிக்குத் தபால்கள் அனுப்பப்பட்டு, பிற்பகல் 3-00 மணி சுமாருக்குத் தபால்கள் பட்டுவாடா செய்யப்படுகின்றன. தபால்கள் வரும் முன் தபால்கள் போய் விடுவதால் வருவது தந்தியாக இருப்பினும், மிக முக்கியமான, அவசரச் சந்தர்ப்பங்களில் கூட ஆவன செய்ய இயலாமல் போய் விடுகிறது.

மீமிசல்
3-9-59
மு. இராமாமிர்தம்

## சரியான வழி!

செப்டம்பர் 6-ம் தேதி கல்கி இதழில் சுதந்திரக் கட்சியின் கொள்கையைப் பற்றி முதன் முதலாக விளக்கம் தந்திருக்கிறீர்கள். "விலைகளைக் குறைப்பது" கட்சியின் ஒரு கொள்கை என்று அறிந்து ரொம்ப சந்தோஷமடைந்துள்ளேன். நம் நாட்டில் சர்க்கார் ஊழியர்களானாலும் மற்ற ஊழியர்களானாலும், "விலைகள் ஏறி விட்டன, சம்பளம் கூட்டவும்" என்று கூறுகிறார்களே தவிர, விலைகளைக் குறைக்கச் சர்க்கார் முயற்சி செய்யும்படி வற்புறுத்துவதில்லை. அவ்விஷயத்தில் சுதந்திரக் கட்சி எடுத்துக் கொண்டிருக்கும் அக்கறை போற்றத் தக்கதே.

கொல்லம்
14-9-59
கே. நடராஜன்



## அத்தியாயம் 29

# ஒற்றனை நம்பினாள் ஒருத்தி

மதுரைமா நகரத்தில் வைகைக் கரைக்கடுத்து நின்ற பெரும் பிடுகு முத்தரையரின் சிறிய மாளிகையும் அதைச் சூழ்ந்திருந்த பூங்காவும் காலைக் கதிரொளியில் தனியானதொரு புத்தெழில் பெற்று விளங்கின

மேல் மாடத்தில் நின்று சோம்பல் முறித்தபடியே பூங்காவின் மேற்பரப்பைக் கண்ணோட்டம் விட்டுக் கொண்டிருந்தாள் திலகவதி. அதிகாலையில் எழுந்து குளித்து முழுகி மாற்றுடை தரித்துத் தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்ட பின்னரும் அவளுடைய சோம்பல் தீரவில்லை. நாடோடி வணிகனை அவள் சந்தித்தபிறகு இரண்டு மூன்று தினங்களே ஆகியிருந்தன. என்றாலும் ஒவ்வொரு தினமும் ஒரு யுகமெனக் கழிந்தது அவளுக்கு. முதல் நாள் இரவில் சரியான உறக்கமில்லை.

ஒருவேளை, அந்த மனிதன் வணிகனாக மட்டும் இருந்திருந்தால் அவள் அவனை மறந்திருப்பாளோ என்னவோ? அவன் தனது வாள்வீச்சால் திலகவதியின் உள்ளத்தையே கொள்ளை கொண்டு போய் விட்டான். புத்தம் புதிய கச்சைகளைக் கொண்டு வருவதாகச் சொல்லிச் சென்றவன் இன்னும் வரக் காணோமே

பெரும் பிடுகு முத்தரையரின் குதிரை உள்வாயில் முகப்பில் சேணம் கட்டிச் சித்தமாக நின்றது. குதிரையின் மீது ஏறிக்கொண்ட முத்தரையர் மாடத்தில் நிற்கும் தமதுமகளைத் திரும்பிப்பார்த்து. "திலகவதி! உன் அத்தையாரும் வீட்டில் இல்லை; கவனமாகப் பார்த்துக் கொள்" என்று சொல்லிவிட்டு, அதைத் தட்டி விட்டார். தோட்டத்தைக் கடந்து வெளி வாயில் வழியாகத் தெருவின் திருப்பத்தில் மறைந்தது குதிரை.

தன் தந்தையின் சொற்களைக் காதில் போட்டுக் கொள்ளாமல், முன்போலவே தோட்டத்து மலர்களின் அழகில் மயங்கி நின்றாள் திலகவதி. அவளுடைய பார்வை திடீரென்று கூர்மையாகியது. செடிப் புதர்கள் நெருக்கமாக இருந்த ஓரிடம் அசைந்து நடுங்குவதையும், அதற்குள்ளிருந்து ஓர் ஆண் மகன் வெளிப் படுவதையும் கண்ணுற்றாள். கூச்சலிட வேண்டும் என்று தோன்றியது அவளுக்கு. ஆனால் அவனை இன்னாரென்று இனம் கண்டுகொண்டவுடன், அவள் மனம் துள்ளிக் குதித்து அவளுக்கு முன்னால் கீழே இறங்கியது. பாதச் சதங்கைகள் கலகலக்க, அவள் படிகளில் சுழன்றோடி வீட்டின் உள் முகப்புக்கு வந்தாள்.

புதர்களை விலக்கிக்கொண்டு வெளியில் தலைநீட்டிய வீரமல்லன் அடிமேல் அடி வைத்துத் திருடனைப் போல் வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தான். நொடிக்கொருமுறை அவன் முகம் பின்னால் திரும்பி வெளியே பார்த்தது. பயத்தினால் இலேசாக நடுங்கிக் கொண்டிருந்த அவன் வலது கரத்தில் ஒரு சிறு மூட்டை இருந்தது.

"ஐயா, திருட்டு ஒற்றரே! இதெல்லாம் என்ன வேலை?"

தூக்கிவாரிப் போட்டது வீரமல்லனுக்கு. 'ஒற்றன் என்பதை இவள் தெரிந்துகொண்டு விட்டாளா, என்ன?' திலகவதி மாடத்தின்மேலிருந்து பார்த்ததை வீரமல்லன் கவனிக்கவில்லை. அவன் கவனமெல்லாம் அப்போது வெளியே செல்லப் புறப்பட்டுக் கொண்டிருந்த முத்தரையரின் மேலிருந்தது.

அருகில் நெருங்கியவன் அவளுடைய புன்முறுவலைக் கண்டவுடன் சிறிது துணிவு பெற்றான். "அம்மணி! வந்து... உங்கள் தந்தையார்..." என்று அவன் உளறத் தொடங்கவே, அதைக் கேட்ட திலகவதி கலீரென்று சிரித்தாள்.

"களவு வழி தேடிக் கள்ளத்தனமாக வந்தீர்களாக்கும்!"

"இல்லை, அம்மணி!" நான் உள்ளே நுழைந்தபோது உங்கள் தந்தையார் எங்கோ அவசரமாகப் புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள். பிறகு வரச் சொல்லி என்னைத் திருப்பி அனுப்பி விட்டால் என்ன செய்வது? இவ்வளவு தூரம் வந்தவன் உங்கள் அழகான முகத்தை ஒரு முறை பார்க்காமல் திரும்புவது என்றால்...."

கருக்கிருட்டு நேரத்திலிருந்து அவன் அங்கே மறைந்து கொண்டிருந்த விஷயம் திலகவதிக்குத் தெரியாது. தனது அழ

# வேங்கையின்



கான முகத்தை அவனது வர்ணனையால் கேட்டவுடன் அவளுக்கு இந்த உலகமே மறந்துவிட்டது. "வாள் வீச்சைப் போலவே வாய் வீச்சிலும் வல்லவராக இருக்கிறீர்களே! உள்ளே வாருங்கள். புதிய கச்சைகள் ஏதாவது கொண்டு வந்திருக்கிறீர்களா?"

உள்ளே நுழைந்து கொண்டே, "உங்கள் அத்தையார்..." என்று தயங்கித் தடுமாறினான் வீரமல்லன்.

"எனக்குத்தான் கச்சைகள் கேட்டேன், அத்தையாருக்கல்ல!" என்று சொல்லி நகைத்துவிட்டு, "அவர் இப்போது ஊரில் இல்லை" என்றாள் திலகவதி.

'அப்பாடா!' என்று பெருமூச்சு விட்டுக்கொண்டே மேல்துண்டை உதறித் தரையில்போட்டு உட்கார்ந்தான் அவன். திலகவதி அவன் தரையில் உட்காருவதைத் தடுத்து ஆசனத்தில் அமரச் செய்தாள். சின்னஞ்சிறு குழந்தையின் மழலை போன்றிருந்தது அவள் பேச்சு. ஒவ்வொரு நாளும் அவன் வரவை எதிர் பார்த்திருந்ததாகக் கூறினாள்.

"உங்களை நேரில் பார்த்தபிறகு, உங்களுக்குத் தகுந்த ஆடைகள் இந்த உலகத்திலேயே நெய்யவில்லை என்ற முடிவுக்கு வந்துவிட்டேன். மெய்யப்பரின் அங்காடியை அப்படியே தலைகீழாகப் புரட்டிப் பார்த்துச் சில துணிகளை எடுத்துக்கொண்டு வந்திருக்கிறேன். அவரிடம் இல்லாத ஆடைகள் இந்தப் பாண்டி நாட்டிலேயே கிடைக்காதென்பது உங்களுக்குத் தெரியும். இருந்தாலும் எனக்கென்னவோ திருப்தி இல்லை."

துணி மூட்டையை அவிழ்த்தவுடன் கண்ணைக்கவரும் வண்ணநிறக் கச்சைகள்



# மைந்தன்

அகிலன்

திலகவதியின் கண்மலர்களை வியப்பால் விரியச் செய்தன. பொன்னிழைத்த பட்டுத் துண்டுகள்; மினுமினுப்பும் வழவழப்பும் கொண்ட காஞ்சி நகர்க் கைவண்ணங்கள்; நுணுக்கமான சித்திர வேலைப்பாடுகள் நிறைந்த உறையூர்க் கலைச்செல்வங்கள். ஒன்றைப் பார்க்கினும் ஒன்று உயர்வாகத் தோன்றவே, திலகவதி அவனுடைய ஆர்வத்தைக் கண்டு அயர்ந்து விட்டாள்.

"தாமதித்து வந்தாலும் தகுதியுடைய பொருள்களுடன் வந்திருக்கிறீர்கள், வீரரே!" என்றாள் திலகவதி.

"வீரனென்ற வீண் பழி எனக்கு வேண்டாம், அம்மணி! வணிகனென்று அழைத்தால் போதும்."

"மற்றவர்களுக்கு நீங்கள் வணிகராக இருந்தாலும் எனக்கு நீங்கள் வீரர்தாம்! என் தந்தையார் உங்களுடைய திறமையை எவ்வளவு புகழ்ந்தார், தெரியுமா? நீங்கள் அவரைச் சந்திப்பதற்கு அஞ்சியிருக்க வேண்டியதில்லை. நேற்றுக் கூட நீங்கள் வராததைப் பற்றி நாங்கள் பேசிக் கொண்டிருந்தோம்."

இதைக் கேட்ட வீரமல்லனின் இருதயம் ஒரு கணம் தன் துடிப்பை நிறுத்தி மீண்டும் படபடவென்று அடித்துக் கொண்டது. "பாண்டிய நாட்டுக்காரர்களிடம் பழகுவதே என்னுடைய பாக்கியந்தான். நீங்கள் என் கலைச்சுவையைப் புகழ்கிறீர்கள்; உங்கள் தந்தையார் என் வீரத்தைப் பாராட்டுகிறார்.....அம்மணி! உங்களைப் பார்த்ததிலிருந்து...."

"நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?" என்று பொய்க் கோபத்துடன் குறுக்கிட்டாள் திலகவதி.

உச்சி முதல் உள்ளங்கால்வரை அவளை ஏறிட்டுப் பார்த்தான் வீரமல்லன். பச்சிளம் குழந்தையின் பால்வடியும் முகம்; செங்கரைத் தண்டுபோன்று செழிப்பும் தளதளப்புமான உடற்கட்டு; பருவத்தின் தலைவாசலில் பூத்த செம்பரத்தம் பூவைப்போல் அவள் சிரித்துக் குலுங்கிக் கொண்டு நின்றாள்.

"அம்மணி! என்னைப் பொய் புகலச் சொல்லாதீர்கள். நான் கொண்டு வந்திருக்கும் துணிகளில் ஒன்றுகூட உங்களுக்கு ஏற்றதில்லை. நான் இந்த மாளிகையில் ஒரு பணியாளனாக இருந்தால் தினந்தோறும் தோட்டத்தில் மலர் கொய்து அவற்றாலேயே உங்களுக்கு விதம் விதமான ஆடைகள் நெய்து கொடுப்பேன். பிரமன் தன் சிருஷ்டி ரகசியத்தின் எல்லையை உங்கள் உருவத்தில் கண்டுவிட்டான். அடடா!..."

மயக்கமே வந்துவிட்டது திலகவதிக்கு. 'மாளிகையின் பணியாளனாக எதற்கு? இதற்கு உரியவராகவே வந்து விடுங்களேன்!' என்று சொல்லத் துடித்தாள் அவள். ஆனாலும் அப்படிச் சொல்லாமல், "'அம்மணி!' என்று இனி என்னை நீங்கள் அழைக்க வேண்டாம்; என் பெயர் ஒன்றும் உங்களுக்குப் பிடிக்காத பெயர் இல்லையே!" என்றுகுழைந்தாள்.

"ஆஹா! அதுவும் என் பாக்கியம்! திலகவதி என்ற பெயரை ஒரு முறை உச்சரித்தால் தேன் குடித்த வண்டாகி விடுவேன் நான்."

புகழ்மொழிகளுக்கு ஆண்டவனே அடிமை என்று சொல்லும்போது, பேதைப் பெண் திலகவதி மட்டும் எம்மாத்திரம்? வீரமல்லன் தன்னுடைய திறமையால் அவளை இந்த உலகத்திலிருந்து மேலே மேலே தூக்கிக் கொண்டு சென்றான். ஒரு பாதி உண்மையைச் சொல்லி, மறு பாதியால் அதை மிகைப்படுத்த வேண்டுமென்பது அவன் கற்றுக் கொண்டிருந்த ஒற்றர் தந்திரம். அதுவரையில் அந்தத் தந்திரம் அவனைக் கைவிடவில்லை.

திலகவதியின் மேனியழகு அவனைக் கவர்ந்ததென்னவோ மெய்தான். ஆனால் அவளே சுந்தர பாண்டியரின் மகளாக, பாண்டிய நாட்டின் இளவரசியாக இருந்திருந்தால் அவனை மிக மிகக் கவர்ந்திருப்பாள். அடிமைப் பட்டிருந்த பாண்டிய நாட்டுச்சேனாதிபதியின் மகள்தானே அவள்....?

அவனுடைய நிலையைவிட உயர்ந்த நிலையில் அவள் இருந்தாளென்றாலும், அவனுடைய ஆசைகளின் அளவுக்கு அவள் உயரவில்லை. ஒரு நாட்டின் தலைவனாக வேண்டுமென்று ஆசைப்பட்டுக் கொண்டிருந்தவனுக்கு, மற்றொரு நாட்டுச் சிற்றரசன் மகளின் உறவாவது வந்து வாய்க்க வேண்டாமா?

என்றாலும் நேரில் காணும்போது நினைவழிக்கக்கூடிய ஏதோ ஒரு மோகன சக்தி திலகவதியின் உருவ அழகில் இருக்கத்தான் செய்தது. சென்றவிடமெல்லாம் அது அவனை விரட்டிக்கொண்டு செல்லாவிட்டாலும், சந்திக்கும் சமயங்களில் அதன் சலனத்திடமிருந்து அவனால் தப்ப முடியவில்லை.

மெய்யும் பொய்யும் கலந்த அவனுடைய மிகைபட்ட கூற்றுக்குத் திலகவதி செவிசாய்க்கலானாள். அவன் விரும்பி வந்த தகவல்களைப் பெறுவதற்கு அவனும் அவள் வாயை மெல்ல மெல்லக் கிளறமுற்பட்டான்.

"திலகவதி! உன் தந்தையார் இப்போது இங்கிருந்தால் என்னால் இவ்வளவு தூரம் மனம் விட்டு உன்னோடு பேச முடியுமா? உன் சிரிப்பொலியைக் கேட்கவும், உன் முத்துப் பல் வரிசையைப் பார்க்கவுந்தான் முடியுமா? அவர்






வழிவழி வாருக வந்த

# வசீகரம்

உங்கள் சருமத்திற்கு—

**கிடைக்கச் செய்யுங்கள்**

பரவசமூட்டும் புதிய ஓ.கே. சந்தன சோப்பை நீங்கள் பரீட்சித்துப் பார்த்தீர்களா? அதன் நறுமணமும், நுரையும் உங்கள் ஸ்நானத்திற்கு ஒரு மாயாஜாலத்தன்மையை ஊட்டுகின்றன. அதோடு ஆக்டெமர், லனோலின் மற்றும் அதிகப்படியான கிளிஸரின் ஆகியவற்றின் பாதுகாப்புச் சக்தியையும் சேர்த்துக் கணக்கிடுங்கள்—மென்மையான, ஆரோக்கியமான சருமம் பெறுவது எப்படி என்ற கேள்விக்குச் சரியான விடை கிடைக்கும்.

- ஆக்டெமர் சருமத்திற்கு ஆரோக்கியம் அளிக்கிறது.
- லனோலின் உங்கள் சருமத்தின் மிருதுத்தன்மையைப் பாதுகாக்கிறது.
- அதிகப்படியான கிளிஸரின் சருமத்தை மென்மையாக்குகிறது.

எல்லாவற்றிற்கும் மேலாக சந்தனத்தின் இனிமை மிகு சுகந்தம்.

ஓ.கே



# சந்தன சோப்

இந்திய டாய்லட் சோப்புகளில் சிறந்தது

**தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட், மதராஸ்.1.**

**இனாம்**

ஓ.கே. அறிமுகப் பரிசளிப்பு

(3 மாதங்களுக்கு மட்டும்)

3 கட்டி ஓ.கே. சந்தனசோப் வாங்குங்கள். கவர்ச்சிகரமான தந்த முலாம் சோப்புப்பெட்டி ஒன்றை முற்றிலும் இலவசமாகப் பெறுங்கள்.

திரும்பி வருகிற நேரமென்றால், முன்னாலேயே சொல்லி விடு, போய்விட்டுப் பின்னால் வருகிறேன். அவர் எதிரிலேயே மறுபடியும் உன்னைக் காணும் வாய்ப்பை நான் இழக்க விரும்பவில்லை.''

''நாடு இருக்கிற நிலையில் தந்தையாருக்கு வீட்டு நினைவு எங்கே இருக்கப் போகிறது?'' என்று அலட்சியமாய்க் கூறினாள் திலகவதி. ''சில நாட்களில் பணிப் பெண்ணையும் வேலையாட்களையும் துணைக்கு வைத்து விட்டுச் சுந்தர பாண்டியருடனேயே தங்கி விடுவதும் உண்டு.''

''பாவம்! தனிமையில் நீ வாடித் தவித்துப் போவாய். ஆமாம், நாட்டு நிலைக்கு இப்போது என்ன வந்துவிட்டது? எல்லாம் நன்றாகத்தானே இருக்கிறது?''

''கையில் வாளெடுப்பதை மறந்த பிறகு உங்களுக்கு நாட்டுக் கவலை ஏன் வருகிறது? அதுசரி, என்னைப்போல் பல பெண்களிடம் நீங்கள் ஆடை விற்கச் செல்வதுண்டல்லவா?''

''அவர்களைச் சந்தித்த போதெல்லாம் இந்தத் தொழிலையே ஒரு துரதிர்ஷ்டம் பிடித்த தொழிலென்று வெறுத்தேன். கடைசியில் அதிர்ஷ்டம் உன் உருவத்தில் வந்தவுடன் என்னால் இதைப் போற்றாமல் இருக்க முடியவில்லை.''

திலகவதி சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டு, ''நாளைக்கு நீங்கள் திரும்பவும் வீரராகத்தான் போகிறீர்கள்; எல்லா விஷயங்களும் உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டியதுதான்; ஆனால் தந்தையாரிடம் மட்டும் முன்பே தெரிந்ததாகக் காட்டிக் கொள்ளாதீர்கள்'' என்று கூறினாள்.

''திரும்பவும் நான் வீரனாவதா?''

''ஆமாம்; உங்களை அலட்சியம் செய்து அவமானப் படுத்திய சோழர்களுக்கு எதிராக வாள் பிடிப்பதென்றால் நீங்கள் மறுக்கவா செய்வீர்கள்?''

வீரமல்லன் வெலவெலத்துப்போனான்.

''கலங்காதீர்கள்; காலம் வரும்போது நானே தந்தையாரிடம் சொல்லி ஏற்பாடு செய்கிறேன்'' என்று கூறிவிட்டு, நாட்டு நடப்பை மளமளவென்று சொல்லிக்கொண்டு போனாள்.

''நாடாசை பிடித்த சோழர்கள் இப்போது ஈழநாடு முழுவதையும் தங்கள் ஆட்சிக்குள் கொண்டு வந்து விட்டார்களாம். எத்தனையோ தலைமுறைகளாக யாருக்கும் பணியாத ரோகணம் இப்போது அவர்களுக்குப் பணிந்து விட்டதாம். ரோகணத்து அமைச்சர் கீர்த்தி உதவிக்குப் படை கேட்டுச் சுந்தர பாண்டியருக்கு ஆள் அனுப்பியிருந்தார். உதவிப் படையை உரிய காலத்தில் அனுப்ப முடியாதால் அவர்கள் தோற்றுப் போனார்கள். - உங்கள் சோழ நாட்டுக் காரர்களின் கண்களில் மண் தூவி விட்டு உதவிப் படைகள் அனுப்புவதென்றால் எளிதில் முடிகிறதா?''

கண்களைத் துடைத்துக் கொண்டு, ''திலகவதி! 'உங்கள் சோழநாடு' என்றால் இனி எனக்குப் பொல்லாத கோபம் தான் வந்துவிடும்!'' என்றான் வீரமல்லன். ''நம்முடையது இனிமேல் பாண்டிய நாடுதான்!''

''கேளுங்கள்: அதற்காக அமைச்சர் கீர்த்தி சும்மா இருந்து விடவில்லை. சோழர்கள் ஈழ நாட்டில் வெற்றிகொண்டாடிக் கொண்டிருக்கும் இந்தச் சமயத்தில், திடீரென்று நம்முடைய படைகளை அவர்கள் மீது ஏவிவிடச் சொல்லியிருக்கிறார். இதற்காகத் தஞ்சை மாநகரைக் கைப்பற்ற வேண்டுமென்பதில்லையாம். மதுரையிலேயே அவர்களுடைய தெரிந்த படை வீரர்கள் ஆயிரக் கணக்கில் குவிந்திருக்கிறார்கள். அவர்களைத் தாக்கி



அழித்தால் போதும், சாம்ராஜ்யமே ஆட்டம் கண்டு விடுமாம்!''

''போருக்குக் காரணம்வேண்டாமா?''

''நம்முடைய தலைநகரத்தின் நம்மையே கேட்காமல் அவர்கள் ஒரு பெரிய மாளிகை கட்டுகிறார்களே, அந்த ஒரு காரணம் போதாதா? பெரிய மாளிகை என்ற பெயரில் அவர்கள் ஒரு அரண்மனையையே கட்டிக் கொண்டிருக்கிறார்கள். சோழ நாட்டுச் சக்கரவர்த்தி பேராசை பிடித்துப்போய்ப் பெரிய பெரிய கனவுகளை யெல்லாம் கண்டு கொண்டிருக்கிறார். அந்த அரண்மனை எதற்காகக் கட்டுகிறார்கள் தெரியுமா?''

''எனக்கென்ன தெரியும்? நான் என்ன பாண்டிய நாட்டுச் சேனாபதியின் அருமை மகளா, இதையெல்லாம் தெரிந்து வைத்துக்கொள்வதற்கு? அவருடைய அருமை மகள் மட்டுமல்ல நீ. அறிவாற்றலும் படைத்த மகள்.''

இலகவதி வீரமல்லன் அருகில் மிகவும் நெருங்கி வந்து அவன் காதோடு கூறினாள்: "பாண்டியர்களுடைய மணி முடி ரோகணத்தில் இருக்கிறதல்லவா? அதை எடுத்துக் கொண்டு வந்து, தமது புதல்வர்களில் ஒருவனைப் பாண்டியநாட்டின் அரசனுக்கி, அவனுக்கு அதைச் சூட்டிவிடப் பார்க்கிறார். சக்கரவர்த்தியால் முடியை ரோகணத்திலிருந்து கொண்டு வரவும் முடியாது. அப்படியே கொண்டு வந்தாலும், அது இவர்கள் எழுப்பும் புது மாளிகைக்குள் போய்ச் சேரவும் சேராது."

"ஏன் சேராது? மாளிகையின் நுழைவாயிலுக்குள் போக முடியாத அத்தனை பெரிய மணிமுடியா அது!"

"தலையிலே சூட்டிக் கொள்ளுகிற முடி எங்கேயாவது அத்தனை பெரிதாக இருக்க முடியுமா? ஏன், உங்கள் பரம்பரையில் யாருமே முடி சூடி நாடாண்டதில்லையோ?"

"நம்முடைய பரம்பரை என்றுசொல். நானும் முத்தரையன்" என்றான் கோபத்துடன் வீரமல்லன். "சோழர்களுடைய வாழ்வு நம்முடைய தாழ்விலிருந்துதானே தொடங்கியது? சந்திரலேகையிலும், தஞ்சையிலும், இன்னும் எத்தனையோ இடங்களிலும் நாம் நாடாண்டவர்கள்தாமே?"

வீரமல்லனின் முகத்தில் திடீரென்று கோபச் சிவப்பேறியதைக் கண்டு துணுக்குற்றாள் இலகவதி.

"பொறுத்துக் கொள்ளுங்கள்! பெரிய மாளிகையைத் தரை மட்டமாக்கிஅதை மண் மேடாக்கப் போகிறார்கள் நம்மவர்கள். மணி முடியும் நமக்குத்தான் கிடைக்கப் போகிறது. அந்தப் போரில் நீங்களும் கலந்து கொள்ளலாம்."

வீரமல்லன் யோசனையில் ஆழ்ந்தான் நேரம் சென்றது.

"சரி, நான் மற்றொரு நாள் இதே சுச்சைகளுடன் வருகிறேன். உன் தந்தையாரிடம் நான் வந்ததைத் தெரிவிக்க வேண்டாம். இப்போதைக்கு உனக்குப் பிடித்த ஒரு துணியைப் பொறுக்கி எடுத்துக் கொள். என்னுடைய அன்புக் காணிக்கையாக அது இருக்கட்டும்."

மறுக்க மனமில்லாமல் ஒன்றை எடுத்துக் கொண்டாள் இலகவதி. "மற்றொரு நாள் என்ன? நாளைக்கே வந்து சேருங்கள்; தந்தையார் உங்களைப் பார்த்தால் மிகவும் மகிழ்ச்சியடைவார்."

மூட்டையைக் கட்டிக் கொண்டு வெளியில் வந்த வீரமல்லன் குதிரையின் குளம்பொலி கேட்டு அப்படியே திகைத்து நின்றான். "இலகவதி! நீ எடுத்துக்கொண்ட துணியை விரைந்து சென்று மறைத்து வை. உன் தந்தையார் வந்துவிட்டார்."

பெரும்பிடுகு முத்தரையரின் குதிரை நாலுகால் பாய்ச்சலில் வீரமல்லனை நோக்கித் தாவி வந்தது. கையிலிருந்த மூட்டை கீழே நழுவி விழவே, அதைச் குனிந்து எடுக்கப் போனான் வீரமல்லன்.

முப்பதாம் அத்தியாயம்

# வீரனைக் காணோம்

மன்னர் மகிந்தர் தாமாகவே நகரத்துக்குத் திரும்பிவிட்டார் என்ற மகிழ்ச்சிகரமான செய்தி மூலைமுடுக்குகள்தோறும் காற்றெனப் பரவியது. தெருக்களில் அங்கங்கே பலர் கூடி நின்று, தாங்களே அந்தக் காட்சியை நேரில் கண்டவர்கள் போல் பேசிக் கொண்டனர். போரினால் ஏற்பட்டிருந்த மனக்கசப்பும், அதையொட்டி நகரத்தில் நிலவிய அச்சம் கலந்த அமைதியும், இச்செய்தி கிடைத்தவுடன் எங்கோ சென்று மறைந்தன.

இராஜேந்திரரே நேரில் வருகை தந்து மன்னர் மகிந்தரைச் சகல மரியாதைகளுடனும் வரவேற்றாராம். மாமன்னரும் மன்னரும் ஒருவரை யொருவர் அன்போடு தழுவிக் கொண்டார்களாம். அவர்களுடைய சந்திப்பைக் கண்டவர்களுக்கு, 'பகை நாட்டரசர்களா இவர்கள்!' என்ற வியப்பு ஏற்பட்டதாம். நெடு நாட்கள் பிரிந்திருந்த நெருங்கிய நண்பர்களென ஒருவருக்கொருவர் முகமன் கூறிக்கொண்டார்களாம்! இன்னும் இவைபோன்ற பற்பல நல்ல செய்திகள் நகருக்குள் உலவின.

காற்றுவாக்கில் நகரத்துக்குள் பரபரப்பைப் பரப்பிய இந்தச் செய்திகளில் ஒரு பகுதி மட்டிலும் உண்மை. சக்கரவர்த்தி இராஜேந்திரரைப் பற்றிய வரையில் அவர்கள் நடந்ததைத்தான் கூறினார்கள். ஆனல் மன்னர் மகிந்தர் எவ்வாறு நடந்து கொண்டார் என்பது அவர்களில் யாருக்கும் தெரியாது.

"வாருங்கள், மகிந்தரே! உங்கள் அரண்மனை உங்களுக்காகவே காத்திருக்கிறது" என்று சொல்லி, தழுவியபடியே அவரை அழைத்துக் கொண்டு உள்ளே சென்றார் இராஜேந்திரர்.

மகிந்தர் மாமன்னரை ஏறிட்டுப் பார்க்கவில்லை. அவரது முகத்தில் பீதியும் நடையில் தயக்கமும் காணப்பட்

டன. வரவேற்புக்குப் பதிலாக மகிந்தர் வணக்கம் செலுத்திப் புன்னகை செய்தாரென்றாலும், அந்த வணக்கம் வணக்கமாகவுமில்லை; புன்னகை புன்னகையாகவும் இல்லை.

கூப்பிய கரங்களுக்கிடையில் தென்பட்ட ஓலை நறுக்கை, மகிந்தர் சட்டென்று தமது மடியில் செருகி மறைத்துக் கொண்டார். இராஜேந்திரரின் கண்கள் இதைக் கவனிக்கத் தவறவில்லை. என்றாலும் அவரது தயக்கத்தை மாற்றுவதற்காக அவரோடு கலகலப்பாகப் பேசிக் கொண்டு வந்தார்.

தோல்வியால் ஏற்பட்ட அதிர்ச்சியும் அச்சமும் அவரை இப்படிக் கலக்கமுறச் செய்கின்றனவோ என்று தோன்றியது இராஜேந்திரருக்கு. அப்படி ஒரு தாழ்வு மனப்பான்மை ஏற்பட்டிருந்தால் அதைப் போக்கி விடவேண்டுமென்பதற்காக அவருடன் சரளமாகவே பழகமுற்பட்டார். ஆனாலும், மகிந்தரால் இராஜேந்திரருடன் சரிசமமாகப் பழக முடியவில்லை. அவருக்கும் சக்கரவர்த்திக்கும் இடையில் ஏதோ ஒன்று குறுக்கே நின்று கொண்டிருந்தது.

அந்த ஓலை நறுக்குத்தான் அப்படிக் குறுக்கே நிற்கிறதா?

அரண்மனைக்குள் நடைபெற்றுக் கொண்டிருந்த வரவேற்பு ஏற்பாடுகள் மகிந்தரையே மலைக்க வைத்தன. வண்ணப் பெண்மணிகள் மலர் தூவி வாழ்த்துப் பாடினார்கள். இன்னிசைக் கலைஞர்கள் பல்வகை வாத்தியங்களுடன் பண்ணிசைத்தார்கள். எங்கு திரும்பினாலும் தீவர்த்திகள் ஒளி சிந்தி இரவைப் பகலாக்கிக் கொண்டிருந்தன. அப்போது விளக்கு வைக்கும் நேரம்.

தோல்வியுற்றுப் போய் ஓடி ஒளிந்த சிற்றரசருக்கா இவ்வளவு சிறப்பான வரவேற்பு; விருந்தினராக வரும் சக்கரவர்த்தி ஒருவருக்கு, அவருக்குத் திரை செலுத்தும் சிற்றரசர் கொடுக்கும் சிறப்பைப் போலல்லவா இது இருக்கிறது? மன்னர் மகிந்தர் இதனால் மனமகிழவில்லை; அவரது அச்சம் மனத்தின் ஆழத்துக்கே சென்று விட்டது.

தாம் வசித்து வந்த பெரிய அரண்மனையில் சக்கரவர்த்தி தங்கியிருக்கக் கூடும் என்று நினைத்த மகிந்தர், அது வெற்றிடமாக இருப்பதைக் கண்ட

வுடன் திகைத்துப் போனார். "அமைச்சரின் மாளிகைதான் என் இருப்பிடம்; நீங்கள் இங்கு தங்கிச் சிறிது ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள்" என்றார் இராஜேந்திரர். "பட்டமகிஷி பிரிவுத் துயரத்தால் வருந்திக் கொண்டிருப்பார்: அவரது துயரத்தை முதலில் அகற்றுங்கள். மீண்டும் உணவு கொள்ளும்போது நாம் சந்தித்து உரையாடலாம்." இப்படிக் கூறி அவரை அரண்மனைக்குள் அனுப்பிவிட்டு விடைபெற்றுக் கொண்டார் மாமன்னர்.

அந்தப்புரத்திலிருந்து அரண்மனைக்கு வந்திருந்த மகிஷி தமது கணவரையும், புதல்வியையும் கண்டவுடன் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார். அடுத்தாற்போல் அவரது கண்கள் புதல்வன் காசிபனைத் தேடிப் பார்த்து ஏமாந்தன. மகிந்தர் அவரைத் தேற்றுவதற்காக நடந்த நடப்புக்களை விளக்கலானார்.

சிறிது நேரம் சென்றது. திராத குழப்பத்துடன் மன்னர் மகிந்தர் தமது இருக்கையில் சாய்ந்தார். அவர் எதை மறந்துவிட விரும்பினாரோ அதை நினைவூட்டிவிட்டாள் ரோகிணி.

"ஏன், அப்பா! நகரத்தின் எல்லைக்கு வரும்வரையில் உற்சாகமாகப் பேசிக் கொண்டு வந்தீர்களே, பிறகு திடீரென்று என்ன நேர்ந்துவிட்டது? அந்த ஓலையில் எழுதியிருப்பதை எனக்குச் சொல்ல மாட்டீர்களா, அப்பா?"

"ரோகிணி! வீணாக எனக்குக் கோபம் மூட்டாதே!" என்று அவள்மீது எரிந்து விழுந்தார் மகிந்தர். "குகையில் உன்னிடம் சொன்ன ரகசியம் என்ன ஆனது தெரியுமா?"

இப்படிக் கேட்டவர் நினைவாகத் தமது மடியைத் தொட்டுப் பார்த்துக் கொண்டார். கரத்தில் அந்த ஓலை நறுக்குத் தட்டுப்படவில்லை. திடுக்கிட்டு எழுந்தார்; தரையில் சுற்றிப் பார்த்தார்; ஆடைகளை உதறிக் கொண்டு பதறினார். அந்தச் சிறு ஓலை எங்கோ மாயமாய் மறைந்து போய்விட்டது.

தந்தையாரும் மகளும் தீவர்த்தி வெளிச்சத்தில் அதை எங்கெல்லாமோ தேடினார்கள். துணையாகக் கந்துலனும் ஓடிவந்து அவர்களுடன் சேர்ந்து கொண்டான். அரண்மனைக்கு வெளியிலும், நடந்து வந்த பாதையெங்கும் தேடிப் பார்த்து விட்டார்கள். அந்த ஓலைக்குச் சிறகு முளைத்து விட்டது போலும்!

மாமன்னருடன் மகிந்தர் நடந்து வந்தபோது, மாமன்னரின் கண்கள் வல்லவரையரின் கண்களை நோக்கியதையும், வல்லவரையரின் இடது கரம் மெல்ல மகிந்தரின் இடுப்பருகில் சென்றதையும் யாருமே கவனிக்கவில்லை. தந்தையும் மகளும் அப்போது கோலாகலமான வரவேற்பின் ஆர்ப்பாட்டத்தில் மூழ்கியிருந்தார்கள்.

மாமன்னர் இராஜேந்திரர் அந்த ஓலையை விளக்கின் அருகில் எடுத்துச் சென்று அப்போது படித்துக் கொண்டிருந்தார். படித்துவிட்டு வல்லவரையரிடம் நீட்டினார். "மகிந்தர் ஏன் குழம்பித் தவிக்கிறார் என்பதற்கு விடை இதில் இருக்கிறது, மாமா!"

ஓலையின் வாசகம் இதுதான்:

"பகைவருடன் நட்புறவு கொள்ள வேண்டாம். அவர்களுடைய நிபந்தனைகளுக்கு நானும் தங்கள் குமாரன் காசிபனும் கட்டுப்பட மாட்டோம். எங்களையும் இந்த நாட்டையும் பகைத்துக் கொள்ள வேண்டாமென்று எச்சரிக்கிறேன். அவசரப்பட்டு எந்த முடிவுக்கும் வந்து விடாதீர்கள். இங்ஙனம்,

கீர்த்தி"

ஓலையை மாமன்னரிடம் திருப்பிக் கொடுத்த வல்லவரையர், "இன்னும் இளங்கோ திரும்பி வரவில்லையே!" என்று கவலையுடன் கூறினார்.

"மகிந்தரின் வரவைக் கூறிய தூதுவன், அவன் ஏற்கனவே திரும்பிவிட்டதாகக் கூறினானே! ஒருவேளை அது பொய் மொழியாக இருக்குமோ?"

"எதையும் நம்புவதற்கில்லை; ஆட்கள் சிலரை அனுப்பி அவனைத் தேடிப் பார்க்கச் சொல்லட்டுமா? நேற்று நடுப்பகலில் புறப்பட்டவன் இன்னும் வரவில்லையென்றால்..."

"பொறுத்துக்கொள்ளுங்கள்; உணவு கொள்ளும் வேளையில் மகிந்தரிடம் பேசிப் பார்க்கிறேன்" என்று கூறினார் இராஜேந்திரர்.

மகிந்தர் தம்மால் முடிந்த மட்டும் ஓலையைத் தேடிப் பார்த்துவிட்டு, அது கிடைக்காதென்று தெரிந்தவுடன், "போனால் போகட்டும்; மிகச் சிறிய விஷயம்" என்று ரோகிணியிடம் மழுப்பி விட்டார். மகளை ஏமாற்றிய அவரால், தம்மையே ஏமாற்றிக் கொள்ள முடியவில்லை. அந்தச் செய்தியை மறந்து விடாமல், செய்தி தந்த ஓலையை மறந்து விடப் பார்த்தார்.

இந்தச் சமயத்தில் கந்துலன் அவரிடம் கொடும்பாளூர் இளவரசன் இன்னும் கப்பகல்லகத்துக்கு திரும்பிவந்து சேரவில்லை என்பதைத் தெரிவித்தான்.

"அந்த மற்றொரு ஒற்றன் என்ன ஆனான்?" என்று கேட்டார் அவர்.

# பின்னியின் காட்ஸ்வால்



**இந்த அற்புதமான துணி இரவு நேரங்களில் உங்களை வெதுவெதுப்பாகவும் பகல்வேளையில் இதமாகவும் இருக்க உதவுகிறது.**

**காட்ஸ்வால் விசேஷ மதிப்புடையது.**

இது உயர்ந்த ரகக் கம்பளியும் பருத்தியும் கலந்து அதி ஜாக்கிரதையுடன் விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது.

சீடித்து உழைப்பதுடன் என்றும் மென்மையாக இருக்கிறது.

இது முக்கியமாக குழந்தைகளுக்கு ஏற்றது. மிக்க மென்மையான சருமத்தைக்கூட உறுத்தாதது.

இது திடீரென்று மாறும் சீதோஷ்ண நிலையிலிருந்து பாதுகாப்பு அளிக்கிறது.

இது எப்போதும் பார்க்க நேர்த்தியாக இருக்கும். எந்தப் பருவகாலத்துக்கும் ஏற்றது. காட்ஸ்வால் துணியை வீட்டிலேயே சலவை செய்யலாம்.

**காட்ஸ்வால் சுருங்காதென உத்திரவாதம்.**

உங்களை கவர்ச்சிகரமாகவும், சுகமாகவும் நாள் பூராவும் வைத்துக் கொள்ளுகிறது.

பலவித கலர் துணிகள், பிரின்ட் துணி, செக்ஸ் துணி இவற்றிலிருந்து உங்களுக்குப் பிடித்தமானவற்றைப் பொறுக்குங்கள்.

**காட்ஸ்வாலுக்கு ஈடு எதுவும் இல்லை.**

அதிகக் குளிரிலிருந்து பாதுகாக்க பின்னியின் அங்கோலாவை அணியுங்கள்! பலனிதறுங்கள்.



குளிர்ந்த இரவு நேரங்களில் உங்களை வெதுவெதுப்பாக வைத்துக் கொள்ளுகிறது.

உங்களுக்குத் தேவையான காட்ஸ்வால் துணிகள் இந்த காட்ஸ்வால் அடையாளம் காணப்படும் அனுமதி பெற்ற கடைகளிலிருந்து கன்ட்ரோல் விலைக்கு வாங்கவும்.






**பெங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட்,**
அக்ரஹாரம் ரோட், பெங்களூர்-2.
மானேஜிங் ஏஜென்டுகள்: பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்.

" அவனைப் பற்றியும் ஒன்றும் தெரிந்து கொள்ள முடியவில்லை. யாருமே இங்கு வரவில்லை என்று தோன்றுகிறது" என்றான் கந்துலன்.

ரோகிணியின் முகம் இதைக் கேட்டவுடன் வெளுத்தது. 'இங்கே திரும்பி வராமல் இளங்கோ வேறெங்குபோனார்?'

" அப்பா! அந்த ஒற்றர்கள் நேரே முதலைக் கனைக்குப் போயிருக்கலாமல்லவா? அவர்கள் மணிமுடியை எடுத்துக்கொண்டு வருவதற்காகப் போனாலும் போயிருப்பார்கள்."

மகிந்தரின்முகத்தில் குழப்பம் மறைந்து தெம்பு பிறந்தது. பரிகாசமாகத் தம்முடைய மகளைப் பார்த்துச் சிரித்துவிட்டு, " அப்படிப் போயிருந்தால் அது நம்முடைய அதிர்ஷ்டந்தான்!" என்றார். "ஒருவனோ இரண்டு பேர்களோ போய்ச் சாதிக்கக் கூடிய காரியமில்லை அது. போனவர்கள் திரும்பிவரப் போவதில்லை. சாகவேண்டுமென்று அவர்கள் தலையில் எழுதியிருந்தால், நம்மிடமிருந்து தப்பிவிட்டால் மட்டும் போதுமா? மணிமுடியை அவர்கள் தேடிப் போகவில்லை; மரணத்தைத் தேடிக் கொண்டுதான் போயிருக்கிறார்கள்!"

ரோகிணியின் வதனத்தில் இருள் கவிந்ததைக் கண்ணுறாமல் மகிந்தர் தொடர்ந்து கூறினார்:-

"ரோகிணி! அந்த ஒற்றர்கள் நேரே கனைக்குச் சென்றிருப்பார்கள் என்று எனக்குத் தெரியாமல் போய்விட்டது. தெரிந்திருந்தால் நாம் இங்கு வந்திருக்க வேண்டியதில்லை. இதுவரையில் நடந்தது சரி. இனிமேல்தான் அதிக விழிப்போடிருக்க வேண்டும்; கனையைப் பற்றி நாம் இவர்களிடம் மறந்துகூட வாய் திறக்கக் கூடாது. அடுத்தாற்போல், எவ்வளவு விரைவில் நாம் இந்த இடத்தை விட்டுக் கிளம்ப வேண்டுமோ, அவ்வளவு விரைவில் கிளம்ப வேண்டும்."

" அம்மாவை விட்டு விட்டா?" என்று கேட்டாள் ரோகிணி.

"இல்லை; அவளையும் அழைத்துக் கொண்டுதான்!"

"நம்மை இவர்கள் இனி எப்படி வெளியில் செல்ல அனுமதிப்பார்கள்?"

"அவர்களுடைய அனுமதியை எதிர்பார்த்தால் அது இந்தப் பிறவியில் கிடைக்காது. நாமாக முயற்சி செய்ய வேண்டியதுதான்."

" தங்கள் சித்தப்படியே செய்யலாம், அப்பா! முதலில் ஒற்றர்கள் திரும்பி வருகிறார்களா இல்லையா என்பதைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளுங்கள். ஒரு முறை அவசரப்பட்டு நாம் இங்கு வந்தது போதும். திரும்பவும் அதே தவறைச் செய்ய வேண்டாம்."

"உன் யோசனையும் சரிதான்" என்று சொல்லிவிட்டு மௌனத்தில் ஆழ்ந்தார் மன்னர் மகிந்தர்.



ரோகிணியின் யோசனை சரியானதாக இருந்தாலும், அவள் அதை வேறு காரணத்துக்காகச் சொல்லி வைத்தாள். இளங்கோவின் நிலை என்ன ஆயிற்றென்று அவளுக்குத் தெரியவில்லை. அவன் உயிருடன் திரும்புவானா மாட்டானா என்ற முடிவு அவளுக்குத்



தோட்டக்கார விசுவநாதன் எழுதிய "ஒருநாள் கூத்து" என்ற நாடகம் 13-9-59 அன்று சென்னை செயின்ட் மேரி ஹாலில் பிரபல சினிமா நடிகர் தங்கவேலுவின் தலைமையில் நடைபெற்றது. நாடகத்தில் பங்கெடுத்துக் கொண்ட சென்னை சமூகக் கலாச்சாரக் குழுவினர் மிகவும் சிறப்பாக நடித்தனர். நாடக ஆசிரியர் தோட்டக்கார விசுவநாதனும் நாடகத்தில் நடித்தார். நடிகர் களையும் தங்கவேலுவையும் படத்தில் காணலாம்.

தெரிந்தாக வேண்டும். முடிவு வேறு விதமாக இருந்தால்கூட, அதற்காக அவன் தன்னை வாழ்க்கை முழுவதும் வாட்டி வதைத்துக்கொள்ள மாட்டான். அநுதாபம் மிகுதியால் அவளுக்குக் கண்ணீர் பெருகலாம். அதைத் துடைத்துக் கொண்டால் துன்பம் பிறகு குறைந்து போகும்.

ஆம்; அவன் இளங்கோவை மரண தண்டனையிலிருந்து முதல் நாளிரவு காப்பாற்றினான் என்றால், அதற்குக் காரணம் உயிருக்கு உயிரான நேசமென்று கூறிவிட முடியாது. தன்னால் அவனுக்கு அந்தக் கதி வரக் கூடாதென்று மட்டிலுமே அவள் துடித்தாள். அவனிடம் அவன் கருணை காட்டினான்; அவளும் செய்நன்றி மறக்க விரும்பவில்லை. அவ்வளவுதான்.

இரண்டுங் கெட்ட நிலையில் கிடந்து அடித்துக் கொள்ளத் தொடங்கியது ரோகிணியின் மனம். அவன் தன் முயற்சியில் வெற்றி பெறுவதும் அவளுக்குப் பிடிக்கவில்லை; உயிர் இழப்பதும் பிடிக்கவில்லை. வெற்றி பெற்றானென்றால் அது அவளுடைய நாட்டின் விருப்பத்துக்கு எதிராகச் செய்த செயலாகும். விழுந்து விட்டானென்றால் அவனைப் போல் மற்றொருவனைக் காண்பது அரிதிலும் அரிது. எளிதில் மறந்துவிடக் கூடியவனாக அவனும் அவளிடம் நடந்து கொள்ள வில்லையே!

**உ**ணவு வேளையில் இராஜேந்திரரும் வல்லவரையரும் மகிந்தரின் அருகிலிருந்து கலகலப்பாகப் பேசிக் கொண்டே உணவு கொண்டனர். தாம்பூலம் தரித்துக் கொண்ட பின்னர் மாமன்னர் சுற்றிலும் நின்று கொண்டிருந்த பணியாட்களை ஒரு முறை பார்த்தார். அவர்கள் அனைவரும் விலகிச் சென்றவுடன் மூவருக்கும் தனிமை கிடைத்தது.

"கொடும்பாளூர் இளவரசன் இன்னும் இங்கு வந்து சேரவில்லை.." என்று தொடங்கினார் வல்லவரையர்.

"அந்த இளைஞனை நான் முதலில் ஒற்றனென்று நினைத்துத் துன்புறுத்தியதென்னவோ உண்மைதான். பிறகே அவன் தங்கள் தூதுவனென்று தெரிந்தது. மரண தண்டனை விதித்த பின்பு அதை மாற்றி அவனை மன்னித்து விட்டேன்."

'நாடற்ற மன்னருக்குத் தண்டனை விதிக்கும் அதிகாரமா?' என்று நினைத்த வல்லவரையர், "மரண தண்டனையா?" என்று பதற்றத்துடன் கேட்டார். இராஜேந்திரரின் விழிகள் மகிந்தரின் முகத்தில் பதிந்திருந்தன.

"மன்னித்து விட்டேன் என்று நான் கூறவில்லையா?"

"இது மெய்தானா?" என்று மெதுவாகக் கேட்டார் மாமன்னர்.

"ரோகணத்தின் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன். என்னால் அவனுக்கு ஒரு தீங்கும் நேரவில்லை. பொழுது விடிவதற்கு முன்பே என்னை விட்டுக் கிளம்பி வந்தான்." மகிந்தரின் குரல் அச்சத்தால் நடுங்கியது.

"மாமா!" என்று வல்லவரையரின் பக்கம் திரும்பினார் சக்கரவர்த்தி. "உடனடியாக நம் வீரர்கள் சிலரை அனுப்பி இளங்கோவைத் தேடிப் பார்க்கச் சொல்லுங்கள்."

பின்னர் மகிந்தரைப் பார்த்து, "இரவில் நன்றாக ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள்; நாளைக்கு மற்றவற்றைப் பற்றிப் பேசலாம்" என்றார்.

இளங்கோவைத் தேடப் பத்துப் பன்னிரண்டு குதிரை வீரர்கள் தீப்பந்தங்களை ஏந்திக்கொண்டு அரண்மனையை விட்டு வெளியே கிளம்பினர். மகிந்தர் எந்த வழியாக நகரத்துக்கு வந்தாரோ அதே பாதையில் அந்த வீரர்களுடைய குதிரைகளும் விரைந்து சென்றன.

(தொடரும்)




[எழுத்தாளர் பஞ்சாமிர்தத்தின் வீட்டுக் கூடம். பஞ்சாமிர்தம் ஒரு பக்கமாக உட்கார்ந்திருக்கிறார். எதிர்ப் பக்கமாக அவர் மாப்பிள்ளை ஜகதீசன், மைத்துனன் சிதம்பரம் இருவரும் உட்கார்ந்திருக்கிறார்கள். அவர்களுக்குப் பின்னால் பஞ்சாமிர்தத்தின் மனைவி பெரியநாயகி, பிள்ளை ராஜு, பெண் மீனு மூவரும் நிற்கிறார்கள்.]

**பஞ்சாமிர்தம் :** அமைதி : அமைதி ! ஜன நாயகத்துக்குப் பங்கம் விளைவிக்கக்கூடிய எந்த விஷயத்தையும் நான் அனுமதிக்க முடியாது.

**பெரிய நாயகி :** ஜனநாயகமெல்லாம் சாம் பாரிலே போட்ட மக்குப் பெருங்காயம் மாதிரி கரைந்துபோய் வெகுநாட்களாயிற்று. பெருங் காய வாசனை கூடக் கிடையாது.

**பஞ்சாமிர்தம் :** ஏய் கற்சட்டி ! உனக்கு என்ன தெரியும், ஜனநாயகத்தைப் பற்றி? பொங்கிவழியும் பழைய தோசை மாவுமாதிரி நீ ஏன் உன் அசட்டுத்தனத்தை வழிய விடுகிறாய் ? சும்மா இடு !

**ராஜு :** அப்பா ! இது அடக்குமுறை ! நான் இதை ஆட்சேபிக்கிறேன்.

**பெரிய நாயகி :** நானு கற்சட்டி! நீங்கதான் தேய்ந்துபோன கற்சட்டிமாதிரி பதவியில் ஒட்டிக் கொண்டு அசையமாட்டேனென்கிறீர்கள்!

**மீனு :** இந்தக் கேழ்வரகுத் திட்டப் பிரச்னையில் அது அசைந்துவிடும் !

**பஞ்சா :** இப்போது உங்களுக்குப் பிரச்னை முக்கியமா ? நான் குடும்பத் தலைமைப் பதவியிலிருந்து விலகுவது முக்கியமா ?

**சிதம்பரம் :** அத்தான் ! இரண்டையும் பிரித்து ஆராய்வானேன் ! நீங்கள் ' ரிஸைன் ' பண்ணிவிட்டால் கேழ்வரகுப் பிரச்னை தானே போய் விடுகிறது.

**ஜகதீசன் :** ஒரேகல்லில் இரண்டுமாங்காய்!

**பஞ்சா :** புடலங்காய் ! மாப்பிள்ளை ! நீங்களுமா இந்த ஓட்டை டப்பாக்களுடன் கூட்டாகச் சேர்ந்து என்னை எதிர்க்கிறீர்கள் ?

**ஜகதீசன் :** இந்தப் பிரச்னை என்னையும் தானே பாதிக்கிறது ! ஆசையாக மாமனார் வீட்டுக்குள் நுழைந்ததும் ஒரு கப் காப்பிக்குப் பதில் ஒரு போகிணி கேழ்வரகுக் கூழைக் குடிக்க யாருக்குத்தான் பிடிக்கும் ?

**பஞ்சா :** கேழ்வரகுக் கூழ் உடம்புக்கு நல்லது. உள்ளத்துக்கு நல்லது. சிக்கனத்துக்கும் நல்லது; காப்பி உடல் நலத்தைக் கெடுக்கும், பணத்தை விழுங்கும். அதனால் நான் இந்த வீட்டில் கேழ்வரகுச் சட்டத்தை அமுலாக்கியிருக்கிறேன்.

**ராஜு :** கேழ்வரகு ஒழிக ! காப்பி வாழ்க !

**சிதம்பரம் :** கேழ்வரகுச் சட்டத்தை வாபஸ் வாங்கு! பதவியைராஜிநாமாச் செய்!

**பஞ்சா :** டேய், பழைய சோற்றுப் பானை ! நீ ஒசிக்கு இங்கே வந்திருப்பவன் ! ஓசி காப்பிக்காக ஏன் உயிரை விடுகிறாய் ?

**சிதம்பரம்:** அக்கா கஷ்டத்தில் தம்பிக்கும் பங்குஉண்டு, அத்தான் ! எங்க அக்கா பிறந்த உடனே அவள் நாக்கிலே விளக்கெண்ணெயைத் தொட்டு வைக்க வில்லையாம்! காப்பியைத்தான் வைத்தார்களாம் !

**பஞ்சா :** அதுதான் அவள் நாக்கு அத்தனை சூடாக ஆடுகிறது !

**ஜகதீசன் :** காப்பி ரக்ஷண சமிதி தலைவர் ஒன்றும் பேசவில்லையே ?

**மீனு :** இதோ பேசப் போகிறேன் ! கால வரையற்ற நேரடி சத்தியாக்கிரகத்தைத் தொடங்க வேண்டியதுதான் !

**சிதம்பரம் :** பிரதேச காப்பி போஷணைத் தலைவர் அபிப்பிராயம் ?

**ராஜு :** என் திட்டம் தயார் ! இந்தக் கேழ்வரகுச் சட்டத்தைக் கூழாய்க் கரைத்துச் சாக்கடையில் கொட்ட வேண்டும்.

**பஞ்சா :** வயிற்றிலே கொட்டிக் கொள். புத்தி தெளியும் ! அட கன்னைக்காய் ! மேல் நாடுகளிலே, வைட்டமின் இருக்கு என்று கேழ்வரகு சூப்பிலே ஒவ்வொருத்தன் அண்டா அண்டாவாகக் குடிக்கிறான் ! நல்ல வழக்கத்தைப் பரப்பலாமென்றால் அதற்கு இத்தனை எதிர்ப்பு, ஆர்ப்பாட்டம், கூச்சல் ! அறிவு கெட்ட ஜடங்களா ? இந்த வினாடி முதல் இந்த வீட்டில் கேழ்வரகுக் கூழ்தான். காப்பி கிடையாது. உங்கள் கூட்டு முன்னணி எதிர்ப்புக்கு நான் அஞ்சப் போவதில்லை. இந்த வீட்டுக்குத் தலைவன் நான்.

(எழுந்து வெளியே போகிறார். இவ்வளவு நேரம் பக்கத்து வீட்டுக் கிழவனார் அண்ணுசாமி உள்ளே வருகிறார்.)

**அண்ணுசாமி :** என்னம்மா பெரிய மகா நாடு மாதிரிக் கூடிப் பேசிக் கொண்டிருக்கிறீர்கள் ? என்ன விஷயம் ?

**ஜகதீசன் :** வாங்க, தாத்தா ! எல்லாம் மாமாவின் கூத்தைப் பற்றித்தான் ! வீட்டிலே இனிமேல் யாரும் காப்பி குடிக்கக் கூடாதாம் ! கேழ்வரகுக் கூழ்தான் குடிக்க வேண்டுமாம் !

**அண்ணுசாமி :** பேஷ் ! நீங்கள் எல்லாம் எதிர்த்துப் புரட்சி நடத்துகிறீர்களாக்கும் ? நீங்கதான், காப்பிரத்தின, காப்பி பூஷண, காப்பி ஸ்ரீகளாச்சே ! கோளாறு காப்பியிலும் இல்லே ! கேழ்வரகிலுமில்லே ! அசட்டுப் பஞ்சாமிர்தம் நம் நாட்டு சம்பிரதாயத்துக்கு விரோதமாக வீட்டு நிர்வாகத்தைத் தன் கையிலே வைத்துக் கொண்டிருக்கிறான் பாரு ! அதிலே கோளாறு ! எல்லா வீடுகளையும் போல்

வீட்டு அம்மாள் கையில் நிர்வாகம் இருக்க வேண்டும்! அப்படித்தானே !

பெரியநாயகி : ஆமாம் ! அவருக்கு மாத்திரம் கேழ்வரகோ, தவிடோ, பருத்திக் கொட்டையோ கொடுத்து விட்டு எங்கள் பாட்டை நாங்கள் பார்த்துக் கொள்வோம் !

அண்ணுசாமி : பதவி மோகம் அவனுக்கு இல்லே ! உன்னிடம் தான் இருக்கிறது. இந்த அசட்டுப் பஞ்சு பேசாமல் உன் கையில் பொறுப்பை ஒப்படைத்துவிட்டுப் போகலாம்! நான் பார்த்துச் சொல்றேன் !



(போகிறார்)

[மறுநாள் காலை. அடுக்களையில் பஞ்சாமிர்தத்தைத் தவிர எல்லோரும் கூடியிருக்கிறார்கள். பஞ்சாமிர்தம் கோபத்துடன் ஸ்நான அறையிலிருந்து வருகிறார்.]

பஞ்சாமிர்தம் : என்ன இங்கே கும்பல் ! ஏன் அடுப்புப் புகையக் காணோம்? கூழ் தயாராயிற்று, இல்லையா ?

மீனு : இந்த வீட்டில் இனிமேல் காலையில் அடுப்புப் புகையாது. சத்தியாக்கிரகம்.

ராஜு : உங்களுடைய கேழ்வரகுமா மூட்டை விறகு அறையில் இருக்கிறது. கரிச் சாக்குக்குப் பக்கத்தில் !

பஞ்சா : உங்க அம்மா எங்கே ?

மீனு : அவளை இப்போது யாரும் பார்க்க முடியாது !



பஞ்சா : தெரியும். ரகசியமாக எலக்ட்ரிக் ஸ்டவ் வைத்து ஸ்டோர் ரூமில் காப்பி போடுகிறாள். அது சட்ட விரோதம் ! நான் தடியடி நடத்துவேன்.

சிதம்: செய்யுங்கள்! அதற்கான விசாரணையை நாங்கள் நடத்துவோம்! எழுத்தாளர் பஞ்சாமிர்தம் என்ற பெயருக்குப் பதிலாகத் தடியடிப் பஞ்சாமிர்தம் என்ற பெயரோ, தடிக்கம்பு பஞ்சாமிர்தம் என்ற பெயரோ நிலைத்து விடும்.

ஜகதீசன்: ஏன்! 'வரகுக் கூழ் அமிர்தம்' என்ற பெயரில் அவர் நிறைய கதை கட்டுரைகள் எழுதலாம். அல்லது பஞ்சாமிர்தம் என்ற பெயருக்குப்பதிலாகக் 'கூழாமிர்தம்' என்ற பெயரையே கூடத் தமக்குச் சூட்டிக் கொள்ளலாம்.

பஞ்சா: நான்சென்ஸ்! அபத்தம்! கலாட்டா மனுே பாவம் உங்களுக்கு ஜாஸ்தியாகப் போச்சு! இன்னமும் நேரமிருக்கிறது. நீங்கள் விரும்பினால் ஒருவித சமரசத்துக்கு வரலாம். வரகுக்கூழில் ஒரு ஸ்பூன் காப்பிப் பொடி போட்டுக்கொள்ள நான் சட்டத்தை மாற்றுகிறேன்.

ராஜு: வேண்டாம்! சமரசம் வேண்டாம்! நாளைக்குத் திடீரென்று ஒரு கரண்டி சீயக்காய் பொடியைப் போட வேண்டும் என்பீர்கள்! வழக்கம்போல் அம்மா இந்த வீட்டுத் தலைமைப் பதவியை எடுத்துக் கொள்ளும்வரை நாங்கள் எங்கள் போராட்டத்தைக் கைவிட மாட்டோம்! தைரியம் இருந்தால் தலைமைப் பதவிக்கு எங்க அம்மாவுடன் நீங்கள் போட்டி போடலாம்!

பஞ்சா: என்னைக் கவிழ்ப்பதுதானே உங்கள் ஒரே லட்சியம் ?

[வாசலில் யாரோ எட்டிப் பார்க்கிறார்கள். பஞ்சாமிர்தம் கூடத்துக்கு வருகிறார்.]

வந்தவர்: நமஸ்காரம், சார்! நீங்கதானே இருவாளர் பஞ்சாமிர்தம்?...பத்திரிகைகளில் கதை கட்டுரை...



பஞ்சா: ஹி! ஹி! நான்தான் பஞ்சாமிர்தம்! உட்காருங்கள்! நீங்கயார்ன்னு தெரியலியே !

வந்த: நான் அகில இந்திய காபி பான அபிவிருத்திக் கமிட்டியின் பிரதிநிதி. எங்கள்கமிட்டிக்கு உங்களைப்பற்றி ஒரு தகவல் வந்தது !

பஞ்சா: (திடுக்கிட்டு) என்னைப்பற்றியா?

வந்த: ஆமாம்! உங்கள் எழுத்து வன்மையைப் பற்றியும் அதில் மறைந்து நிற்கும் பிரசார சக்தியைப் பற்றியும் எங்களுக்குச் சமீபத்தில் தெரிய வந்தது. நல்ல பேச்சாளர் என்று கூடத் தெரிந்து கொண்டோம்.

பஞ்சா : (பெருமிதத்துடன்) சந்தோஷம்! என்

னுடைய எழுத்து ஒரு தனிக் கலை!...

**வந்த:** உங்களையும் உங்கள் பிரசார வன்மையையும் எங்கள் காப்பி அபிவிருத்திக் கமிட்டி உபயோகித்துக் கொள்ளத் தீர்மானித்திருக்கிறது. உங்களைப் போல் அரசாங்கச்சார்பற்ற பத்துப் பேர்கள் கொண்ட தூது கோஷ்டியை, ரஷ்யா, சைபீரியா, அலாஸ்கா முதலிய நாடுகளுக்கு அனுப்ப முடிவு செய் திருக்கிறது. தூது கோஷ்டியின்தலைவர் நீங்கள்.

**பஞ்சா:** (ஆனந்தத்துடன்) ராஜு! ராஜு! (வேகமாக வந்த ராஜுவிடம் தணிந்த குரலில்) உங்க அம்மா போடற காப்பியில் என் நண்பருக்கு ஒரு டம்ளரும் எனக்கு ஒருடம்ளரும் சீக்கிரம் கொண்டா!

*(ராஜு போகிறான்)*



**வந்த:** உங்கள் புகைப்படம் மாத்திரம் ஒன்று கொடுங்கள். பாஸ்போர்ட் விசாவெல்லாம் நாங்களே ஏற்பாடு செய்து கொள்கிறோம். இன்னும் சில குறிப்புகளும் தேவை.

**பஞ்சா:** என் வாழ்க்கைக் குறிப்புகளா? வந்து..நான் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து...

**வந்த:** இல்லை!...உங்கள் குடும்பத்தில் காப்பி அபிமானம் எப்படி என்ற குறிப்புகள்! உங்களுக்குக் காப்பிமேல்...

**பஞ்சா:** ஒரே பக்தி சார்! எழுத்தாளனுக்குக் காப்பிதான் பேச்சு! காப்பிதான் மூச்சு!...தினம் பதினைந்து தடவைகள் குடித்தாக வேண்டும். மாதம் ஏழு வீசை காப்பிக் கொட்டை வாங்குகிறேன். எங்கள் குடும்பத்தினரும் அப்படியே!

**வந்த:** பேஷ்!...சந்தோஷம்! காப்பி பிடிக்காதவர் தூதுகோஷ்டியில் போய்ப் பிரயோசனமில்லையே!...நான் இன்னும் மூன்று வாரத்தில் பாஸ்போர்ட், விசா முதலியவற்றுடன் வருகிறேன். பிரயாண ஆடைகளை டில்லியில் நாங்களே வாங்கிக் கொடுத்து விடுவோம். ...இந்த விஷயம் நீங்கள் புறப்படும் வரை ரகசியமாக இருக்கட்டும். அப்புறம் போட்டி கிளம்பும்...அதற்குள் நீங்கள் காப்பி பானத்தின் முக்கியத்துவம் பற்றி இருபது பக்கத்தில் ஒரு கட்டுரை எழுதி வையுங்கள். அதை ரஷ்ய மொழியில் அச்சடிக்க வேண்டும்!

*[ராஜு காப்பி கொண்டு வருகிறான். வந்தவர் காப்பியைக் குடித்து விட்டுக் கிளம்புகிறார். பஞ்சாமிர்தம் புகைப்படத்தைக் கொடுத்து அனுப்புகிறார்.]*

**பஞ்சா:** (காப்பியைக் குடித்துக்கொண்டே) காப்பி பிரமாதம்! உங்களுக்காகத் திருட்டுத்தனமாகப் போடப்பட்டதல்லவா!...டேய், பயலே! அந்தக்கேழ்வரகு மூட்டையைத் தூக்கி நம்ப பால்காரன் கிட்டே தள்ளு! இனிமேல் மீண்டும் காப்பிச் சட்டம் நம் வீட்டில் அமுலாகிறது! நான் அலாஸ்கா போகப் போகிறேன். அங்கு நல்ல காப்பி கிடைக்குமோ என்னவோ! கூடவே இரண்டு தடவைகள் புறப்படும் வரை குடிக்க வேண்டியதுதான்.

*(அதைக் கேட்டதும் ராஜு சிரித்துக் கொண்டே போகிறான்.)*

* * *

அருமாதம் கழித்து ஒரு நாள் காலை பத்துமணி இருக்கும். பஞ்சாமிர்தம் தபால்காரனை மிகுந்த ஆவலுடன் எதிர்பார்த்து உட்கார்ந்து கொண்டிருக்கிறார். ராஜு அவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறான்.

**பஞ்சா:** (திகைப்புடன்) என்னடா!...காப்பி அபிவிருத்தி கமிட்டியிலிருந்து ஒரு கடுதாசியும் வரக் காணோம்.

**ராஜு:** வராதப்பா!

**பஞ்சா:** அட சீ! அபசகுனம். அலாஸ்காவும் சைபீரியாவும் என்ன ஆவது?

**ராஜு:** அவை ஓரிடமும் போகாது! அங்கேயே இருக்கும் (மெதுவாக) நீங்களும் இங்கேயே இருப்பீர்கள்.

**பஞ்சா:** என்னடா உளறுகிறாய்? நான் போட்டிருந்த திட்டமெல்லாம் என்ன ஆவது?

**ராஜு:** உண்மையை உளறட்டுமா? அன்றைக்கு வந்து காப்பியான அபிவிருத்தி கமிட்டி அங்கத்தினர்போலக் கதையளந்தாரே அவர் நமது அடுத்த வீட்டு அண்ணாசாமியின் உறவுக்காரர். அண்ணாசாமித் தாத்தாதான் நம் வீட்டுப் பிரச்னைக்கு முடிவு காண அந்த வழியை ஏற்பாடு பண்ணினார்! நீங்க அலாஸ்காவுக்குப் போக வேண்டாம்! அல்லா பிச்சை கடையிலே போய் நல்ல பிளான்டேஷன் காப்பிக் கொட்டையாக இரண்டு வீசை வாங்கி வந்தால் போதும்! உங்களுக்குத்தான் அந்தமாதிரி கதையளந்தால் உச்சி குளிர்ந்து போகுமே! உடனடியாக, வரகு போச்சு! காப்பி வந்தது!...

**பஞ்சா:** அட பாவி! சதி! சதி!...ஜனநாயக முறையா இது! நீங்கள் எல்லோரும் கூட்டுச் சேர்ந்து செய்த காரியமா?

**ராஜு:** உங்கள் கதாநாயகனுக்குக் கூட உங்கள் ஆர்ப்பாட்டம் பிடிக்காதே! எங்களுக்கா பிடிக்கும்! இதோ அம்மா ஸ்டிராங்காக இரண்டாவது டோஸ் காப்பி கொண்டு வருகிறாள்! பேசாமல் குடியுங்கள்!

**பஞ்சா:** சொல்லிவிட்டேன். இந்த வீட்டிலே இனிமேல்.....

**ராஜு:** என்ன?

**பஞ்சா:** மூன்றுவேளை காப்பிக்குப் பதிலாக நான்கு வேளை காப்பி!

*(மடமடவென்று காப்பியைக் குடிக்கிறார்!)*

# காந்தரால்




(காந்தாரிடின் கூந்தல் தைலம்)

காந்தரால் ஆலிவ் எண்ணையும் மற்றும் தாவர எண்ணைகளும சாஸ்திரிய முறையில் கலந்தது. சேர்த்தியான நறுமண முள்ளது.

5 அவுன்ஸ் சீசா கார்ட்டனிலும்
10 அவுன்ஸ்சீசா கார்ட்டன் இல்லாமலும்
கிடைக்கும்

தி கல்கத்தா கெமிகல் கம்பெனி லிட்.
கல்கத்தா - 29

தென்னிந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை - 1

---

## நவராத்திரி விற்பனை

உங்கள் ஜவுளி
தேவைகளுக்கு

# ராதா ஸில்க்

## எம்போரியம்

14, ஸன்னதி தெரு - மயிலாப்பூர் - மதராஸ் - 4

போன்: 71188

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 121. அக்ஷய பாத்திரங்கள்

தமிழ்க் காவியம் [இல்லே, இல்லே, காப்பியம்] ஒன்றில் ஒரு அக்ஷய பாத்திரத்தைப் பற்றிய விருத்தாந்தம் வருகிறது. ஒரு மாதரசியின் தவத்தையும் வைராக்கிய மனப்போக்கையும், புளியம் பழம் அதன் ஓடு இவைகளைப்போல் உலகத்துடன் ஒன்றியும் ஒன்றுது பற்றற்றுமுள்ள வாழ்க்கைத்தரத்தையும் கண்டு மனம் நெகிழ்ந்த ஒரு தெய்வ மாது அவருக்கு ஒரு பாத்திரத்தை அளித்தனராம். அப் பாத்திரமோ எடுக்க எடுக்க வற்ருது நிரம்பி நிற்கும் அறுசுவை உண்டியை அளிக்கவல்ல தெய்விக சக்தி வாய்ந்ததாயிருந்ததாம். இப்படி ஒரு கதையல்லவா மணிமேகலை என்னும் காவியம்!

ஓயாது தீராது ஒழுகிக்கொண்டே இருக்கும் சீழுடன் கூடிய காதுகளைப் பற்றி எண்ணுங்கால் இந்த அக்ஷய பாத்திரம் நினைவுக்கு வருகிறதில்லேயா! இவர்களுக்கு என்ன செய்வது? சீழை நிறுத்த என்ன சிகிச்சை செய்யலாம்?

திரௌபதியிடம் கூட ஒரு அக்ஷய பாத்திரம் இருந்ததாம். பாண்டவர்கள் வனவாசம் செய்த காலத்தில் இதைப் பெற்றிருந்ததாகப் பாரதக் கதை. எத்தனை பேருக்கு வேணுமானாலும் இதிலிருந்து கிடைக்கும் உண்டிப் பொருள்களை விளம்பிக்கொண்டே இருக்கலாம். நல்ல காரியங்களுக்கு இந்த அக்ஷய பாத்திரம் பயன்பட்டது. அப் பாத்திரம் மட்டும் வறண்டு போகுமானல்...? நல்லோர் பலர் வயிற்றுப் பசியோடு பரிதவிக்க நேர்ந்திருக்குமல்லவா?

நமது காதினுள்ளும் தானகவே கசியும் ஒரு நெய்ப்புத் திரவம் உண்டு. காது நன்முறையில் இயங்குவதற்கு அது உதவுகிறது. இந்நெய்ப்புத் திரவம் கசிவதே தெரியாது. ஆனல் இதன் கசிவு குறைந்தாலோ....? காதில் வறட்சி.... குறு குறுவென்ற நமைச்சல் சில சமயம் ஒருவித வலி குத்தல் என்று இப்படி ஏற்படுவதோடு கடைசியில் ஒரு நிலேயில் காதுகளில் ஒருவித சத்தமும் ஏற்படக் காரணமாகும். இவ்விதம் பசைப்பொருளின் கசிவுக் குறைவினல் ஏற்படும் காதின் உபாதைகளில்தான் ஒன்றிரண்டு சொட்டு காய்ச்சிய எண்ணெயை விடுவதும், உடனே ஓரளவு சமனம் ஏற்படுவதும் வழக்கம்.

அன்றன்றைக்கும் வந்தவருக்கு உண்டியளித்து, பாண்டவருக்கும் பரிமாறிக் கொடுத்து, தானும் உண்ட பிறகு திரௌபதி பாத்திரத்தைக் கழுவி வைத்து விட்டாள்......நன் முறையில் பயன்படுதல் முற்றுப் பெறுமானல்.... பிறகு அக்ஷய பாத்திரத்தில் உண்டிப் பொருள்கள் கிடைக்கக் கூடாது.... கிடைக்கவும் செய்யாது. காதினுள் கசியும் நெய்ப்புத் திரவமும் இப்படியேதான். காதுகள் நன்முறையில் இயங்குவதற்குத் தேவையான அளவில் இக்கசிவு உண்டாவது நியாயம்; உண்டாக வேண்டும். உண்டாகவும் செய்கிறது. வேண்டாத நேரத்தில் வேண்டாத அளவில் வேண்டாத உருவில் இக்கசிவு ஏற்படலாமோ?

முன்கூட்டியே செய்த ஏற்பாட்டின்படி முறையற்ற வகையில் அக்ஷய பாத்திரத்தை உபயோகிக்க முற்பட்டான் துர்வாஸ முனிவன். காலந் தாழ்ந்து வந்தான். நல்லெண்ணத்தாலா? அல்ல, அவனுக்கு விருந்தோம்புதல் நியாயமாகுமா? ஆகாது. அதற்காக அக்ஷய பாத்திரம் பயன்படலாமா? கூடாது. ஆகவே 'நியதி'யின் போக்கையொட்டிச் சம்பவங்கள் ஏற்பட்டன. திரௌபதி அக்ஷய பாத்திரத்தைக் கழுவி வைத்தாயிற்று. பிறகு துர்வாஸனுக்கும் அவன் சிஷ்யர் பதினுயிரம் பேர்களுக்கும் சோறு போட முடியுமா? சாத்திக வேணுமென்ற தீய எண்ணத்துடன் வந்த முனிவன் செய்த சூழ்ச்சியால் திரௌபதிக்கு ஒரு இடக்கான நிலே ஏற்பட்டது. அக்ஷய பாத்திரத்தைப் பயன்படுத்தியதாகவும் வேணும், பயன்படுத்தவும் முடியாத என்ற இக்கட்டான நிலேயைச் சதியின் விளேவாக உண்டாக்கினன் துர்வாஸன். நமது அஜாக்கிரதை அபத்தியங்களின் காரணமாகக் காதில் கசிவை அதிகரிக்க நாம் செய்வதுபோல். அதனுலென்ன? எல்லோருக்கும் பாரதக் கதை தெரியுமே. ஆனல் காது விஷயத்தில்...? நமது அஜாக்கிரதை அபத்தியங்கள் இவற்ருல் அவசியமில்லாத கசிவு, அவசியமில்லாத அளவில் கசியத் தொடங்கினல்....?

இந்நிலேயில் காதில் விடவேண்டிய அல்லது விடக்கூடிய மருந்துகள் சில. தலேக்குத் தேய்க்க வேண்டிய தைலங்கள் சில. அனுசரிக்க வேண்டிய பத்தி

யங்கள் சில. காதில் விடக்கூடிய மருந்துகளில் சிலவற்றை ஏற்கெனவே தெரிவித்தாயிற்று. மேலும் இவ்வகையில்....

வேப்பெண்ணெயைச் சிறிது சூடாக்கி ஒன்றிரண்டு சொட்டு காதில் விட்டுப் பஞ்சினால் மூடினால் காதில் ஏற்படும் குத்தல் வலி இவை நிற்குமென்று மட்டுமில்லாது காதில் ஏற்படும் அனுவசியமான கசிவும் — அது சீழானாலுஞ் சரி... நீரானாலுஞ் சரி ....நின்று விடும். தொடர்ந்தும் உபயோகிக்கலாம்.

வில்வத்தின் வேரிலிருந்து எடுக்கும் சுடர்த் தைலத்தில் ஒவ்வொரு சொட்டு காதில் விட்டு வந்தால் குடங் குடமாகக் கொட்டும் சீழ் நின்றுவிடும். இந்தத் தைலத்தைச் செய்வது எப்படி?

கால் கட்டைவிரலின் கனத்தில் சுமார் ஒரு முழ நீளமுள்ள துண்டு வில்வத்தின் வேர் இதைத் தேர்ந்தெடுக்க வேணும். இந்தத் துண்டின் ஒரு நுனியில் 2, 3 அங்குல தூரம் வரையில் ஒரு மெல்லிய துணியைச் சுற்ற வேண்டும். இதற்கு இரண்டு விரல் அகலத்தில் ஒரு சீலையை எடுத்து முதலில் ஒருதரம் வேரைச் சுற்றி, இரண்டாவது சுற்றில் முதல் சுற்றின் ஒரு பாகம் சீலை மறையும்படி சுற்றி மூன்றாவது சுற்றில் இரண்டாவது சுற்றின் சீலை ஒரு பாகம் மறைவது போல் சுற்றி...'இப்படியாகப் போலீஸ்காரன் முழங்காலுக்குக் கீழ் ஒரு பட்டி கட்டுவதுபோல் சுற்ற வேண்டும்.



பாடகர் மனைவியிடம் 'அடியே! என் சிஷ்யை கொனு பார்க்க வர்றது. அது பாட ஆரம்பிக்கறதுக்கு முன்னே வெத்திலை, பாக்கு, பழம், கண்டம் கொடுத்து அனுப்பிடு! அது அபஸ்வரம் பாடினால் சகிக்காது.

பிறகு, சீலைப் பட்டி சுற்றிய பாகம் மூழ்கிடும்படி அவ் வேரை நல்லெண்ணெயிலோ அல்லது சிறப்பாகத் தேங்காயெண்ணெயிலோ, மேலும் சிறப்பாக வேப்பெண்ணெயிலோ இட்டு வைக்கவும். ஒரு தினம் இவ்விதம் இது ஊறிக் கொண்டிருக்கும்படி விட்டு வைக்கவும்.

மறுநாள் இதை எடுத்துச் சீலைப்பட்டி சுற்றியுள்ள நுனி சிறிது தாழ்ந்திருக்கும்படி பிடித்துக் கொண்டு, எண்ணெயில் ஊறியுள்ள சீலையைத் தீபம்போல் எரியப் பொருத்தி விடவும். எரியும் போது அந் நுனியைச் சிறிது அமர்த்திப் பிடித்திருப்பதால் தீபத்திலிருந்து எண்ணெய் சொட்டுவது போலவே, இதிலிருந்தும் எண்ணெய் சொட்டும். இவ்வாறு சொட்டும் எண்ணெயை ஒரு கோப்பையில் ஏந்தி ஏற்கவும். எரியும் தீயிலிருந்து சொட்டும் எண்ணெய்க்குத் தக்கபடி சொட்டுச் சொட்டாக முன் ஊறிவிட்ட எண்ணெயைச் சீலையின்மேல் விட்டுக் கொண்டே இருக்க வேண்டும். ஒரேயடியாக எண்ணெயை ஊற்றி எரிந்து கொண்டிருக்கும் தீயை அணைத்து விடக் கூடாது. எண்ணெய் மிகக் குறைவாக விட்டுச் சீலைத் துணி எரிந்து வில்வத்தின் வேரும் கருகிச் சாம்பலும் கரியுமாகப் போய்த் தீரவும் விடக்கூடாது. நூல் திரியிட்டு நல்லெண்ணெய் விட்டுப் பொருத்திய தீபம் எரிவது போல்தான் இங்கும் பொருத்திய நுனியை எரியவிட வேண்டும். எரியும் தீபத்தின் சுடரிலிருந்து எண்ணெய் சொட்டுச் சொட்டாகச் சொட்டுவதுபோல் இதிலிருந்தும் சொட்டும். அவ்வாறு சொட்டுவதற்குத் தக்கபடிதான் சொட்டுச் சொட்டாக மேலே எண்ணெயை விட்டு வரவும் வேண்டும். இப்படிக் கிடைக்கும் தைலத்தைத்தான் சுடர்த் தைலம் என்பர்.

வரவர இதெல்லாம் கனம் மிகுந்ததாகுமல்லவா? இதை ஒன்று அல்லது இரண்டு சொட்டுதான் காதில் விட்டுப் பஞ்சினால் மூட வேண்டும். ஆகவே துளிக்கணக்கில் விடக்கூடிய கனத்தில் உள்ளவிதம் இத் தைலத்தைத் தயாரிக்க வேண்டும். அவ்விதம் தயாரானதை ஒரு நல்ல புட்டியில் கண்ணாடி மூடியிட்டு எடுத்து வைத்துக் கொண்டு மேற்சொன்ன விதம் ஒன்றிரண்டு துளி மட்டும் காதில் விட்டு வந்தால் குடங்குடமாய் ஒழுகும் சீழ் நின்றுவிடும். இடைரென்று நின்றுபோன சீழின் ஒழுக்கு, காதில் கட்டி நின்று, காதின் கீழ்ப்புறத்திலோ காதின் சுற்றுப் புறத்திலோ வீக்கம் வலி என்று இப்படி உபத்திரவங்கள் ஏற்படுவது, அதைத் தொடர்ந்து ஜுரம் - மறுபடியும் காது வலி குத்தல் ஒன்றும் ஏற்படாது.

# எவ்வளவு நல்லது!



# பிரிட்டானியா

பிரிட்டானியா பிஸ்கட்டுகளை வழங்கும் ஒவ்வொரு சமயத்திலும் முகமலர்வதைப் பாருங்கள்! சிறுவர்களுக்கு ஏற்றவை ...... பிரிட்டானியா பிஸ்கட்டுகள் தினசரி உணவில் குறைவுபட்டுப்போகும் ஆரோக்கியமளிக்கும் போஷாக்குச் சத்துக்கள், வலிமையூட்டும் வைட்டமின்கள் ஆகியவற்றால் நிரம்பப்பெற்றிருக்கின்றன. உங்கள் குழந்தைகள் ஆரோக்கியமாயும் திடகாத்திரமாயும் இருக்கட்டும் — பிரிட்டானியா பிஸ்கட்டுகள் வெகு எளிதில் ஜீரணமாகக் கூடியவை.

வயதுமுதிர்ந்த விவேகிகள் அவற்றின் உச்சதரசுவை, தின்பதற்கு ஏற்றதன்மை காரணமாக பிரிட்டானியா பிஸ்கட்டுகளையே விரும்பிக் கேட்கிறார்கள்.

**பிரிட்டானியா பிஸ்கட்டுகள்**

*நீங்கள் வாங்கக்கூடிய சிறந்த ஒன்று*

தி பிரிட்டானியா பிஸ்கட் கம்பெனி லிட்.

BC 3824

# கண்கள் உறங்காவோ?

## அத்தியாயம் 11

## சதியும் விதியும்

அடிபட்ட மான்போல் உள்ளமும் உடலும் துடிக்க வீடு வந்து சேர்ந்தாள் மாலா. அவள் தன்னை அடக்கிக் கொள்ளத்தான் முயன்றாள். 'இனிமேல் என்ன இருக்கிறது? நான் கட்டிய மனக் கோட்டை தவிடுபொடி யாகிவிட்டது. இனி அத்தானைப் பற்றி நினைப்பதற்கே இல்லை' என்று தன்னைத் தானே தேற்றிக் கொள்ளத்தான் முயன்றாள். ஆனால் முடியவில்லை. வாசற் கதவைத் திறந்த தாயார், "என்னடி, பாதிச் சாப்பாட்டிலே எழுந்திரிச்சு ஓடினே; போன காலோட திரும்பிட்டியே?" என்று கேட்டபோது அடக்க முடியாமல் "அம்மா!" என்று அலறியவாறு அவள் மீது சாய்ந்து விட்டாள்.

தைலம்மாள் பதறிப் போனாள். அவள் மனம் விபரீதத்தையே எண்ணியது. சற்று முன்தான் அண்டை வீட்டுக்காரி ஒருத்தி வந்து, அன்று மாலையில் புங்கனாற்றில் நடந்த துயரச் சம்பவத்தைச் சொல்லிவிட்டுப் போயிருந்தாள். அதைக் கேட்டது முதல், வீணாவின்மீது இருந்த வெறுப்பை யெல்லாம் மிஞ்சிக்கொண்டு, அவளுக்கும் தானாவதியினால் ஏதேனும் அவக்கேடு ஏற்பட்டு விடுமோ? அதனால் அவளும் அத்தகைய முடிவை எட்டி விடுவாளோ என்று தைலம்மாளின் உள்ளம் கலங்கிக் கொண்டிருந்தது. அந்தக் கலக்கத்துக்குக் கடுக்காய் கொடுத்தது, இப்பொழுது மாலா அழுதுகொண்டே வந்து, "அம்மா!" என்று அவள் மீது விழுந்து கதறியது. ஆகையால் அவள் உடனே, "ஐயோ! என் தலையிலே கல்லைப் போட்டுட்டாளே அந்த நாசமாய்ப் போறவ!" என்று பெரிதாக ஒப்பாரி வைக்கத் தொடங்கினாள்.

அவளுடைய ஒப்பாரி திண்ணையில் படுத்திருந்த சச்சிதானந்தத்தின் தூக்கத்தைக் கலைத்து விட்டது. "என்ன, அக்கா?" என்று கேட்டவாறு அவர் எழுந்து ஓடி வந்தார்.

"உன் மகள்...உன் மகள்..." என்று மேலே பேச வராமல் தேம்பினாள் தைலம்மாள்.

"ஆ! வீணாவுக்கு என்ன?" சச்சிதானந்தத்தின் சப்த நாடிகளும் ஒடுங்கிப் போய்விட்டன.

"நான் அன்றைக்கே சொன்னேனே, கேட்டியா பாவி! மகளை உசிரோடத் தூக்கிக் கொடுத்திட்டியே, ஆசுபத்திரின்னும், அதுன்னும், இதுன்னும் வைச்சுக் கொடுத்து...!"

"வீணாவுக்கு என்ன நேர்ந்து விட்டது, அக்கா?"—சச்சிதானந்தம் கதறினார்.

"அவள் போயிட்டாளாண்டா நம்ம தலையிலே கல்லைப் போட்டுட்டு..."

இதுவரையில் தன் துயரமே பெரிதாக அவர்கள் பேச்சைக் காதிலே போட்டுக் கொள்ளாதிருந்த மாலா இப்பொழுது திடுக்கிட்டாள். தாய் தனது அழுகையை வேறுவிதமாகக் கருதிவிட்டதைக் கண்டதும் அவள் குறுக்கிட்டாள்: "அம்மா! அம்மா! நீ என்னம்மா சொல்றே? அக்காளுக்கு ஒன்றும் இல்லை, அம்மா; அவள் நல்லாத்தான் இருக்கிறாள்!"

தைலம்மாள் திகைப்படைந்தாள். "அடி, பாவிப் பெண்ணே! பின்னே எதுக்காக 'அம்மா!' என்று அழுதுக்கிட்டு ஓடி வந்தியாம்!" என்று அவள் வியப்புடன் கேட்டாள்.





"அது...அது..." மாலா விசும்பினாள்.

சச்சிதானந்தமும் தமது அதிர்ச்சியிலிருந்து இப்பொழுது மீண்டு விட்டார். "என்ன நடந்தது, மாலா? நீ எங்கே போயிருந்தாய்?" என்று வினவினார்.

மாலா பதில் சொல்லவில்லை. அவளுக்குப் பதிலாகத் தைலம்மாளே வெடித்தாள். "உனக்கு மகள் ஆசுபத்திரி வைச்சு அடிச்சுக்கிட்டு இருக்கிற கூத்து பெருமையா இருக்குதடா, தம்பி! ஆனா அதனாலே எப்போ என்ன சிறுமை வந்துடப் போகுதோன்னு நாங்க வவுத்திலே நெருப்பைக் கட்டிக்கிட்டு இருக்கோம். உனக்குச் சங்கதி தெரியுமா? தானாவதி வவுத்து வலின்னு இன்னைக்கு அவன் ஆசுபத்திரிக்கு வந்தானாம். அவனை அங்கேயே படுக்க வைச்சு வைத்தியம் பார்த்துக்கிட்டிருக்காளாம் உன் மகள்! இது நல்லத்துக்கா, தம்பி! நீயே நினைச்சுப் பாரு. இது நல்லதுக்கான்னு!"

"தானாவதியையா?" என்று கேட்ட போது சச்சிதானந்தத்தின் முகத்தில் பீதி நிறைந்தது.

"ஆமாம்; அதைத்தான் மாலா கிட்டே சொன்னேன். உடனே என் மகள், 'ஐயோ! அக்கா 'நர்சைச் சாப்பிட 'அனுப்பிப்போட்டுத் தனியா இருக்கப் போறேனே'ன்னு பதறிக்கிட்டு ஓடிப் போனா; போனவள் அழுதுகிட்டே வந்து நிற்கிறா. அங்கே என்ன நடந்திச்சோ? அட செந்திவேல் முருகா!" தைலம்மாளின் ஒப்பாரி சுருதி ஏறி ஒலித்தது.

"என்னம்மா, மாலா! வீணாவுக்கு ஒன்றும் இல்லையே?" என்று கேட்டார் சச்சிதானந்தம்.

"ஒன்றுமில்லை, மாமா!" என்று அவள் அவரை நிமிர்ந்து பாராமலே பதில் அளித்தாள்.

"பின்னே ஏண்டி அலறிக்கிட்டு வந்தே, மூதேவி மாதிரி?" என்று தைலம்மாள் கடுகடுத்தாள்.

"குழந்தையை ஏன் விரட்டுறே, தைலம்மா? அது பாவம், ராத்திரி வேளை

யிலே தனியாக அங்கே போயிருக்குது. வழியிலே எதைப் பார்த்துட்டு அழுதுக் கிட்டு வந்திருக்கிறதோ? அதை விவர மாகக் கேட்டுத் தெரிந்து கொள்ளாமல், கம்மாவானும் ஒப்பாரி வைத்து எல்லா ரையும் கலங்க அடித்து விட்டாயே! சரி, சரி, உள்ளே போங்கள், ஊர் கூடிட்டா உங்க அசட்டுத்தனத்தைப் பார்த்துச் சிரிப்பாய்ச் சிரிக்கப்போகுது!'' என்று சகோதரியைக் கடிந்துகொண்ட பிறகு சச்சிதானந்தம் மாலாவிடம் திரும்பி, ''வீணை இப்போ ஆஸ்பத்திரிலே தானே இருக்கிருன், மாலா?'' என்று கேட்டார்.

மாலா இப்பொழுதும் தலையை நிமிர்த் தாமல் ''ஆமாம்!'' என்ருள்.

''போ, தம்பி! என்னைப் பார்த்து ஊர் சிரிக்கப் போகுதன்னியே; உன்னையும் உன் மகளையும் பார்த்து ஊர் சிரிக்கிற துக்குள்ளே அங்கே போயி, அவன் வைத்தியம் பார்த்ததெல்லாம் போது மின்னு இழுத்துக்கிட்டு வா'' என்று தைலம்மாள் படபடப்பாக இரைந்து விட்டு, இன்னும் விசும்பல் அடங் காமல் நின்ற மாலாவின் கையைப் பிடித்துக்கொண்டு உள்ளே சென்ருள். சச்சிதானந்தமும் படுக்கையின் மீது கிடந்த துண்டை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு வடக்குத் தெருவை நோக்கி நடையைக் கட்டினர். தானுவதி ஆஸ்பத்திரியில் இருக்கிருன் என்று அறிந் ததும் அவர் உள்ளமும் தொல்லைப்பட ஆரம்பித்தது.

உள்ளே வந்ததும் தைலம்மாள் மறு படியும் மகளிடம் எதற்காக அவள் அழுதுகொண்டு வந்தாள் என்பதை விசாரித்தாள். மாலா கேவிக்கொண்டே, ஆஸ்பத்திரியில் தான் கண்ட காட்சியை யெல்லாம் கூறினுள்.

தைலம்மாள் சிறிது வியப்படைந்தாள். ''யாரு, நம்ம சுந்தரமா அவன் கையைக் கோத்துக்கிட்டு இருந்தான்? அவங்க ரெண்டு பேருந்தான் ஒருத்தர் முகத்தை ஒருத்தர் பார்த்துக்கிடறதுகூட இல்லே என்று தானுவதி சொன்னுனே!''

''தானுவதியின் வார்த்தையை நீதான் நம்ப வேண்டும்.''

''சரி, எல்லாரிடமும் போய் சொல்லு ருப்போலே எங்கிட்டேயும் சொல்லிட் டான் போலிருக்கிறது. இருந்தாலும் மரகதத்தின் மகனும் அப்படி ஒண்ணும் ஒழுங்கானவனுகத் தெரியலே. அவனைப் பற்றி நான் பெருமையாய்த்தான் நினைச் சுக்கிட்டிருந்தேன். ஆனு என்றைக்கு அவன், அவள் ஆகாமப் போனவளின்னு தெரிஞ்சும், சும்மா சும்மா அவளைச் சுற்றிக்கிட்டிருந்தானோ, அப்பொழவே அவன் யோக்கியனில்லேன்னு நான் தெரிஞ்சுக்கிட்டேன்.''

''ஐயோ, அம்மா! ஆனுல் அவர் என்னை....அவரை நான்....''

தைலம்மாளின் உடலிலே திடீரென்று ஒரு புல்லரிப்பு. முடிந்தால் சுந்தரத்தை யும் மாலாவையும் இணைத்துவிட வேண் டும் என்ற எண்ணம் அவள் உள்ளத்தி லும் நிழலாடிக்கொண்டுதான் இருந் தது. ஆனுல் சுந்தரம் வீணையுடன் வரம்பு மீறிப் பழகத் தொடங்கிய பிறகு அவள் அந்த நினைவை அறவே விட்டுவிட்டாள். இப்பொழுது என்னடா வென்ருல், தன் மகளே அவன்மீது அளவற்ற ஆசை வைத்திருப்பதாக அல்லவா தோன்று கிறது! அப்படியானுல்...?

ஆசை வெட்கமறியாது என்றபோதில், மாலாவின் உள்ளத்தை அடைத்துக் கொண்டிருந்த வெட்கம் என்ற அணையும் இப்பொழுது உடைத்துக் கொண்டு விட்டது. அவள் தங்கள் காதலைப் பற்றி யும் வீணை அதற்குக் குறுக்குச்சுவராகத் தோன்றிவிட்டதைப் பற்றியும் தாயிடம் விரிவாகக் கூறி விட்டாள்.

விஷயத்தை அறிந்த தைலம்மாள் குதி குதி என்று குதித்தாள். ''நாசமாப் போறவ! என் மகளைத்தான் வாழ வொட்டாமல் வாயிலே போட்டுக் கிட்டா! இப்போ என் மகள் ஆசையிலே யும் மண்ணைப் போடப் பார்க்கிருளா? அவளைத் தொலைச்சுப் போடுறேன், தொலைச்சு'' என்று அவள் கறுவினுள்.

மாலாவுக்கு எரிச்சல்தான் வந்தது. அவள் சொன்னுள்: ''ஆமாம்; வாயாலே சளைச்சுக்கிட்டு இருக்கிறதுக்கு மேலே உன்னுலே என்ன நடக்கும்?''

''என்ன நடக்குமா? இந்த ஊரே கூடிக்கிட்டு அவள் பக்கத்திலே நின்னு லும், அவளையும் சுந்தரத்தையும் பிரிச்சு வைச்சு, அவனை உனக்குக் கட்டி வைக்கலேன்னுப் பாரு.''

''ஆனுல் அம்மா, மாமா?''

''அவன் கிடக்கிருன் போ. என் வார்த் தையை மீஞ்சிப் போயுடுவானு, அவன்?''

மாலாவுக்குத் தன் தாய் அசட்டுத்தன மாகப் பேசுவதாகவே பட்டது. அவர்கள் இருப்பது அவர் வீடு; உண்பது அவர் உணவு. இருந்தும் அவரைத் துரும்பாக நினைத்து வீரம் பேசுகிருள் தன் தாய்! என்னதான் மாமாவுக்கு அம்மாவிடம் பயமும், தன்மீது பரிவும் பாசமும் இருந் தாலும், அவையெல்லாம் பெற்ற மகள் மீதுள்ள பாசத்துக்கு இணையாகுமா? ஒருகால் மகளின் வாழ்வு எப்படியோ மறுமலர்ச்சி பெற்ருல் போதும் என்ற

# பழமைக் கொள்கைகள் மேலான வாழ்க்கைக்கு இடையூறாக இருக்கின்றனவா?



இக்காலத்து மனிதர்கள் என்று தற்பெருமை பேசும் பற்பலர் உண்மையில் பழமைக் கொள்கைகளையும் தப்பெண்ணங்களையும் விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டு வாழ்க்கையை மேம்படுத்த தங்களுக்குக் கிடைக்கும் சந்தர்ப்பங்களை வெறுத்துக்கொள்கிறார்கள்.

சமையல் கொழுப்பு விஷயத்தையே உதாரணமாக எடுத்துக் கொள்ளுங்களேன். எவ்வளவோ பேர்கள் சொல்லுகிறார்கள்: ''வனஸ்பதியால் சமைத்த சாப்பாட்டை நான் தொடுவதே கிடையாது. செயற்கையாகத் தயாரிக்கப்பட்ட கொழுப்பல்லவா அது! இயற்கையான கொழுப்புக்கு ஈடாகுமா?''. ஆனால் உண்மையென்னவென்றால் வனஸ்பதியைப் பொறுத்த வரையில் இயற்கைக்கு மாறாக எதுவுமே கிடையாது. உற்பத்தி செய்கையில் மேற்கொள்ளும் கறாரான கட்டுப்பாட்டை வேண்டுமானால் குறையாகச் சொல்லலாம்!

**உற்பத்தியின்பொழுது கறாரான கட்டுப்பாடு**

வனஸ்பதி தூய்மையான தாவரக் கொழுப்பு. அது வேர்க்கடலை எண்ணெய் மற்றும் நல்லெண்ணெயை சுத்தப்படுத்தி தயாரிக்கப்படுகிறது. மிகுந்த கவனிப்பின் கீழ் நவீனமான சிப்பந்திகளுக்குட்பட்டு சுகாதார சுத்தமான நவீன தொழிற்சாலைகளிலேயே அது தயாரிக்கப்படுகிறது. வனஸ்பதி மிகவும் சுத்தமானதுமட்டுமல்லாமல் எளிதில் ஜீரணிக்கக்கூடியதாயிருக்கிறது. அது சகல சமையலுக்கும் சாலச் சிறந்தது. ஏனெனில் அது உணவுப்பொருள்களின் சுவையை பரிமளிக்கச் செய்கிறது. மேலும், வனஸ்பதியின் ஒவ்வொரு அவுன்ஸும் பூர்ண போஷாக்கு வாய்ந்ததாயிருப்பதால் அதை வாங்குவதிலும் உபயோகிப்பதிலும் சிக்கனமேற்படுகிறது.

**ஆரோக்கியமான வாழ்வுக்கு அவசியமானது**

திடகாத்திரமாகவும் ஆரோக்கியத்துடனும் இருக்க ஒவ்வொருவருக்கும் நாளொன்றுக்கு குறைந்தது இரண்டு அவுன்ஸாவது கொழுப்புச் சத்து தேவைப்படுகிறது என்பது விஞ்ஞானிகள் நிரூபித்துள்ள உண்மை. இந்த அளவு கொழுப்புச் சத்தை தூய்மையாகவும், சிக்கனமாகவும், சுவைக்கிசைவதாகவும் வனஸ்பதி அளிக்கிறது. ஆரோக்கியம் தழைத்து, வாழ்வு வளம்பெற நீங்களும் இன்றுமுதல் வனஸ்பதியை உபயோகிக்கத் தொடங்கலாமே!

**வனஸ்பதி — இல்லாளுக்கு வரப்பிரசாதம்**

தி வனஸ்பதி மான்யுபாக்சரேர்ஸ் அஸோஸியேஷன் ஆப் இந்தியா ஸ்தாபனத்தினால் வெளியிடப்பட்டது

# வாஸ்மால்

## கருமையை வளர்க்கும்
## கூந்தல் தைலம்




- நரை மயிரைக் கருமை யாக்கிப் பளபளப்பையும் ஊட்டுகிறது.
- கேசவளர்ச்சியை ஊக்குகிறது.
- மேன்மையான நறுமணம் கொண்டது. கூந்தல் வளர்ச்சிக்கு உகந்த தைலம்.



தைலமாகவும் போமேடாகவும் மோசடி செய்ய முடியாதபடியுடைய பாட்டில்களில் எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்.

**ஹைஜீனிக் ரிசர்ச் இன்ஸ்டிடியூட்**
தபால் பெட்டி எண் 1192, பம்பாய்-1

சென்னை ஏஜண்டுகள்:
ஆர். எல். கவுடர் & கம்பெனி
பந்தர் தெரு - சென்னை

சிலோன் ஏஜண்டுகள்:
கபாடியா லிமிடெட்
104, கெய்சர் தெரு, கொழும்பு-11

ரேடியோ சிலோன் 45 & 21 மீட்டரில் "வாஸ்மால் சங்கீத புஜாரி" என்ற நிகழ்ச்சியை பிரதி செவ்வாய் இரவு 8-30 மணிக்குக் கேளுங்கள்

# ஆஸ்தமா பிராங்கைடீஸ் குளிர்சுரம்

## முதலியவைகளை எப்படி அடக்குவது

மூச்சுத் திணறல், இருமல், சிரமப்பட்டு மூச்சு விடுதல் சுவாசம் தடைபடுதல் ஆஸ்த்மா, பிராங்கைடீஸ், ஜலதோஷம், குளிர்சுரம் முதலிய உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கான பேர்கள் இப்பொழுது மெண்டாகோ (Mendaco) சாப்பிட்டு நிவாரணம் அடையலாம். இந்த நவீன விஞ்ஞான அமெரிக்க மருந்து. இரத்தத்தின் மூலமாக சுவாசப்பைகள், சுவாசக் குழாய்கள், மற்றும் மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடர்ந்துள்ள சளியை இளக்கிக் கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் மற்றும் சிரமப்பட்டு மூச்சுவிடுதல், இல்லாமல் சுகமாக சுவாசித்து குழந்தைபோல் தூங்கலாம். பூரண திருப்தி உங்களுக்கு அதுநிச்சயமாக அளிக்கும்.

# எக்ஸிமா சொறி

உங்கள் சருமத்தில் சுமார் 5 கோடி மெல்லிய துவாரங்களும் மடிப்புகளும் உள்ளன. கிருமிகள் அவைகளில் மறைந்திருந்து, தாங்கமுடியாத அரிப்பு, வெடிப்பு, மேகசப்படையும்படை, தோல் உரிதல், எரிச்சல், பருக்கள் படர்தாமரை, காலில் அரிப்பு முதலிய உபாதைகளை உண்டுபண்ணுகின்றன. சாதாரண சிகிச்சைகள் தற்காலிகமான நிவாரணம் அளிக்கும். ஏனெனில், அதன்மூலம் உபாதைகளுக்கு மூல காரணமான கிருமிகள் அழிவதில்லை. விஞ்ஞான முறையில் தயாரித்த இந்த மருந்து, நிக்ஸோடர்ம் (NIXODERM) துரிதமாக இந்தக் கிருமிகளைக்கொன்றுவிடுகிறது. மற்றும் உங்கள் சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் வசீகரமாகவும் இருக்கச் செய்கிறது. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடர்ம் (NIXODERM) வாங்குங்கள். சரும உபாதைகளின் மூலகாரணமான கிருமிகளை நிக்ஸோடர்ம் நிச்சயமாக அழிக்குமென்ற பூரண நம்பிக்கையுடன் வாங்குங்கள்

எண்ணம் அவருக்கு இருக்குமானல்.....? இருக்குமானல் என்று சந்தேகமாக நினைப்பானேன்? நிச்சயமாக இருக்கத்தான் இருக்கிறது. இல்லா விட்டால், அக்காள் இப்படி சுந்தரம், விகாஸ் இவர்களோடு தாராளமாகப் பழகி வருவதைக் கண்டும் காணுதவர் போல் பேசாமல் இருப்பாரா?

இதை அவள் தன் தாய்க்கு விளக்கி, "மாமாவைப் பகைத்துக் கொண்டு நாம் ஒரு காரியமும் செய்ய முடியாதம்மா" என்று கூறினுள்.

தைலம்மாளின் மந்த புத்திக்கும் அது இப்பொழுதுதான் எட்டியது. 'ஆமாம், மாலா சொல்வது சரிதான். தம்பிக்கு உள்ளூற அப்படிப்பட்ட ஆசை இருந்துக்கிட்டுத்தான் இருக்கணும். இத்தனி நாளா இந்தப் பொண்ணு அவிழ்த்து விட்ட காளையா சுற்றிக்கிட்டு இருக்குதே; அறுத்த பொண்ணு-அறுத்த பொண்ணுன்னு அது செய்யுறத்துக்கெல்லாம் ஆமாம் போட்டுக்கிட்டுத்தானே இருக்கிறன் அவன். ஒருவேளை அவன் அவளை டாக்டருக்குப் படிக்கச் சொல்லி, ஆசுபத்திரி வைக்கக் கொடுத்ததே அதுக்காகத்தானே, என்னவோ? அவன் மட்டும் அந்த நினைப்போட இருந்தா, நாம் அவனை எதிர்த்து ஒரு காரியமும் செய்துக்கிட முடியாது. புஷ்பவனம் தம்பிக்கோ இவன் சொல்லுறதுதான் வேதவாக்கு. எப்படியாவது இவன் அவரை வழிக்குக் கொண்டு வந்தாலும் வந்துடுவான். மரகதத்துக்கு இதெல்லாம் பிடிக்காதுதான். ஆனல், என்ன இருந்தாலும் அவள் ஒரு பொம்புள்ளை; புருசன்காரன் சொல்லை மிஞ்சி என்ன செய்துட முடியும்?' என்றெல்லாம் அவள் சிந்தனை வேகமாக ஓடியது.

முன்பாவது வீணுவின் செயல்களால் குடும்பத்துக்கு அவமானம் ஏற்பட்டு விடப் போகிறதே என்றுதான் தைலம்மாள் அவளைக் கரித்தாள்; அவளையும் சுந்தரத்தையும் பிரித்துவிடப் பார்த்தாள். ஆனல் இப்பொழுதோ மகளின் வாழ்வும் அத்துடன் பிணைந்துவிட்டது. ஆதலால், மாலா சொல்லுவதுபோல், இனி வெறுமனே புலம்பிக் கொண்டிருந்தால் மட்டும் போதாது. உடனே காரியத்தில் இறங்க வேண்டும்; ஏதாவது செய்து அவர்களை நிரந்தரமாகப் பிரிக்க வேண்டும். என்ன செய்யலாம் என்று அவள் உடனே சிந்திக்கத் தொடங்கினுள். அதற்கு அவளால் ஒரே ஒரு வழிதான் காண முடிந்தது. வீணுவை இந்த ஊரிலிருந்தே விரட்டிவிட வேண்டும். அவள் தொலைதூரம் போய் விட்டால் சுந்தரம் வேலையை விட்டு விட்டு அவள் பின்னல் ஓட முடியாது. பிறகு எல்லாம் சரியாகிவிடும். ஆனல் அவளை விரட்டுவது எப்படி? ஒன்றுக்கு இரண்டு இடங்களில் ஆஸ்பத்திரியைத் தொடங்கிச் செழிப்பாகத் தொழில் நடத்தி வரும் அவளை அங்கிருந்து கிளப்புவதுதான் எப்படி?

இதை அவள் அன்றிரவு முழுவதும் தீவிரமாக ஆலோசித்தாள். தான் பயந்தபடி வீணுவுக்குத் தாணுவதி ஏதாவது தீங்கு விளைவித்து, அதனுல் அந்தப் புங்கணுற்று விதவைப் பெண்ணைப்போல் இவளும் தற்கொலை செய்து கொண்டு ஒழிந்து போயிருந்தால் கூடத் தேவலாமே என்று அவளுக்கு இப்பொழுது தோன்றியது. இந்தச் சிந்தனையின் இடையே, 'ஆமாம், தாணுவதி என்ன ஆனுன்? அவன் இன்னும் வீணுவின் ஆஸ்பத்திரியில்தான் கிடக்கிறனு? அவனுடைய வயிற்றுவலி பாசாங்காக இருக்கலாம் என்று நினைத்தோமே. அது உண்மையான வயிற்று வலியேதானு?' என்ற கேள்வியும் அவளிடம் எழுந்தது.

ஆம், அவனைப் பற்றி மாலாவும் ஒன்றும் சொல்லவில்லை; அவனும் கேட்கவில்லை. கிணறு வெட்டப் பூதம் கிளம்பிய கதையாக இவ்விஷயம் வேறு விதமாகத் திரும்பிவிடவே இதற்கெல்லாம் காரணமான அவனை எல்லாருமே மறந்து போய் விட்டனர்.

தைலம்மாளுக்கு அப்பொழுது இம்மென்று தாணுவதியின் நினைவு தோன்றியதற்குக் காரணம், தன் திட்டத்துக்கு அவனையே கருவியாக்கிக் கொள்ளலாம் என்ற முடிவுதான். அவளோ நேரடி நடவடிக்கை எதுவும் எடுக்க முடியாது. எதற்கும் அஞ்சாமல் மறைமுகமாகச் செயல்படக் கூடிய ஒருவரின் உதவியைத்தான் அவள் நாடியாக வேண்டும். அதற்குத் தாணுவதியைவிடத் தகுதியான ஆள் வேறு உண்டா? அவனுக்கு வீணாவின் மீது நாட்டம் இருக்கக் கூடும் என்பது அவளுடைய ஊகந்தான். நாட்டம் இல்லாவிட்டால் கூட இம்மாதிரி விஷயத்தில் அவனை ஊக்கிவிடுவது ஒன்றும் கடினமில்லை. பெண், அழகானவள், இளமையானவள், ஆதரவற்றவள் என்பவைகளே அந்த மனித இயந்திரத்தை முடுக்கிவிடப் போதும். ஒரு தடவை முடுக்கிவிட்டுச் சரியான திசையில் மட்டும் செலுத்திக் கொண்டிருந்தால் தாணுவதி இயந்திரம் தானாகவே இயங்கி அவள் லட்சியத்தை நிறைவேற்றிவிடும்.

தைலம்மாள் மறுநாள் காலை எட்டு மணிக்குத்தான் இந்த முடிவுக்கு வந்தாள். அப்பொழுது வீட்டில் வேறு ஒருவரும் இல்லை. வீணா ஆஸ்பத்திரிக்குப் போய்விட்டிருந்தாள். மாலா ஆற்றுக்குக் குளிக்கச் சென்றிருந்தாள். சச்சிதானந்தம் புஷ்பவனத்தோடு வெளியே எங்கோ சென்றிருந்தார். வீட்டு வேலையாள் மாடசாமி ஒருவன்தான் கொல்லைக் கிணற்றடியில் மாடுகளைக் குளிப்பாட்டிக் கொண்டிருந்தான். அவனை அனுப்பி, தாணுவதி இன்னும் ஆஸ்பத்திரியில்தான் இருக்கிறானா என்பதைப் பார்த்துவரச் செய்வோம்; பிறகு பிற்பகலில் வீணா புங்கனூற்றுக்குப் போனபின், ஆஸ்பத்திரிக்குச் சென்று நர்ஸை மெல்ல வெளியே அனுப்பிவிட்டு அவனுக்குத் தூபம் போட்டு வரலாம் என்று எண்ணிய அவள், மாடசாமியைக் கண்டு விஷயத்தைச் சொல்லுவதற்காக எழுந்தாள். சரியாக அந்த நேரத்துக்குத் தாணுவதியே, "அத்தை! அத்தை!" என்று கூப்பிட்டுக் கொண்டு அங்கே வந்து சேர்ந்து விட்டான்.

"வாங்க தம்பி. வவுத்து வலியாமே? இப்போ எப்படி இருக்குது? தேவலாமா?" என்று கூறி வரவேற்றாள் தைலம்மாள்.

தாணுவதியின் முகம் கன்னிப் போய் இருந்தது. அவனுடைய உதடுகள் வீங்கியிருந்தன. கண்கள் இடுங்கி, சுற்றிலும் ஒரு கருவட்டம் உருவாகியிருந்தது. அவையெல்லாம் முன்னாள் இரவு சுந்தரம் அவனுக்கு அளித்த பரிசின் சின்னங்கள். ஆனால் தாணுவதி அதையெல்லாம் பொருட்படுத்துபவன் அல்லன். அடியைப் பொருட்படுத்தாதது மட்டுமில்லை; அதனால் ஏற்படும் அவமானத்தையும் அவன் சட்டை செய்வதில்லை. அது அவன் சிறப்பியல்பு. அவமானமா? அப்படி ஒன்று இருப்பதாக அவனுக்குத் தெரியவே தெரியாது.

ஆனால் தைலம்மாளுக்கு அவனுடைய தோற்றத்தைக் கண்டதும் அளவுகடந்த வருத்தம் உண்டாயிற்று. அவள் உடனே விஷயத்தை ஊகித்து விட்டாள். இவன் வீணாவிடம் வாலாட்டியிருப்பான். சுந்தரம் வந்து வெளுத்து வாங்கியிருப்பான். இந்த நினைவு அவளுக்கு ஒருபுறம் வருத்தத்தையும், மறுபுறம் மகிழ்ச்சியையும் அளித்தது. தாணுவதி இப்படி நாயைப்போல் அடிபட்டு வந்து நிற்பதைக் கண்டு வருத்தம். தன் ஊகம் பொய்க்கவில்லை; அவன் நாட்டம் வீணாவின்மீது விழுந்திருக்கிறது என்பது விளக்கமாகி விட்டதால் மகிழ்ச்சி.

அவள் அநுதாபத்துடன் உரையாடலைத் துவக்கினாள். "அடி, ஆத்தே! இது என்ன தம்பி, முகமெல்லாம் கொழுக்கட்டை கொழுக்கட்டையா வீங்கிக் கிடக்குது! வவுத்து வலிக்கு இப்படி முகங்கூட வீங்கிக்கிடுமா, என்ன?" என்று வியப்புற்றவள்போல் பேச்சை ஆரம்பித்தாள்.

தாணுவதியும் அப்பொழுது காரியத்துடனே அங்கே வந்திருந்தான். தான் தவறாக நடந்து கொண்டதை வீணா வீட்டுக்காரர்களுக்கு அறிவித்திருந்தால், அதற்குச் சப்பைக் கட்டு கட்டிவிட்டுப் போக ஒரு திட்டத்தைத் தயார் செய்து கொண்டுதான் அவன் வந்திருந்தான். ஆதலால் அவன் அதற்கு ஏற்றபடி பதில் அளித்தான். "அட நீங்க ஒண்ணு! வவுத்து வலி போச்சுன்னு, நீங்க இப்போ வவுத்தெரிச்சலை வேறே கிளப்புறீங்களே, அத்தை!" என்றான்.

"நான் வவுத்தெரிச்சலைக் கிளப்புறேனா! ஏன் தம்பி?"

"அத்தை! இப்போ நடந்துக்கிட்டிருக்கிறது கலியுகமின்னு உங்களுக்குத் தெரியுமில்லே. கலியுகத்திலே கண்ணியமா நடந்துக்கிடறவனுக்குக் கைமேலே பலன் கிடைச்சுடுமில்லே. அட, ஏன் சும்மா இருக்கிறீங்க, அத்தை? பதில்



திருச்சி தமிழ் எழுத்தாளர் சங்கத்தினர் நான்காவது ஆண்டு விழாவைச் செப்டம்பர் 13ந்தேதி டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடினர். திரு ஐயம்பெருமான் கோனார் விழாவைத் துவக்கி வைத்தார். மதுரை திரு என். ராமகிருஷ்ணன் சிறப்புரை ஆற்றினார். இவ் விழாவில் நடைபெற்ற நாடகத்தில் திரு நிர்லோக சீதாராம் பாரதியாராகவும், திரு கமலபதி ஷேக்ஸ்பியராகவும் தோன்றினர்.

சொல்லுங்களேன்; நான் சொல்றது நிசந்தானே?''

''நீங்க என்ன தம்பி பேசுறீங்க? விளங்கலையே!''

''நேத்து விடியாம எழுந்திருக்கிற போதே வவுத்து வலியோட எழுந்திரிச்சேன், அத்தை! டாக்டர் அம்மாகிட்டே போயி ஏதாச்சும் மருந்து கொடுங்க அம்மான்னு கேட்டேன். அவுங்க நான் புழுவாத் துடிக்கிறதைப் பார்த்துவிட்டு, ஊசி ஒண்ணு குத்தினாங்க. அது என்ன எழவு ஊசியோ, குத்தின உடனே தலையைச் சுற்றிக்கிட்டு வந்திடுச்சு. மறுபடியும் எனக்கு நினைவு வந்தபோது ராத்திரி நேரம். ஆசுபத்திரிக் கட்டிலிலே படுத்திருந்தேன். வவுத்து வலியெல்லாம் போயிடிச்சு. சரி வீட்டுக்குப் போயிடலாமின்னு எழுந்திரிச்சு வந்தேன். கூடத்துக்கு வந்து பார்த்தா.....நான் என்னத்தைச் சொல்ல அத்தை! ஆனாலும் நம்ம சச்சிதானந்த மாமா மகள், இப்படியெல்லாம் நடந்துக்கிடுவாங்கன்னு நான் நினைக்கவே இல்லே, அத்தை! அந்தப்பயல், புஷ்பவன மாமா மகன்தான் கேடு கெட்டுப் போனவன்; ஆனா உங்க மருமகளுக்குப் புத்தி எங்கே போச்சுன்னு கேக்கிறேன். கண் ஆணையாச் சொல்லுறேன் அத்தை; எனக்கு அவங்க கொஞ்சிக்கிட்டிருந்ததைப் பார்க்கப் பொறுக்கலே. நீங்க எதுக்குப் பயந்துக்கிட்டு இருந்தீங்களோ, நான் எது நடந்துடக் கூடாதுன்னு கண்ணிலே எண்ணெயை ஊத்திக்கிட்டுக் காபந்து பண்ணிக்கிட்டு இருந்தேனோ, அதுவே நடந்துக்கிட்டு இருந்ததைப் பார்த்ததும் எனக்கு ஒரேயடியாக் கோபம் வந்துடிச்சு. ரெண்டு பேரையும் வாயிலே வந்தபடி பேசிட்டேன். அதுக்குக் கிடைச்ச வெகுமானந்தான் இதெல்லாம். இது நல்லவனுக்குக் காலமா அத்தை? ஏன், சொல்லுங்களேன், நான் சொல்றது நிசந்தானே?''

''அப்புறம்?'' என்று சுவாரசியத்துடன் கேட்டாள் தைலம்மாள். அவளால் தாணுவதி கூறியதை நம்பவும் முடியவில்லை; நம்பாமல் இருக்கவும் முடியவில்லை.

''நான் மட்டும், எதிர்த்துக் கையை நீட்டியிருந்தேன்னா, அந்தப் பயல் தூள் தூளாப் போயிருப்பான். ஆனா, விசயம் வெளியே பரவிட்டா நம்ம குடும்பத்துக்குத்தானே அவமானமின்னு, வாயை மூடிக்கிட்டு போயிட்டேன். அதுதான் விசயத்தை உங்க காதிலே போட்டுட்டுப் போவோமின்னு வந்தேன். அத்தை! நான் நேற்று வரைக்கும் உங்க மருமகளை ஒரு மாதிரியா நினைச்சுக்கிட்டிருந்தேன். ஆனா. அவங்க எதுக்கும் துணிஞ்சுட்டாங்கன்னு இப்பொத்தான் தெரிஞ்சுக்கிட்டேன். இப்படியெல்லாம் குடும்பத்துக்கு அவமானத்தைத் தேடிக் கொடுக்கிறதை விட, ஒழுங்கா, முறையா எவனாவது ஒருத்தனைக் கட்டிக்கிட்டாக் கூடப் பாதகமில்லேன்னுதான் நான் சொல்லுவேன், அத்தை!''

"ஆனா, அறுத்த பொண்ணை எவன் தம்பி கட்டிக்கிடுவான்? கட்டிக்கிறவங்களை ஊர்ச் சனங்க சும்மா விட்டுடுவாங்களா? ஏன், நீங்கதான் கட்டிக்கிடுவீங்களா, தம்பி?"

தைலம்மாளிடமிருந்து இந்தக் கேள்வியையே எதிர்பார்த்து வந்தவன்போல் பூரித்துப் போனான் தானாவதி. அவனுடைய அசடு வழிந்த முகத்திலே இப்பொழுது மலர்ச்சி பூத்தது. "ஏன் கட்டிக்கிட மாட்டேன். அவங்க மட்டும் ஒழுங்கா நடந்துக்கிடறதாக இருந்தா, எங்க சச்சிதானந்த மாமா குடும்பத்து மானத்தைக் காக்க, என் தகுதி, கவுரதை எல்லாத்தையும் விட்டுப்போட்டு அவங்களைக் கட்டிக்கிடுவேன், அத்தை! விளையாட்டில்லே; சாமி சத்தியமாத்தான் சொல்லுறேன். ஆனா..."

"சரியாப் போச்சு போங்க; எல்லாத்தையும் சொல்லிப் போட்டுக் கடைசியிலே ஆனாப் போடுறீங்களே!"

"அதிலே இன்னொரு விசயம் இருக்குது, அத்தை! நான் டாக்டர் அம்மாவைக் கட்டிக்கிட ஒத்துக்கிட்டாலும், அவங்க ஒத்துக்கிட வேண்டாமா? அவங்களைத்தான் புஷ்பவன மாமா மகன் அட்டையாப் புடிச்சுக்கிட்டு இருக்கிறானே?"

"அவங்களைப் பிரிச்சுட்டாப் போகுது."

"அத்தை! நீங்க பெரிய ஆளு, அத்தை! பிரிச்சுட்டாப் போகுதுன்னு ரொம்பச் சுளுவாச் சொல்லிப் போட்டேளே! நான் என்னவெல்லாமோ வேலை பண்ணி அவங்களைப் பிரிச்சு வைச்சுட்டதாக நினைச்சுக்கிட்டிருந்தேன். ஆனா, அவங்க, நம்ம கண்ணு முன்னாலே கூடாமல், ஆசுபத்திரியிலே கூடிக்கிட்டு இருக்கிறாங்கன்னு நேற்றில்லா கண்டுக்கிட்டேன். இல்லே, அத்தை அவங்களைப் பிரிக்கிறது, நீங்க நினைக்கிறது போலே இலேசுப் பட்டதில்லே."

தைலம்மாள் விஷயத்துக்கு வந்தாள். "நீங்க தும்பை விட்டுட்டு வாலைப் புடிச்சிருக்கிறீங்க, தம்பி! அதுனாலேதான் உங்க கண்ணிலே மண்ணைத் தூவிட்டாங்க அவங்க. எந்த விசயமானாலும் அடிவேர் எங்கே இருக்குதுன்னு பார்த்து அதை வெட்டிப் போடணும், தம்பி; மரம் தன்னாலே பட்டுச் சாஞ்சுடும்."

"அப்படீன்னு....?"

"அவங்க ரெண்டு பேரிலே ஒருத்தரை இந்த ஊரிலேயிருந்து கிளப்பிடணும்."

"என்ன சொன்னீங்க? ஊரிலேயிருந்து கிளப்புறதா? யாரை!"

"ஏன், வினுவைத்தான் கிளப்பலாமே, சுளுவா!"

"எப்படி? அவங்க ஒண்ணுக்கு ரெண்டு இடத்திலே ஆசுபத்திரி வைச்சுக்கிட்டிருக்கிறாங்க.....!"

"அட, நீங்க என்ன தம்பி, உதட்டு வாழைப் பழத்தை உள்ளே தள்ளு என்கிற கணக்கிலே பேசுறீங்க. ஆசுபத்திரி என்ன பிரமாத ஆசுபத்திரி! நாலு ஆளை ஏவி, ஏழெட்டு நாட்கள் அங்கே போயி, கலாட்டாப் பண்ணச் செய்தீங்கன்னா, தன்னாலே ஆசுபத்திரியை இழுத்து மூடிட மாட்டாளா?"

"ஆ! அது சரியான வழிதான். ஆனா, ஆசுபத்திரியை மூடிட்ட பிறகு...?"

"'படிச்சுப் போட்டுச் சும்மா இருப்பாங்களா? வேறே எங்கேயாச்சும் போயி தொழிலைச் செய்துக்கிட்டிரு'ன்னு நான் விரட்டிட மாட்டேன்."

"அதெல்லாம் சரிதான் அத்தை; ஆனா, டாக்டர் அம்மா இங்கேயிருந்து போயிட்டாங்கன்னா, என் பாடு?"

"உங்க பாட்டைக் கவனிக்காமலா இருப்பேன். அவளை வெளியூருக்கு அனுப்புறத்துக்கு முன்னாடி, ரகசியமாகக் கூப்பிட்டு, 'அங்கே போயும் மானங்கெட்டு நடந்துக்கிடாதே; பேசாம நம்ம தானாவதி இருக்கிறாரு; தங்கமான புள்ளை; கட்டிக்கிடு'ன்னு சொல்லி உங்களுக்குக் கட்டி வைச்சுட மாட்டேன்."

"செய்துடுவீங்களா? செய்திடுவீங்கல்லே? உறுதியா டாக்டர் அம்மாவை இந்தச் சிங்கத்துக்குக் கட்டிவைச்சுடுவீங்கல்லே? அப்படியானால் சரி; இப்போ நான் என்ன செய்யணும், சொல்லுங்க; சட்டுப் புட்டுனே சோலியை முடிச்சுப் போடுறேன்."

"முதலிலே புங்கனூற்று ஆசுபத்திரியிலே நாலு பேர்களை அனுப்பிக் கலாட்டாப் பண்ணச் சொல்லுங்க. பிறகாலே, இங்கே பார்த்துக்கிடலாம்."

"ஆகட்டும், அத்தை! இன்றைக்கே போயி, நாலு பயலுகள் என்ன; பத்துப் பயலுகளுக்குப் பணம் கொடுத்து அங்கே போயி கலாட்டாப் பண்ணச் சொல்லுறேன்" என்று கூறிவிட்டுத் தானாவதி மகிழ்ச்சியுடன் எழுந்து சென்றான்.

தைலம்மாளும் மகிழ்ச்சியே அடைந்தாள். இந்த மாதிரி காரியங்களில் தானாவதி வல்லவன் என்பது அவளுக்குத் தெரியும். ஆதலால் தன் திட்டம் நிச்சயமாக வெற்றி பெறும்; வினு ஒவ்வோர் இடமாக ஆஸ்பத்திரியை மூடுவாள்; பிறகு சுந்தரத்துக்கும் அவளுக்குமுள்ள தொடர்பு தானாகவே துண்டிக்கப்பட்டு விடும் என்றும் அவள் நம்பினாள்.

சரியான சதித் திட்டந்தான் இது. ஆனால் இதற்கெல்லாம் மேலே சர்வ வல்லமையுள்ள விதி ஒன்று இருக்கிறது என்பதை அவள் எண்ணிப் பார்க்கவில்லையே!

(தொடரும்)

# உங்கள் துணிகளில் அவைகள் வளருகின்றனவா ?



அநேகமாக அப்படித்தான் ! வழக்கமாக இரவுகளிலே நடமாடும் கரப்பான் பூச்சிகளால் உங்கள் துணிகளும், புஸ்தகங்களும் சேதமடைகின்றன. சில்குகளிலும், கம்பளித் துணிகளிலும், மற்றுமுள்ள வீட்டுச் சாமான்களிலும் அவைகள் செழிப்புடன் வளருகின்றன. அழுக்குகளை புசித்து வளரும் கரப்பான் பூச்சிகளால் நோய்கள் பரவப்படுகின்றன. நோய்களை கொண்டு வருவதற்கும், மேலும் உங்கள் வீட்டுச் சாமான்களுக்கு சேதமேற்படுத்துவதற்கும் முன்னால் அவைகளைக் கொன்று விடுங்கள்

# டுகோன் பெய்ட்டினால் இப்பூச்சிகளைக் கொன்று விடுங்கள்!






கரப்பான் பூச்சிகளையும், ஈக்களையும், மற்றுமுள்ள பூச்சிகளையும் முதலில் ஆகர்ஷித்து, பிற்பாடு கொல்லும் ஒரு தனிப்பட்ட சேர்மானப் பொருள் டுகோன் பெய்ட்டில் சேர்க்கப்பட்டுள்ளது. டுகோன் பெய்ட் மிகச் சிக்கனமானது. பூச்சிகள் கூடுமிடங்களில் டுகோன் பெய்ட்டை கொஞ்சமாக உபயோகித்தால் போதும்... டுகோன் பெய்ட் அபாயமற்றது.

TB 1

| எளிதில் உபயோகிக்கக் கூடியது | தூவுவது சுலபம் | பயனளிக்கிறது |
|---|---|---|
| சாமான ஒரு துண்டு கடுதாசியில் டுகோன் பெய்ட்டைத் தூவுங்கள். | அக்கடுதாசியை பூச்சிகள் கூடுமிடங்களில் வையுங்கள். | பூச்சிகள் டுகோன் பெய்ட்டைச் சாப்பிட்டு, சில நிமிடங்களில் இறந்துபோய் விடுகின்றன. |

டுகோன் பெய்ட் பரிசீலனை செய்யப்பட்ட ஒரு பேயர் தயாரிப்பு—
சிக்கா பிரைவேட் லிமிடெட்டுக்காக தயாரிக்கப்பட்டது
விநியோகஸ்தர்கள்: ஜப்ரீ மேனர்ஸ் அண்டு கம். பிரைவேட் லிட்., பம்பாய்

# ஆலங்காட்டு அழகன்

சென்னை பூக்கடை பஜாரில் ஒரு கடை. கண்ணாடிச் சாமான்களின் விற்பனை அங்கே. ஆதலால் பெரிய நிலைக்கண்ணாடிகள், சிறிய கண்ணாடிகள், பீங்கானில் வண்ண வண்ணக் கோப்பைகள், பாத்திரங்கள், எலக்டிரிக் லைட்டுகளில் எத்தனையோ ஷேடுகள், குளோப்புகள், சர லாந்தல்களே அக்கடையில் நிறைந்திருக்கின்றன. இவை யெல்லாம் நூறு அடி நீளமும் நாற்பது அடி அகலமும் உள்ள கடையில் அடுக்கியும், தொங்கவிடப் பட்டும் இருக்கின்றன. இந்தக் கடைக்குள் நுழைகிறேன் நான், ஏதோ கண்ணாடி ஒன்று வாங்க. எனக்கோ ஒரே பயம், கையை வீசி நடந்தால் எங்கே கைபட்டுக் கண்ணாடிகள் எல்லாம் விழுந்து உடைந்து விடுமோ என்று. ஆதலால் மிக்க கவனமாக, அடக்கமாக அடிமேல் அடி எடுத்து வைத்தே நடக்கிறேன். இந்தச் சமயத்தில் ஒரு சிலம்ப வீச்சக்காரன் அங்கு வருகிறான். அவனுடன் அவன் சகாக்களும் மற்றவர்களும் வருகிறார்கள். அவன் கையிலே இரண்டு கம்புகள். கடைக்காரர் அனுமதி இல்லாமலேயே, சிலம்பக் கம்புகளைச் சுழற்றிச் சிலம்ப வித்தைகள் காட்ட ஆரம்பித்து விடுகிறான் கண்ணாடிக் கடைக்குள்ளே. நெடுக்கும் குறுக்குமாக ஓடி, மேலும் கீழுமாகக் கம்பைச் சுழற்றுகிற போது, கடைக்காரருக்கு ஒரே கவலை. இது என்ன? தப்பித் தவறிக் கம்பு ஒரு கண்ணாடிச் சாமான் மீது பட்டால் போதுமே, அடுக்கி வைத்திருக்கும் சாமான்கள் அத்தனையும் பொலபொலவென்று விழுந்து உடைந்து தவிடுபொடியாகி விடுமே என்று. ஆனால் அப்படி ஒன்றும் நடக்கவில்லை.. ஒரு சிறு கண்ணாடிச் சாமானுக்கும் சேதம் ஏற்படவில்லை. இந்தச் சிலம்பவீச்சினால். வீச்சு நின்றது. எல்லோருக்கும் ஒரே அதிசயம். சிலம்பம் ஆடியவனின் லாகவத்தைக் கண்டு மூக்கிலே கைவைத்து நின்று விட்டார்கள் கடையிலும் தெருவிலும் கூடி நின்ற அத்தனை பேரும் இப்படி நடக்குமா என்று தானே நீங்கள் எண்ணுகிறீர்கள். ஆம்! அப்படி ஒன்றுமே நடக்கவில்லைதான். இப்படி நடந்தால் எப்படி இருக்கும் என்று கொஞ்சம் கற்பனை பண்ணிப் பாருங்களேன்.



பேயுருவில் காரைக்கால் அம்மை

இத்தகைய கற்பனைச் சிலம்பக்காரனுக்கும் மேலான ஒரு சிலம்பக்காரனாக அல்லவா இருக்கிறான் இறைவன். கோடானுகோடி அண்டங்களைப் படைத்திருக்கிறான்; அவைகளை உலகம், பாதாளம், வான்முகடு என்று நாலா பக்கமும் பரவி நிற்கவும், அவைகளெல்லாம் ஒரு நியதியில் சுழன்று கொண்டு சுற்றிக் கொண்டு வரும்படியும் அமைத்திருக்கிறான். இவைகளுக்கு ஊடே, அவற்றின் ஊனாய் உயிராய், உணர்வாய் இயங்குகிறான். அற்புத நடனமே ஆடுகிறான் அவன். சரிதான், இப்படி ஆடும் நடனத்தில் ஒருகால் தானம் தவறிச் சிறிது பெயர்ந்து விட்டால் என்ன ஆகும்? பாதாளமே பெயர்ந்து விடாதா? ஏன் தலையில் உள்ள கிரீடம் தவறிக் கொஞ்சம் பெயர்ந்தால், வான் முகடே பெயர்ந்து விடாதா? இல்லை, வீசி ஆடும் கைகள்தாம் ஆட்டத்தின் வேகத்தில் அங்கே இங்கே பட்டுவிட்டால் வான் திசைகளே பெயர்ந்து விடாதா? இப்படியெல்லாம் நேராமல் ஆடுகின்றானே, ஆடிக் கொண்டே இருக்கிறானே கற்பகோடி காலங்களாக இறைவன். இது இவனுக்கு எப்படிச் சாத்தியமாயிற்று என்று எண்ணுகிறோம். இதே வியப்பு காரைக்கால் அம்மையாருக்கும் அன்று ஏற்பட்டிருக்கிறது. நாம் வியந்து மூக்கில் விரலை வைத்து நின்றால் அம்மையோ தன் வியப்புக்கு விடைபெற இறைவனிடமே கேள்வி கேட்கிறாள். அதையும் ஒரு நல்ல பாட்டிலேயே கேட்கிறாள்.

அடிபேரில் பாதாளம்
பேரும், அடிகள்
முடிபேரில் மாமுகடு
பேரும் - தொடிகள்
மறிந்தாடும் கைபேரில்
வான்திசைகள் பேரும்
அறிந்து ஆடும் ஆறு என்?
அரங்கு

இப்படி, பாதாளம், மாமுகடு, வான்திசைகள் எல்லாம் பெயராமே, நீ அரங்கத்தில் அறிந்து ஆடக் கற்றிருக்கிறாயே, அது எப்படிச் சாத்திய

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

மாகிறது என்றே கேட்கிறார் அம்மையார். இப்படி இறைவன் ஆடும் அற்புத நடனத்தையும், அந்த ஆட்டத்தைக் கண்டு அதிசயித்து நிற்கும் காரைக்கால் அம்மையாரையும் காண வேண்டும் என்றால், நேரே நாம் திருவாலங்காட்டுக்குச் செல்ல வேண்டும். அங்குள்ள தேவர் சிங்கப் பெருமானாம் ஆலங்காட்டு அடிகள் கோயிலுக்குள் நுழைய வேணும். அப்படி நுழைந்தால் அங்குள்ள ரத்ன சபையிலே ஊர்த்துவ நடனம் ஆடிக் கொண்டிருக்கும் இறைவனையும், அங்கே பேயுருவில் அமைந்திருக்கும் காரைக்கால் அம்மையையுமே காணலாம்.

தாளொன்றால் பாதாளம் ஊடுருவி, மற்றைத் தாளொன்றால் அண்டங் கடந்து உருவி நிற்கும் அந்த ஊர்த்துவ தாண்டவம் இறைவன் ஆடுவதற்கு நேர்ந்த காரணம் தெரிய வேண்டாமா? இந்த ஆலங்காடு பெயருக்கேற்ப நல்ல காடாகவே இருந்திருக்கிறது. காட்டிடையே கோயில் கொண்டிருக்கிறாள் காளி. அவளது ஆதிக்கம் அங்கு குறைவின்றி நடந்திருக்கிறது. உலகம் முழுவதையுமே முடிவு செய்தல் கூடும் என்று அகங்கரிக்கிறாள் அவள். இத்தோடு அவள் ஆடவும் வல்லவள். அதனால் இறுமாப்பு வேறே. இந்த நிலையில் தேவர்கள் இவள் தன் கர்வத்தை அடக்க இறைவனை வேண்டுகின்றனர். இறைவனுமே ஆலங்காட்டுக்கு வருகிறார். ஆடல் போட்டிக்கு அன்னை காளியையே அழைக்கிறார். அவளும் இசைகிறாள். போட்டி நடனம் நடக்கிறது (இன்றைய வெள்ளித் திரையிலே இந்த நடனப் போட்டிகள் தாம் சர்வ சாதாரணமாயிற்றே. ஆனால் ஒரேயொரு வித்தியாசம். அன்று நடப்பதற்கும் இன்று நடப்பதற்கும். இன்று போட்டி இடுபவர்கள் இருவரும் அநேகமாய்ப் பெண்களாகவே இருப்பர். அன்று போட்டியில் ஈடுபட்டவர்களில் ஒருவர் ஆண், ஒருத்தி பெண் என்பதையும் கொஞ்சம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.) இறைவன் ஆடும் ஒவ்வொரு நடனத்தையும் காளியும் சளைக்காது ஆடுகிறாள். ஆட்டம் நடந்துகொண்டே இருக்கிறது. போட்டியும் மும்முரமாகிக் கொண்டே வருகிறது. வெற்றி கிட்டக் காணோம் இறைவனுக்கு. இந்த நிலையில் இறைவன் வலது காதிலே உள்ள குழை நழுவி விழுகிறது கீழே. இதற்காக நடனத்தை நிறுத்தாமல், அப்படியே அந்தக் குழையைத் தனது கால் விரலால் எடுத்து அக்காலை அப்படியே அநாயாசமாக உயர்த்தி லாகவமாகக் குழையை வலது காதிலே பொருத்தி விடுகிறார். ஒரு காலை ஊன்றி ஒருகாலை வான் நோக்கி உயர்த்துவது பெண்ணால் ஆகிற காரியமா என்ன? முடியாது வெட்கித் தலைகுனிகிறாள் காளி. தோல்வியை ஒப்புக் கொள்கிறாள். இறைவன் வெற்றிக் கொடி நாட்டுகிறார். (அன்பர்கள் கேட்கலாம், பாலே நடனத்தில் பெண்கள் இதையெல்லாம் செய்கிறார்களே என்று. அவர்கள் உணர்வு நாணம் எல்லாம் உடைய பெண்களா என்று கேட்கிறேன் நான்) இந்தக்கதையையே

> கொடிய வெஞ்சினக் காளி
> குவலய முழுதும்
> முடிவு செய்வன் என்று எழுந்த நாள்
> முனிவரோன் முதலோர்
> அடைய அஞ்சலும், அவள் செருக்கு
> அழிவுற, அழியாக்
> கடவுள் ஆடலால் வென்றதோர்
> வடவரை கண்டான்

என்று கந்த புராணம் கூறும். இப்படிக் காளியை வெல்ல ஆடிய ஆட்டமே ஊர்த்துவ தாண்டவம். அந்தத் தாண்டவம் ஆடியவரே ஆலங்காட்டு அடிகள். இவரது திருக்கோலம் பஞ்ச சபைகளில் ஒன்றான ரத்தின சபையிலே செப்புச்சிலை உருவில் இருக்கிறது. எத்தனை தான் சொன்னாலும் அங்குள்ள அர்ச்சகர்கள் நிர்வாகிகள் வஸ்திரத்தைக் களைந்து ஊர்த்துவ மூர்த்தத்தைக் காட்ட மாட்டார்கள். பத்து முழத்து சோமனை இறைவன் திருஉருவில் வரிந்து வரிந்து கட்டி வைத்தே காட்டுவார்கள். ஆதலால் அன்பர்கள் இந்த ஊர்த்துவ தாண்டவக் கோலம் காணத் தென்காசி காசி விசுவநாதர் ஆலயத்துக்கே போகவேணும். அங்குள்ள மகாமண்டபத்தில் ஒன்றுக்கு இரண்டாக அமைந்திருக்கும் ஊர்த்துவ தாண்டவரையே பார்க்கலாம் எளிதாக. அதில் ஒன்றையே பார்க்கிறீர்கள் பக்கத்திலே.



ஊர்த்துவ தாண்டவர்-தென்காசி

திருவாலங்காட்டுக்குச் செல்வதானால் ரயிலில் செல்வதுதான் நல்லது. சென்னைக்கு மேற்கே முப்பத்தி ஏழு மைலில் திருவாலங்காடுரயில்வே ஸ்டேஷன். அங்கு இறங்கி வண்டி பிடித்

துக்கொண்டு வடக்கே மூன்று மைல் சென்றால் கோயில் வாயிலில் கொண்டுபோய் விடும். கோயில் நிரம்பப் பெரியதுமல்ல; சிறியதுமல்ல - உள் கோபுர வாயிலிலே வலப் பக்கம் இருப்பவர் சித்தி விநாயகர். விநாயகர் கட்டைப் பிரம்மச்சாரி என்றுதானே அறிவோம். இல்லை, அவருக்குச் சித்தி புத்தி என்று இரண்டு மனைவியர் என்றும் கூறுவர். ஞானமாம் புத்தியை மனைவியாகப் பெற்றால், பெறற்கரிய சித்திகள் எல்லாம் தானே வந்து அடையாதா, அந்தசித்தியையே (ஆம்! பெண்ணுருவில் இருக்கும் சித்தியைத்தான்) தன் மடிமீது வைத்துக் கொண்டிருக்கும் கோலத்தில் இங்கு விநாயகரைப் பார்க்கிறோம். சித்தி விநாயகரை வணங்கி அவர் அருள் பெற்றுக் கோயிலுள் நுழைந்தால் முதல் முதல் நாம் காண்பது ஊர்த்துவ தாண்டவரையே. தெற்கு நோக்கிய ரத்ன சபையிலே செப்புச் சிலை உருவிலே நிற்கிறார் அவர். ரத்னசபை என்றால் ஏதோ முழுக்க முழுக்க நவரத்தினங்கள் இழைத்த மண்டபம் என்று நினைத்து விடாதீர்கள். கல்லாலாகிய ரத்தினம் தான். அங்குள்ள மஞ்சத்தில் மற்ற நவரத்தினங்களும் இருக்கலாம். அவை யெல்லாம் பளிச்சென்று நம் கண்ணுக்குத் தெரியவில்லை. இந்த ரத்தின சபையைக் கடந்து சென்றால் உட்பிராகார வாயிலிலே, வடக்கு நோக்கிய ஒரு சிறு கோயிலிலே காளி இருக்கிறாள். ஐயோ, பாவம்! போட்டியில் தோற்ற அவமானம் தாங்க மாட்டாமல் ஏதோ ஒதுக்குப் புறமாக இடந் தேடி ஒழித்துக் கொண்டிருக்கிறாள் அவள். இனி கோயில் உள்ளே கர்ப்பக்கிருஹத்தில் இருப்பவர் தேவர் சிங்கப் பெருமான். அவரது துணைவிதான் வண்டார் குழலி. தேவர் சிங்கப் பெருமானை வலம் வந்தால் அகோரவீரபத்திரர் கம்பீரமாக நின்று கொண்டிருப்பதையும் பார்க்கலாம்.

இத்தனை திரு உருவங்களைப் பார்த்தாலும் நமக்குத் திருப்தி ஏற்படாது. ஆலங்காடு என்ற உடனேயே காரைக்கால் அம்மையாரும், அவர் பாடிய மூத்த திருப்பதிகம், இரட்டை மணி மாலை அற்புதத் திருவந்தாதி பாடல்கள் எல்லாம் ஞாபகத்துக்கு வருமே. புனிதவதியான காரைக்கால் அம்மை தன் கணவனை விட்டுப் பிரிந்து, இந்த ஊனுடை வனப்பை யெல்லாம் உதறித் தள்ளி, பேய் உரு எய்தி, கைலாச கிரியிலே இருந்து தலையாலேயே நடந்து வந்து நடராஜனது திருவடிக்கீழ் என்றும் சிவானந்தத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறாள் என்று வேறே படித்திருக்கிறோம். அதோடு இறவாத இன்ப அன்பு வேண்டிய அவர் பின்னும் ''பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்பு உண்டேல், உன்னை என்றும் மறவாமை வேண்டும்; இன்னும் வேண்டும் நான் மகிழ்ந்து பாடி அறவா நீ ஆடும்போது உன் அடியின் கீழ் இருக்க'' என்றெல்லாம் வேண்டிக் கொண்டவர் ஆயிற்றே. அவரைக் காணவில்லையே என்று உள்ளம் ஏங்கும். இத்தனை விஷயங்களைத் தெரிந்த நாம் எங்கே அந்தக் காரைக்கால் அம்மை என்று கேட்டால் கோயில் நிர்வாகிகள், 'ஓ அவரையா கேட்கிறீர்கள்?' என்று சொல்லி, ரத்தின சபைக்குத் தெற்கே இருப்புக் கிராதிகளுக்குள் அடைத்து வைத்திருக்கும் மண்டபத்துக்கு அழைத்துப் போவார்கள் நம்மை. அங்கு சென்றால் மற்றச் செப்புச் சிலைகளோடு செப்புச் சிலையாய்க் காரைக்கால் அம்மையையும் பேயுருவத்திலேயே காண்போம். அவரையுமே பார்க்கிறீர்கள் பக்கம் 60-ல். கொங்கை திரங்கி, நரம்பு எழுந்து, குண்டுக் கண்களும், வெண்பற்களும், குழி வயிறும் உடைய பேயுருத்தான் என்றாலும் அந்த அம்மையின் புனிதமான உள்ளமும் அன்பும் நம்மை அடிமை கொள்ளும்.

இனி, கோயிலை விட்டு வெளியே வரலாம். தேவாரம் பாடிய மூவரும்கூறும் பழையனூர், ஆலங்காடு இந்த ஆலங்காடுதானே என்று கேட்டால், இந்தக் கோயிலுக்கு வெளியே ஊருக்கு வடமேற்கேயுள்ள நீலி கோயிலைக் காட்டுவர் மக்கள். இந்தப் பழையனூர் நீலி வரலாறு இலக்கியப் பிரசித்தி உடையதாயிற்றே. அதைத் தெரிந்து கொள்ளாமல் திரும்ப முடியுமா நம்மால்? கதை இதுதான். காஞ்சியில் சுதரிசனச் செட்டி என்று ஒரு வணிகன். அவனுக்கு மனைவியர் இருவர். இளையாள் மோகத்தால் மூத்தாள் நீலியை வஞ்சனையால் கொல்கிறான் அவன். அவளோ இந்த ஆலங்காட்டில் பேயாய் அலைகிறாள். வணிகன் ஒரு நாள் இந்த ஆலங்காட்டு வழியே தனியே வருகிறான். பேயாக இருந்த நீலி பெண் வடிவில் வணிகனைத் தொடர்கிறாள். அவள் வஞ்சமொழிகளுக்குச் செவி கொடாது செல்கிறான் வணிகன். பின்னும் தொடர்வது அறிந்து பழையனூர் அம்பலத்து வேளாளரிடம் முறை யிடுகிறான். பேயாய் நீலியும் அவள் தன் கணவனுடன் வாழ வகை செய்ய வேண்டுகிறாள். பேயின் இடையில் இருந்த குழந்தையும் வணிகனைத் தந்தை உறவுடன் அணைகிறது. இதனால் ஏமாந்த வேளாளர் எழுபதின்மரும் வணிகனை அப்பெண் பேயுடன் ஓர் இரவு தங்கள் ஊரில் தங்கச் சொல்கின்றனர். வணிகன் அதற்கும் மறுக்க, அவர்கள் அவனுக்கு ஏதாவது தீங்கு நேர்ந்தால் அவர்கள் எல்லோரும் தீ மூழ்குவதாகச் சத்தியம் செய்கின்றனர். பேயுடன் தங்கிய வணிகன் உயிர் குடித்துப் பேய் மறைந்து விடுகிறது. சொன்ன சொல்லைக் காப்பாற்றி வேளாளர் எழுபதின்மரும்தீக்குளிக்கின்றனர்.

மாறுகொள் பழையனூர் நீலி செய்த
வஞ்சனையால் வணிகர் உயிர் இழப்பத்
தாங்கள்
கூறியசொல் பிழையாது துணிந்துசெந்திக்
குழியில் எழுபது பேரும் முழுகிய

கதையைத் தொண்டை மண்டல சதகமும், உமாபதி சிவாச்சாரியார் சேக்கிழார் புராணமும் வியந்து கூறுகிறது. சத்தியத்துக்கு உயிர் கொடுத்தவர் வேளாளர் என்றாலும், கோயில் எடுப்பித்திருப்பது பழையனூர் நீலிக்கே. ஆம்! வஞ்சப் படுத்தொருத்தி வாழ் நாள் கொள்ளும் வகை கேட்டு நாம் அஞ்சுவது பழையனூர் நீலியைக் கண்டுதானே; அப்படி அஞ்சும் போதெல்லாம் 'அள்ளலம்பழனை மேயா ஆலங்காட்டு அடிகளை' நினைத்தால் அவர் வினைகளை யெல்லாம் கரி சறுத்திடுவர் என்பர் அப்பர். ஆம்! அவருடன் சேர்ந்து ஆலங்காட்டு அடிகளை நினைந்து நாமும் நம் வினைகளைக் களையலாம் அல்லவா?

# ப்ரூக் பாண்ட் தேயிலை




## தேயிலைகளுக்குள்ளே தலை சிறந்தது

ப்ரூக் பாண்ட் இந்தியா பிரைவேட் லிமிடெட்.

BB 329 K



உலகப்
பிரசித்திபெற்ற
தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக் குணமளிக்கும்

**பெப்ஸ்** வில்லைகளை உட்கொண்டதால், பிராங்கைடிஸ் விரைவில் அகன்றது

தொண்டை, மார்பு உபாதைகளுக்கான பெப்ஸ் வில்லைகளை உட்கொண்டு தொண்டைப் புண், ப்ராங்கைடிஸ், இருமல் மற்றும் ஜலதோஷத்தை சீக்கிரம் நிவர்த்தி செய்து கொள்ளுங்கள். பெப்ஸ் வில்லைகளைச் சுவைத்து, குணமளிக்கும் ஆவி போன்ற அதன் சத்து வேலை செய்வதை உணருங்கள் . . . வேதனையைக் குறைக்கவும் கிருமிகளை அகற்றவும் உதவியளிக்கிறது.




## பெப்ஸ்

தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணம் அளிக்கும்
வில்லைகள்

எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

ஸி. இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லிட்.

FPY-56-TAM

சோல் ஏஜண்டுகள்: தாதா அண்டு கம்பெனி
86, ஸைனியப்ப நாயக் தெரு, சென்னை-3

# SOLDIN

SOLID PHENYLE
WITH D. D. T. AND CRESOL




# MANURIN

FERTILIZER TABLETS
COMPLETE PLANT FOOD





**INDIA ALKALIES LTD.**
1, GARSTIN PLACE, CALCUTTA-1

விநியோகஸ்தர்கள்:
மெஸர்ஸ் ஏ. வி. தாமஸ் & கோ.,
ஆலப்புழை கோவை



துரிதமாக
உறுதியாக
வழவழப்பாக
எழுதக் கூடியது



டிஸ்ட்ரிபியூட்டர்கள்
ராஜேந்திரகுமார் & கோ.
236, அப்துல் ரஹ்மான்
தெரு, பம்பாய்-3

**RITESHARP** *Pens*
GHORUPDEV, BOMBAY 10

விற்பனை மற்றும் சர்வீஸ் செய்பவர்கள்:
ஜெம் அண்டு கம்பெனி
325/326, நேதாஜி போஸ் ரோடு, சென்னை-1

# தமிழ் கூறும் நல்லுலகம்

பெங்களூர் மாநகரில் மல்லேசுவரம் கேரளா யூனியன் ஹாலில் 'நுண்கலைக்கழகம்' தன் முதலாண்டு வைபவ விழாவினைப் பிரபல கன்னட நாடக எழுத்தாளர் திரு ''பர்வதவாணி'' அவர்கள் தலைமையில் சமீபத்தில் சிறப்பாகக் கொண்டாடியது. பெங்களூர் நகராண்மைக் கழகத்தின் மேயர் உயர்திரு நாராயண செட்டி தலைமை விருந்தினராக இருந்து விழாவினைச் சிறப்பித்தார்.

இவ்விழாவின் பொழுது கழக நடிகர்கள் தமிழ் ஹாஸ்ய நாடக மொன்றைச் சிறப்பாக நடித்துக் காட்டினர்.

★

காசி இந்து பல்கலைக் கழகத்துத் தமிழ்ச் சங்கத்தினர் இவ்வாண்டு பாரதி விழாவை செப்டம்பர் 22-ந் தேதி யன்று எந்த ஆண்டையும் விடச் சிறப்பாகக் கொண்டாடினர். விழாவுக்குச் சென்னை தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையத்தைச் சார்ந்த திரு சோமசுந்தரத் தம்பிரான் அவர்கள் தலைமை வகித்து, தெள்ளு தமிழில் பேசிக் கூட்டத்தினரை மகிழ்வித்தார்.

விழாவின் துவக்கத்தில் திரு. வீருசாமி பிள்ளையவர்கள் நாகசுர இன்னிசையைப் பொழிந்து அவையோரை மகிழ்வித்தார்.

★

நாகபுரி தென்னிந்தியா கழகம், தென்னிந்திய மாதர் கழகம் இவைகளின் ஆதரவில் 16-9-59 அன்று அமரகவி பாரதி விழா சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. பாரதி அன்பர்கள் பலர் விழாவில் பங்கெடுத்துக் கொண்டு பாரதி பாடல்களைப் பாடவும் பாரதியாரைப் பற்றியும் பேசினார்கள். விழாவின் சிறப்புப் பகுதியாகத் திருமதி வஸந்தா ராகவனின் நடனம் அமைந்தது. இவ் விழாவுக்கு டிபுடி அக்கவுண்டண்ட் ஜெனரல் திரு எஸ். ஓய். கோவிந்தராசன் அவர்கள் தலைமை வகித்துச் சிறப்பித்தார்கள்.

★

அந்தமானில் செப்டம்பர் 11-ந் தேதி திரு சங்கரநாராயணன் அவர்கள் தலைமையில் பாரதி விழா விமரிசையாக நடைபெற்றது. தோழர்கள் திரு. பாண்டியன், மூர்த்தி, மணி, நடராசன், வடிவேல், சின்னையா ஆகியோர் பாரதியாரின் தொண்டுகளைப் பற்றி அரிய சொற்பொழிவு நிகழ்த்தினார்கள்.

★

துங்கபத்திரா அணையிலுள்ள பாரதி நிலையத்தார் பாரதியாரின் படத்தைப் பாரதி நாம கோஷமும் கீதமும் முழங்க, திருப்பதி ஸ்ரீ வெங்கடசாமி அவர்கள் குழுவினரின் நாகசுரத்துடன் ஊர்வலமாக எடுத்துச் சென்றனர். சூப்ரடெண்டிங் இன்ஜினியர் ஸ்ரீ பி. தம்பு மல்லா ரெட்டி அவர்கள் தலைமையின் கீழ் விழா நிகழ்ச்சிகள் ஆரம்பமாயின. ஆண் பெண் குழந்தைகள் பாரதி பாடல்களுக்கு அபிநயம் பிடித்துப் பாடிச் சபையோரை மகிழ்வித்தனர்.

★

நாகபுரி தென்னிந்திய மக்கள் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி சங்கராச்சாரியார் சுவாமிகளின் ஆக்ஞையை முன்னிட்டு, சென்ற நான்கு வருஷங்களாக வியாஸ பூஜா மஹோத்ஸவத்தை நடத்திவருகிறார்கள். இவ் வருஷம் திருவெண்காடு நியாயமீமாம்ஸா சிரோமணி ஸ்ரீ டி. கே. முத்துஸ்வாமி சாஸ்திரிகள் ஹாலாஸ்ய மாகாத்மியமென்னும் திருவிளையாடற் புராணத்தை இருபத்தொரு நாட்கள் உபன்யாசம் செய்தார்கள்.

★

சிங்கப்பூரில் உள்ள இந்திய நுண்கலைச் சங்கத்தின் ஆதரவில் சென்ற மாதம் 28ம் தேதி குமாரி கோமளா குற்றாலக் குறவஞ்சி யென்ற நூலை நாட்டிய நாடகமாகத் தயாரித்து அரங்கேற்றினார். அதில் வஸந்தவல்லியாகவும் அவர் தோன்றிச் சிறப்புடன் ஆடினார். தாகூரின் ''சித்ரா'' நாடகமும் சங்கத்தின் அங்கத்தினர்களால் தமிழில் நடிக்கப்பட்டது.

★

பம்பாயில் தமிழர்கள் அதிகமாக வசிக்கும் பகுதிகளில் ஒன்றான செம்பூரில் முத்தமிழைப் பேணி வளர்க்கும்' பொருட்டுச் சமீபத்தில் நிறுவப்பட்ட 'பம்பாய்த் தமிழ் மன்றத்தில்' பாரதி விழா செப்டம்பர் 20ந் தேதியன்று தமிழ் அன்பர் திரு ஹாலாஸ்யம் அவர்களின் தலைமையில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. விழாவில் 'திருவாளர்கள் கோபாலகிருஷ்ணன், மீனாட்சிசுந்தரம், திருமதி சரோஜாநாராயணன் முதலியோர்கள் பாரதியைப் பற்றிச் சொற்பொழிவாற்றினர்.



ஓய்வுபெற்ற கல்வி இலாகா டிபுடி இன்ஸ்பெக்டர் திரு கே. பி. நாராயண ஐயர் அவர்களின் சஷ்டியப்த பூர்த்தி வைபவம் சமீபத்தில் புதுதில்லியில் விமரிசையாக நடைபெற்றது.

# ஹெர்க்குலிஸ்

## காந்தன்

இந்தப் பெயரை நம் பள்ளிக்கூட மாணவர்களிலிருந்து யாருமே நன்கு அறிவார்கள். அந்தப் பெயரைத் தாங்கிய சைக்கிள் வண்டி கூடப் புகழ்பெற்று விட்டதே! கிரேக்க நாட்டு மாவீரனான ஹெர்க்குலிஸின் பெயரும், அவனுடைய வீரதீரச் செயல்களும் நம்மவர்களுக்குப் புதியன அல்ல. அவனுடைய புஜபல பராக்கிரமத்தைக் காட்டும் பழங்காலச் சிற்பங்களும் சிலைகளும் உலகிலுள்ள மியூஸியங்களிலெல்லாம் காணப்படுகின்றன.

ஹெர்க்குலிஸ் சாதித்ததாகப் பண்டைக் கால நூல்கள் கூறும் மகத்தான சாதனைகளையெல்லாம் காட்டுவதானால் அது மிகவும் அசாத்தியமான காரியம். ஆகவே படத்துக்கு வேண்டிய அளவு சில சம்பவங்களை மட்டும் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

பிரதான கதாபாத்திரமான ஹெர்க்குலிஸ் பாகத்தை ஏற்றவரின் தோற்றமே அதிசயிக்கத்தக்க விதத்தில் இருக்கிறது. ஆதிகாலத்து வீரனை அப்படியே கண் முன் கொண்டு வந்து நிறுத்தினமாதிரி இருக்கிறது. சிற்ப வடிவங்களிலும் புகைப்படங்களிலும் மாத்திரம் பார்த்து வந்த ஹெர்க்குலிஸின் கம்பீரமான தோற்றத்தை நேரில் பார்ப்பது போல் அதிசயிக்கத்தக்க விதத்தில் அந்தப் பாத்திரத்துக்கு எல்லா விதத்திலும் பொருத்தமான ஒருவரைத் தேடிப் பிடித்துப் போட்டிருப்பதுதான் இந்தப் படத்திலேயே பாராட்டப்பட வேண்டிய முக்கிய அம்சம்.

ஹெர்க்குலிஸ் அநாயாசமாக ஒரு மரத்தை வேரோடு பிடுங்குவதைப் பார்த்ததும் எனக்கு அனுமான் நினைவு வந்தது. நம் நாட்டு இதிகாச, புராணக் கதைகளில் அமானுஷ்ய வீரதீரச் செயல்களுக்கும் வீரபுருஷர்களுக்கும் பஞ்சமே இல்லை. மேற்படி வீர சாகஸங்களுடன் உள்ளத்தை உருக்கும் சோகக் கதைகளும் ஏராளமாக இருக்கின்றன. ஆனால் அவைகளை நல்ல முறையில் படமாக்க ஒரு படாதிபதிகூட இல்லையே என்பதை நினைக்கும்போதுதான் வருத்தமாயிருக்கிறது. கலை நுணுக்கங்களில் சிரத்தை காட்டித் தத்ரூபமாக மேற்படி காட்சிகளைப் படமாக்கக் கூடிய டைரக்டர்களும் நம் நாட்டில் இல்லை.

ராமாயணத்தில் மாருதி கடல் தாண்டுவதையும், இலங்கையில் அரக்கர்களை மரங்களைக் கொண்டே சாடி வீழ்த்தியதையும் பற்றி இதிகாசம் பிரமாதமாகக் கூறுகிறது. நாமும் அதைப் பெருமையாகக் கூறிக் கொள்கிறோம். ஆனால் இதுவரை நம் நாட்டுப் படாதிபதி எவருமே எல்லோரும் பாராட்டும் முறையில் மேற்படி காட்சிகளைப் படமாக்கினதில்லை என்று துணிந்து கூறலாம். வடநாட்டைச் சேர்ந்த பாபுபாய் மிஸ்திரி தந்திரக் காட்சிகளை அமைப்பதில் கைதேர்ந்தவராதலால் இதிகாசக் காட்சிகளை ஓரளவு சிறப்பாகவே அமைத்திருக்கிறார் என்று கூறலாம். ஆனால் மேல்நாட்டுப் படங்களின் அளவு உயர்த்திக் கூறமுடியாது.

ஹெர்குலிஸின் கதை முன்பு வெளிவந்து மிகப் பிரசித்திபெற்ற ''ஸாம்ஸனும் டிலைலாவும்'' என்ற படம் போன்றதுதான். ஆனால் அதுபோன்ற மகோன்னதமான மாபெரும் தயாரிப்பு என்று கூறமுடியாது.

இது ஒரு இத்தாலியப் படம். ஆங்கிலத்தில் 'டப்' செய்யப்பட்டிருக்கிறது.

தன் சொந்தச் சகோதரனையே கொன்றுவிட்டு ஆட்சி பீடத்தைக் கைப்பற்றுகிறான் பெலியாஸ். பிறகு அரசுரிமைக்கு வாரிசான ஜேஸனையும் நாடு கடத்துகிறான். இதனால் மக்கள் கொதிப்படைகின்றனர். மன்னன் தன் மகன் இபிடஸுக்குப் போர்ப் பயிற்சி அளிக்க மாவீரன் ஹெர்குலிஸை நியமிக்கிறான். மன்னன் மகன் ஹெர்குலிஸை மதியாமல் கர்வமாக நடந்து கொண்டாலும், மன்னன் மகள் அந்த வீர புருஷனுக்குத் தன் உள்ளத்தில் இடம் கொடுக்கிறாள். இபிடஸ், ஹெர்க்குலிஸுக்குப் பல விதத்திலும் தீங்கு செய்ய முயன்று அவமானமடைகிறான். இறுதியில் ஒரு சிங்கத்தினால் கொல்லப்படுகிறான். மகன் இறந்ததற்கு ஹெர்க்குலிஸே காரணம் என்று கருதிய மன்னன் அவனை ஒழிக்கத் தீர்மானித்துப் பல விதத்திலும் கொடுமைப்படுத்துகிறான். தந்திரத் திறமை வாய்ந்த மந்திரி யூரிடஸ் ஹெர்குலிஸை ஒழித்துக் கட்ட அரசனுக்குப் பல யோசனைகள் கூறுகிறான். இதனாலெல்லாம் ஹெர்க்குலிஸின் பெருமை அதிகமாகிறது. அவனுடைய வீர சாகஸங்களே படத்தின் சிறப்பான அம்சங்கள்.

நம் நாட்டு இதிகாச புராணக் காட்சிகளையும் நம்பமுடியாத நிகழ்ச்சிகளையும் நம் நாட்டு மக்களே வரவேற்பதில்லை. ஆனால் மேற்படி காட்சிகள் மேல்நாட்டுப் படங்களில் வந்தால் பார்த்து ரஸிக்கின்றனர். இதற்குக் காரணம் அவர்களது படத் தயாரிப்பின் சிறப்புத்தான் என்பதில் ஐயமில்லை.

ஹெர்க்குலிஸும் மற்ற வீரர்களும் பிரயாணம் செய்யும் மரக்கலம் புயலில் சிக்கித் தத்தளித்த காட்சி, கடற்கொந்தளிப்பை ஹெர்க்குலிஸ் சமாளித்தது, வேற்று நாட்டு வீராங்கனைகளைச் சந்தித்தது முதலிய நிகழ்ச்சிகளெல்லாம் அற்புதமாகப் படமாக்கப்பட்டிருக்கின்றன.

முடிவில் மாவீரன் ஹெர்க்குலிஸும், அவன் மனங் கவர்ந்த மங்கையும் புது வாழ்வை நாடிச் செல்கின்றனர்.

இம்மாதிரி சிறந்த தயாரிப்பாக, அதாவது அற்புதமான காட்சிகளுக்காகவே படத்தைப் பார்க்கலாம் என்று சொல்லும் அளவுக்கு நம் தமிழ்ப்படம் வெளிவரும் காலம் என்றைக்காவது ஒரு நாள் வருமா என்ற சிந்தனையுடன் தியேட்டரை விட்டு வெளியே வந்தேன்.

## அவள் எவ்வளவு அழகாயிருக்கிறாள்...

## அவள் உபயோகிப்பது பாண்ட்ஸ்

**நீங்களும் சருமத்தை மிருதுவாகவும், வழவழப்பாகவும், அழகாகவும் வைத்துக் கொள்ள பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகியுங்கள்**




இலேசானதும் பனிக்கட்டிபோல் மென்மையானதுமான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உங்கள் சருமத்தின் மென்மையான அழகைப் பாதுகாத்து, அதை எழிலுடனும், பொலிவுடனும் இருக்கச் செய்யும். எண்ணெய்ப் பசையில்லாத இந்த க்ரீம் தேய்த்துக்கொண்ட மறு வினாடியிலேயே மறைந்துவிடுகிறது. பவுடர் போட்டுக் கொள்வதற்கு முன் இந்த க்ரீமை தடவிக்கொண்டால் பவுடர் மணிக்கணக்கில் படிந்திருக்கும்.

**சருமத்தை சுத்திகரிக்கும் சிறந்த க்ரீம்**

*தினமும் இரவில் பாண்ட்ஸ் கோல்டு க்ரீமை முகத்தில் தடவுங்கள். அது உங்கள் மிருதுவான சருமத்தை சுத்தம்செய்து முக அழகைப் பாதுகாக்கும்*

சீஸ்ப்ரோ பாண்ட்ஸ் இன்கார்ப்பரேடட் (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பெற்றது)

# தேன்கூடு

### மூன்றாம் அத்தியாயம்

## பசி!

உஷா நினைத்திருந்தால் கல்லூரி காண்டீனிலேயே ஏதாவது சாப்பிட்டுப் பசியாறி யிருக்கலாம். ஆனால் அவள் அப்படிச் செய்ய விரும்பவில்லை. அது மனச்சாட்சிக்கு விரோதமாக இருக்கும் என்று தோன்றியது. ரோசமும் ஏக்கமும் விம்பு செய்தன.

பட்டினி கிடந்து பிறருடைய பரிதாபத்துக்கு ஆளாக நேர்வது அவமானம் தான். பங்களாவை விட்டுக் காலடி எடுத்து வைக்காத அவள் எத்தனை மைல் தூரம் நடக்க முடியும்? ஆகவே கல்லூரி வழியாகச் செல்லும் பஸ் நிற்கும் இடத்துக்கு வந்ததும் அவள் கால்கள் நின்று விட்டன. பஸ் வருவதற்குள் பிறர் கண்ணில் படாமல் இருக்க வேண்டுமே என்று அவள் தவித்த தவிப்பு! வயிற்றுப் பசியையும் களைப்பையும் விட அந்தக் கவலை அதிகமாக இருந்தது.

நல்ல வேளையாகச் சீக்கிரமே ஒரு பஸ் வந்து விட்டது. ஆனால் அது நிற்கப் போவதுபோல் பாசாங்கு செய்துவிட்டு, இரட்டை ஊதல் ஒலிக்கவே, வேகமாகச் சென்று மறைந்தது. அதில் கடைசிவரிசையில் முதலாவதாக ஆம்பல் அழகியா உட்கார்ந்திருந்தாள்? ஆமாம்; அவளேதான்! சந்தேகமில்லை. உஷாவுக்கு மானம் போவதுபோல் வேதனையாக இருந்தது. கல்லூரிக்கு வரும் பெண்களில் எல்லோருமே சொந்தக் காரிலா வருகிறார்கள்! வருகிறவர்களில் முக்கால்வாசிப் பேர்கள் கல்லூரி பஸ்களிலும், சர்க்கார் பஸ்களிலும்தான் வருகிறார்கள். ஆனால் அவர்களைப்போல் உஷா வரலாமா என்பதுதான் கேள்வி! வீட்டுக் கார் வர முடியாமல் போனால் வாடகைக் கார் எங்கே போயிற்று? அப்படி என்ன அவள் பண வசதி இல்லாதவளா? சொந்த வண்டியென்றாலும் அதற்குப் பெட்ரோல் செலவு ஆகாதா? அது பணம் இல்லையா? இரண்டில் ஒன்று வராமல் இவள் பஸ்ஸுக்காகக் காத்திருப்பானேன்? ஆம்பலழகியின் வட்ட விழிகள் அவளைப் பார்த்து விட்டன என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

அப்படியானால் இன்று கல்லூரியில் இவள் பேச்சுத்தான் அடிபடப் போகிறது. ஆம்பல் அழகி ஒரு நாளும் சும்மா இருந்துவிடப் போவதில்லை. எல்லாரிடமும் போய் அவள் இதைச் சொல்லாமல் இருக்க மாட்டாள்! இது பற்றிப் பேச்சு வராமல் போகப் போவதில்லை. வந்தால் என்ன செய்வது?

அவள் யோசனை செய்யத் தொடங்குவதற்குள் பின்னாலேயே மற்றொரு பஸ் வந்து விட்டது. உஷா அதில் ஏறிக் கொண்டாள். உட்கார்ந்த பிறகுதான் தனக்குப் பக்கத்தில் இருப்பவளை அவள் கவனித்தாள். வெள்ளையன் தோட்டத்தில் இருந்த தேவானைதான் காணப் பட்டாள்.

"நீயா?"

"நீங்களா?"

இருவரும் புன்சிரிப்புக் காட்டினார்கள்.

"வண்டி வரல்லியா, அம்மா?"

"இல்லை; அது வேறு வேலையாகப் போயிருக்கிறது. ஆமாம், நீ எங்கே புறப்பட்டாய்; ஊரிலிருந்து நீ எப்போது வந்தாய்?"

தேவானை இதற்கு என்னவோ மறுமொழி கூறினாள். ஆனால் அது உஷாவின் கவனத்திலேயே இறங்கவில்லை. எப்போதோ வந்திருப்பாள்? எங்கேயோ போகிறாள். இதெல்லாம் இவளுக்கு என்ன கவலை? பசி ஒருபுறம் வாட்டியது; வேதனை மறுபுறம் வாட்டியது. கண்டக்டர் டிக்கெட்டைக் கிழித்துக் கொடுக்க வந்து விட்டான். உஷா ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை நீட்டினாள்.

"நோட்டுக்குச் சில்லறை இல்லை; சில்லறையாக இருந்தால் கொடுங்க; இல்லையோ அடுத்த 'ஸ்டாப்'பிலே இறங்கிடுங்க!" என்று கண்டித்துக் கூறி விட்டான் கண்டக்டர். உஷாவிடம் வேறு காசே கிடையாது. முன்பின் அவள் நகரத்துப் பஸ்ஸில் ஏறி

**ஆர்வி**



யிருந்தால் சில்லறை கொண்டு வர வேண்டும் என்பது தெரிந்திருக்கும்.

"என்ன சொல்றீங்க? சில்லறை இருக்குதா, இல்லையா?"

உஷா ஒரு கணம் திகைத்துப் போய் விட்டாள். அக்கம் பக்கத்தில் இருந்தவர்களுடைய பார்வை அவள்மீது திரும்பியிருந்தது. இந்தச் சில்லறைத் தொந்தரவுகளைப் பற்றி அவளுக்கு ஒன்றுமே தெரியாது!

"இதோ, எங்கிட்டே இருக்கு அம்மா சில்லறை! டிக்கட்டை வாங்கிக்குங்க!" என்று இடுப்பிலிருந்து நாலணாவை எடுத்து நீட்டினாள் தேவானை.

உஷாவையும் தேவானையையும் அருகில் இருந்தவர்கள் கவனித்தார்கள். இருவரும் கிட்டத்தட்ட சமவயதினராகவே காணப் பட்டார்கள். இருவரும் அவரவர் பாங்கில் லட்சணமாகவே தென்பட்டார்கள். ஆயினும் உஷா செடியிலே மலர்ந்த ரோஜாவைப் போலவும், தேவானை காசித் தும்பையைப் போலவும் விளங்கினார்கள். செல்வத்தின் செழிப்பு ஒருத்தியிடம்; உழைப்பின் வனப்பு மற்றொருத்தியிடம். பெண்மையும் தாய்மையும் அவர்களுடைய இளமைக்கு எழில் வண்ணம் பூசியிருந்தன. ஒருத்தி பட்டாம்பூச்சி; மற்றொருத்தி தும்பி.

உஷா அந்த ரூபாய் நோட்டைத் தேவானையிடம் கொடுத்து, "நீ வைத்துக்கொள்!" என்றாள்.

உஷா சட்டென்று தன் தவற்றை உணர்ந்து கொண்டாள். எல்லாரும் கவனிக்கும்போது இப்படிச் செய்து தன் பெரிய தனத்தைக் காட்டுவதாகும் என்று அவளுக்குப் பட்டுவிட்டது. சண்முகம் கூறிய அந்த வார்த்தைகள் சம்பந்தமில்லாமல் இப்பொழுது நினைவுக்கு வந்தன. அன்று முதல் அவள் பாபுவை அடியோடு மறந்து விட்டாள். இப்பொழுது சண்முகத்தின் வார்த்தைகளோடு பாபுவின் தோற்றமும் கண் முன்னே வந்து நின்றன. அவனை மறந்து விட்டதாகத்தான் அவள் எண்ணினாள். ஆனால் அது உண்மை இல்லை என்பது அவளுக்கே தெரியும். தன்னால் அப்படி



ஏன் மறந்துவிட முடியவில்லை என்று அவளுக்குப் புரியவில்லை. தேவானையைக் கண்டபிறகு அவனைப் பற்றி விசாரிக்க வேண்டும் என்ற எண்ணம் அவளை மீறிக் கொண்டு உண்டாயிற்று. பாபு, தேவானை, சண்முகம் இவர்கள் எல்லாரும் ஒரே படியைச் சேர்ந்தவர்கள் ; ஒரே விதமான குணமும் எண்ணமும் படைத்தவர்கள். அவர்களிடம் பழகுவது, பேசுவது ஒரு தனிக் கலை. அதில் தனக்குச் சிறிதும் தேர்ச்சியில்லை என்பதைத்தான் இப்பொழுதும் அவள் கண்டாள். உடலும் மனமும் சோர்ந்திருந்த இந்த நேரத்தில் மௌனமாக இருப்பது ஒன்றே அவளுக்குச் சரியான வழியாகத் தோன்றியது.

கல்லூரி வாசல் அருகில் பஸ் நின்றதும் அவள் தேவானையிடம் சொல்லிக் கொண்டு இறங்கினாள். அவளுடன் இன்னொரு பிரயாணியும் இறங்குவதை அவள் கண்டாள். எங்கேயோ பார்த்த முகம். அவன் முகத்தில் புன்சிரிப்பு அரும்பி நின்றது. மிஸஸ் மீனாட்சியம்மாளின் இரண்டாவது பிள்ளை சேகர்தான் அவன்.

"ஒரு நிமிஷம்!" என்றான் அவன்.

"என்ன?" என்று அவள் மெல்லிய குரலில் கேட்டாள்.

"என்னைத் தெரிகிறதா?"

அவள் தெரியும் என்பதற்கறிகுறியாகத் தலையை அசைத்தாள்.

"விசேஷம் ஒன்றுமில்லை. கண்ணபிரான் உனக்குச் செக் ஒன்று கொடுத்ததும், அதை நீ சுக்குச்சுக்காகக் கிழித்தெறிந்ததும் நன்றாக என் காதில் விழுந்தது. அதைப் பாராட்டத்தான் இங்கே இறங்கினேன்!"

உஷாவுக்கு இது திகைப்பைத் தந்தது. அந்தச் செக்கைப் பற்றிய விஷயம் கிணற்றில் போட்ட கல்லைப்போல் முடிந்து விட்டதாக எண்ணியிருந்தாள். அதைப் பற்றி அவள் தந்தையோ, தாயோ பேசவேயில்லை. கண்ணபிரான் அவர்களுக்குத் தெரியாமல் அதைக் கொடுத்திருக்கவும் கூடும். ஆனால் அவன் அதைப் பற்றிப் பிறகு கவலைப் பட்டதாகவே தெரியவில்லை. அப்படியிருக்க, முன்பின் பேசிப் பழக்கமில்லாத இந்த இளைஞன் அதற்காகத் தன்னைப் பாராட்ட வருவது அவளுக்கு விசித்திரமாகவும் பொருத்தமற்றதாகவும் பட்டது. நல்ல தரையில் நடக்கப் போய்ச் சேற்றைக் காலில் பூசிக்கொண்டதுபோல் அவன் பேச்சு சிறிது அருவருப்பாகவும் இருந்தது.

உஷா தலையைக் குனிந்துகொண்டு, "கல்லூரிக்கு நேரமாகி விட்டது. நான் வருகிறேன்!" என்று போகத் தொடங்கினாள். நின்றால்தானே பேச்சு வளரப் போகிறது?

"இன்னும் ஒரு நிமிஷம்..."

உஷா திரும்பிப் பார்த்தாள், பொறுமையின்றி.

"ஆம்பலழகி இப்பொழுது உன்னோடு தானே படிக்கிறாள்?"

"ஏன்?"

"நான் இந்த 'ஸ்டாப்'பில் நிற்கிறேன் என்று அவளிடம் ஒரு வார்த்தை சொல்ல முடியுமா?"

"ஆகட்டும்!" என்று அவள் விறுவிறு என்று வாயிலில் சென்று மறைந்தாள். 'உண்மையில் இவன் என்னைப் பாராட்ட இறங்கினானா? ஆம்பலழகியைப் பார்க்க இறங்கினானா? இவன் என்னைச் சரியாகக் கூடப் பார்த்ததில்லை. ஆனால் எடுத்ததுமே, "நீ - நான்" என்று பேசுகிறானே. இவனுக்கு அந்தச் செக்கைப் பற்றி யார் சொல்லியிருப்பார்கள்?' என்றெல்லாம் நெஞ்சிலே எண்ணங்கள் ஓட அவள் தன் வகுப்பினுள்ளே நுழைந்தாள். எப்பொழுதும் ஆம்பலழகிக்குத் தன்மீது ஒரு கண் என்பது அவளுக்குத் தெரிந்ததுதான். இன்றும் அவள் பார்வையிலே குறும்புத்தனம் நெளிந்து கொண்டிருந்தது. இதற்கெல்லாம் கவலைப்பட்டால் முடியுமா? மெதுவாக அவளை நெருங்கி, "உன்னைப் பார்க்க வாசல் 'பஸ் ஸ்டாப்'பில் ஒருவர் காத்திருக்கிறார். சொல்லச் சொன்னார்!" என்றாள்.

"நம்பளை 'மீட்' பண்ண யாரும் வரமாட்டாங்களே!"

"அது தெரியாது; அவர் உன் பெயரைத் தான் சொன்னார்."

"நீ இன்னிக்கு அந்தப் பஸ் ஸ்டாப்பிலே 'வெயிட்' பண்ணிக்கிட்டிருந்தியே ஏன், உங்க கார் என்ன ஆச்சு?"

உஷாவுக்கு விடை கூற விருப்பமில்லை. இருந்தாலும், "எங்கள் கார் வரவில்லை!" என்று மட்டும் கூறிவிட்டு, தன் இடத்துக்குச் சென்றாள். ஆம்பலழகி விருப்பமில்லாதவளைப் போல் போனாள்.

பாதி வகுப்பு நடக்கும்போதுதான் அவள் திரும்பி வந்தாள். வந்தவள் உடனே ஒரு சீட்டில் ஏதோ எழுதி அதை விரிவுரையாளருக்குத் தெரியாமல் உஷாவுக்குக் கொடுத்து அனுப்பினாள்.

"அந்த மனிதர் எனக்காக வரவில்லை. உன்னோடு பேசவே வந்திருக்கிறார்!" என்று அதில் குறிப்பிட்டிருந்தாள்.

உஷா அந்தச் சீட்டைக் கசக்கி எறிந்து விட்டு, பாடத்தைக் கவனிக்க முயன்றாள். ஆனால் பசி காதை அடைத்தது; ஆசிரியையின் பேச்சு கிணற்றுக்குள்ளிருந்து பேசுவது போல் ஒலித்தது. பசியின் கொடுமை எத்தகையது என்பது இன்று தான் தெரிந்தது. தாகம் நெஞ்சை வாட்டியது. நேரம் செல்லச் செல்ல வகுப்பில் என்ன நடக்கிறது என்றே தெரியவில்லை. வகுப்பு ஆசிரியை அவளை மூன்றும் முறையாக அழைத்தபோது தான் அவள் எழுந்து நின்றாள். வகுப்பில் மெல்லிய சிரிப்பலை ஒன்று பரவிச் சென்றது.

"என்ன உஷா-ஏன் என்னவோபோல் வாட்டமாக இருக்கிறாய்?" என்று கேட்டாள் அந்த ஆசிரியை.

"ஒன்றுமில்லையே!"

"பிரின்சிபாலிடமிருந்து அழைப்பு வந்திருக்கிறது. போய்விட்டு வா!"

உஷா இதைக் கேட்டுத் திடுக்கிட்டாள். பஸ்ஸில் வந்து இறங்கிய சேகரின் வேலையாக இருக்குமோ என்று ஒரு நினைவு எழுந்தது. கூடவே மறுபடியும் பாபு அங்கே வந்திருப்பானோ என்ற சந்தேகமும் தட்டியது. அதையும் நிச்சயிக்க மாட்டாமல் அவள் பிரின்ஸ்பாலின் அறைக்குள் போய் நின்றாள். இரு கரங்களையும் கூப்பி வணங்கினாள்.



திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதி கோவிலில் மதுரை லக்ஷ்மி அம்மாள் திருப்புகழ்சபா ஒவ்வொரு சனிக்கிழமையன்றும் பஜனை நிகழ்த்தி, மூன்றாவது ஆண்டு விழாவைச் சமீபத்தில் விமரிசையாகக் கொண்டாடியது. இவ்வைபவத்தில் "கலைமகள்" ஆசிரியர் திரு கி. வா. ஜகந்நாதன், திரு எஸ். சச்சிதானந்தம் பிள்ளை, திருப்புகழ்மணி டி. எம். கிருஷ்ணசாமி ஐயர் ஆகியோர் கலந்துகொண்டு சொற்பொழிவாற்றினர். இவ்விழாவைச் சிறப்புற நடத்திய திரு டி.எம்.கணேசன் அவர்களை அனைவரும் பாராட்டினர்.

"அப்படி உட்கார்!"

உஷாவுக்குத் தயக்கமாகத்தான் இருந்தது. அந்த ஆயிரம் ரூபாய் செக்கைப் பற்றி அந்தச் சேகர் சொல்லியிருப்பானோ என்று மனத்தில் ஒரு பயம் புரண்டது.

ஆனால் பிரின்ஸ்பாலின் பார்வையில் அன்பு கனிந்திருந்தது.

"சாப்பிட்டாயா நீ?"

இதைச் சிறிதும் எதிர்பார்க்காத உஷா உண்மையைக் கூறிவிட்டாள்: "இல்லை."

"ஏன்?"

"......"

"சரி; ஏதோ கோபம். சாப்பிடவில்லை. வந்துவிட்டாய்! சாப்பிடாமல் வகுப்புக்கு வந்து, மயக்கமடைந்து விழுந்து விட்டாய் என்று வைத்துக் கொள்வோம். அதனால் யாருக்கு வீண் பழி வரும்? கோபித்துக் கொண்டு சாப்பிடாமல் இருந்தவள், கோபித்துக் கொண்டு கல்லூரிக்கும் வராமல் இருந்திருந்தால் இந்தக் கேள்வியே வரப் போகிறதில்லை. இப்பொழுது இதனால் வரும் பழியோ, கெட்ட பெயரோ யாருக்கு? யோசித்துப் பார்!....."

பிரின்ஸ்பால் யோசிக்கச் சிறிது இடைவெளி விட்டு மீண்டும், "உன்னுடைய சொந்த விஷயங்களில் தலையிட எனக்கு விருப்பமில்லை. ஆனால் நீ இந்தக் கல்லூரியின் மாணவி என்கிற முறையில் உனக்குச் சில புத்திமதிகள் கூற எனக்கு இடமுண்டு. இப்பொழுதுதான் உன்னுடைய சர்ட்டிபிகேட் புத்தகத்தையும், உன் முன்னேற்றக் குறிப்பையும் பார்த்தேன். இவ்வளவு புத்திசாலியான பெண் பெற்றோரிடம் மன வருத்தப்படும்படி நடந்து கொள்ளலாமா?" என்றார்.

உஷாவின் கண்கள் பசியினாலும் இந்தப் பேச்சினாலும் இருண்டன. அவளால் பேசவே முடியவில்லை. கைகளும் கால்களும் உறுதியிழந்து துவண்டன. பிரின்ஸ்பால் சட்டென்று எழுந்து, அலமாரி ஒன்றைத் திறந்து அங்கிருந்த பிளாஸ்க் ஒன்றை எடுத்து வந்தார். அந்த மூடியிலேயே பிளாஸ்கிலிருந்த காப்பியை ஊற்றி உஷாவின் முன்னே வைத்து, "இதை முதலில் எடுத்துக் கொள். அப்புறம் எனக்கு விடை கூறலாம்" என்று கூறினார்.

அவளுக்குப் போன உயிர் திரும்பி வந்தது போலிருந்தது.

"உன் தந்தை மிகவும் பிரபலமானவர்; எங்கள் குடும்பத்துக்கு வேண்டியவர். இப்பொழுது அதனால்தான் எனக்குப் போன் பண்ணினார். இன்னும் சற்றைக்கெல்லாம் அங்கிருந்து வண்டி வரும். மாலையில் நீ வகுப்புக்கு வரவேண்டியதில்லை. வண்டி வந்ததும் உடனே வீட்டுக்குப் போக வேண்டும். அது மட்டும் போதாது. போனதும் நடந்தவற்றுக்காக உன் பெற்றோரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு சாப்பிட வேண்டும். கல்லூரிக்கு நாளைக்கு வந்தால் போதும். நான் போன் செய்து கேட்பேன்! சரிதானா?" என்றார்.

"சரிதான்; ஆனால் நான் மன்னிப்பு மட்டும் கேட்க மாட்டேன். நான் அப்படி ஒரு குற்றமும் செய்யவில்லை."

"சரி, கேட்க வேண்டாம். மற்றதைச் செய்ய ஒன்றும் தடையில்லையே!"

"இல்லை...."

"சரி, போகலாம்... ஆனால் ஒரு வார்த்தை! எந்த அம்மாவுக்குமே நின்

னக் குழந்தையிடம் அன்பு அதிகமாகத் தான் இருப்பது போலிருக்கும். எனக்குக் கூட அப்படித்தான். அதை நீ தப்பாக எடுத்துக் கொள்வதா?''

''ஆனால் இப்பொழுது நான் வருப்பை விட்டுப் போனால் எல்லாரும் தப்பாக எடுத்துக் கொள்வார்கள்!'' என்று கூறினாள் உஷா.

''அதை நான் பார்த்துக் கொள்கிறேன். எனக்குத் தெரியும். அடேயப்பா, இந்தக் கல்லூரிப் பெண்கள்! எல்லாரும் எது எதையோ ஒழிக்க வேண்டும் என்கிறார்களே - ஒரு கல்லூரியின் பிரின்ஸ்பாலாக இருந்துகொண்டு நான் சொல்வது சரியல்லதான் - பெண்களுக்கு எதற்காக இந்த மாதிரியான கல்லூரிப் படிப்பு? இத்தனை வருஷ அனுபவத்தில் இந்தக் கல்லூரிகளைத் தான் ஒழிக்க வேண்டும் என்பேன் நான்! கல்லூரிப் படிப்பினால் பெண்கள் அறிவு பெறுவதைவிட அகந்தை பெறுவதே அதிகமாக இருக்கிறது! அவர்களுடைய படிப்பு அவர்களுடைய கணவர்களுக்கும் பயன்படுவதில்லை; அவர்களுடைய சந்ததியாருக்கும் பயன்படுவதில்லை. 'கலாசால் வேஸ்ட்!' கால விரயம்; பண விரயம் - இந்த இரண்டும்தான் கண்ட பலன்!''

பிரின்ஸ்பால் வேறு இடத்தில், வேறு சந்தர்ப்பத்தில் இதெல்லாம் பேச முடியாது என்பதுபோலக் கொட்டித் தீர்த்து விட்டார். ''இதோபார், இந்த வருஷத்தோடு இந்தப் பாட்டி ரிடையராகிவிடப் போகிறாள்; அதனால் தான் இப்படியெல்லாம் பேசுகிறாள் என்று நினைத்துக் கொள்ளாதே. எனக்குத் தெரியும், இப்படிச் சொல்பவர்கள் பிற்போக்கு வாதிகள் என்று சொல்வீர்கள் நீங்கள். என்னுடைய தாழ்மையான கருத்தில் இதைவிட முற்போக்கானதும், புரட்சிகரமானதும் இல்லை என்று நான் சொல்வேன்! பெண்கள் உண்மைத் தாயாகவும், உண்மை மனைவியாகவும், உண்மை மகளாகவும் இருக்க இந்தக் கல்லூரிப் படிப்பு உதவுகிறதா? உதவுகிறது என்று பேசுகிறவர்கள் மனச்சாட்சியைக் கேட்டுக்கொண்டு சொல்லட்டும்; நான் ஏற்றுக் கொள்கிறேன்! சரி, நீ போ. பட்டினி கிடப்பவனிடம் போய்ப் பிரசங்கம் செய்கிறேனே!'' என்று அவளை அனுப்பிவிட்டு, பின்னாலேயே அவளுடைய வகுப்புக்கு வந்தார்.

''உஷாவின் தந்தையிடமிருந்து போன் வந்தது. அவளை வீட்டுக்கு அனுப்பி விடுங்கள்!'' என்று சொல்லிவிட்டு, வகுப்பினுள்ளே யாரையோ பார்த்து விட்டு உள்ளே நுழைந்தார்.

''உன் பெயரென்ன?'' என்று விரலால் சுட்டிக்காட்டி அழைத்தார்.

''ஆம்பலழகி!''

''மன்னிக்க வேண்டும்; இந்த மாணவியை என் அறைக்குக் கொஞ்சம் அனுப்பி வையுங்கள். இப்பொழுதே சற்று நேரத்தில் திருப்பி விடுகிறேன்!'' என்று ஆசிரியையிடம் கூறினார்.

''உன் பெயர் என்னவென்று சொன்னாய்? ஆம்பலழகியா?''

''ஆமாம், மேடம்!''

''நீதானே நேற்று மாலை ஸ்கூட்டருக்குப் பின்னால் ஏறிக்கொண்டு போனவள்?''

ஆம்பலழகி பிரின்ஸ்பாலை முறைத்துப் பார்த்தவாறு நின்றாள். பிரின்ஸ்பாலின் கேள்வி பயத்தை எழுப்புவதற்கு மாறாக அவளுக்குக் கடும் கோபத்தைக் கொடுத்தது.

''அது போகட்டும்; நான் உள்ளே நுழைகிறபோது 'பஸ் ஸ்டாப்' அருகில் ஓர் இளைஞனோடு பேசிக்கொண்டிருந்தது நீதானே?''

''ஆமாம்; அவர்....''

''அவர், இவரெல்லாம் இருக்கட்டும். அவர் எவராக இருந்தாலும் கல்லூரிக்கு அருகில் வருவது அழகல்ல; நீ போய் நிற்பதும், பின்னால் ஸ்கூட்டரில் ஏறிக்கொள்வதும் முறையல்ல. உன் சிற்றாடை காற்றிலே பின்சக்கரத்தில் சுற்றிக் கொள்ள இருந்தது உனக்குத் தெரியுமோ? தெரியாது, எனக்குத் தெரியும். சக்கரத்தில் மட்டும் சுற்றிக் கொண்டிருந்தால் உன்னையே சுருட்டிக் கீழே தள்ளிக் கை, காலை முறித்துப்போட்டிருக்கும். நல்ல வேளை; அப்படி எதுவும் நேரவில்லை என்று உன்னைப் பார்த்த பிறகு தெரிகிறது. இன்றைக்கும் அவரோடுதான் கல்லூரிக்கு வந்தாயோ?''

''இல்லை, மேடம்!''

''அப்படித்தான் நானும் நினைத்தேன். ஏனென்றால் அவருக்குப் பக்கத்தில் ஸ்கூட்டரைக் காணவில்லை, நீ முன்னால் வந்து விட்டாய், அவர் பின்னாலேயே தேடிக்கொண்டு வந்து விட்டார்; இல்லையா?''

''இல்லை; இல்லை; எல்லாம் பொய்! எல்லாம் கட்டுக்கதை! உஷா வேண்டுமென்றே இதையெல்லாம் உங்களிடம் வந்து சொல்லியிருக்கிறாள், மேடம்!'' ஆம்பலழகியின் கோபம் அழுகையில் வந்து முடிந்தது.

பிரின்ஸ்பால் மிகவும் அமைதியான குரலில், ''உஷாவை வீணாக ஏன் இழுக்கிறாய்? நான் இரண்டு தடவைகளிலும் உன்னைத் தற்செயலாகவே பார்த்தேன். இது உனக்கு முதல் எச்சரிக்கை. இனி

நான்கு மருந்துகள் சேர்ந்துள்ள

# 'அனஸின்'

## தலைவலி, ஜலதோஷம், ஜுரம் மற்றும் தசைவலிகளுக்கு

## சிறந்தது

ஞாபகத்தில் வையுங்கள்! ஒரே மருந்து கலந்துள்ள எந்த வலி நிவாரண மருந்தும், டாக்டரின் குறிப்பிற்கு ஒப்பான, விஞ்ஞான முறையில் தயாரித்துள்ள நான்கு மருந்துகளின் கலவையான 'அனஸினைப்' போல் துரிதமாயும் . . . அபாயமின்றியும் நிச்சயமாயும் குணமளிக்க இயலாது. லட்சோப லட்சம் ஜனங்கள் 'அனஸின்' தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைவலிகளிலிருந்து, துரிதமாயும், பூரண நிவாரணமளிப்பதிலும் சிறந்தது என்பதை அறிவார்கள். எப்பொழுதும் வீட்டில் 'அனஸின்' வைத்திருங்கள்.






GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD. REGISTERED USER.

K. 68 (R) TAM.

---

# "சம்பு சாஸ்திரி புடவை"

என்றவுடன் கடந்த '57' ஆண்டுகளாக நாணயமும் நம்பிக்கையும் பெற்றதென்பது எல்லோருக்கும் தெரிந்தது!

தீபாவளி பண்டிகைக்காகத் தங்கள் தேவை பட்டுப் புடவைகள், பாவாடை, சோளிகள், நூல் புடவைகள், வேஷ்டிகள், எவையாயினும் தங்களுக்கு வழக்கம்போல் திருப்தி அளிக்கக் காத்திருக்கிறோம்.

o❁o

## A. சம்பூர்ண சாஸ்திரியார் & சன்ஸ்

வடக்கு மாட வீதி — மயிலாப்பூர் — மதராஸ் - 4

போன் நெ. 71719 - ஸ்தாபிதம்: 1902 - தந்தி: சம்பூர்ணம்

---

எங்கள் சரக்குகளைக் கீழ்க்கண்ட இடங்களிலும் ஆதாய விலைக்கே வாங்கலாம்

கல்கத்தா: South India Co-operative Stores Building, 6, Bompas Road, Calcutta - 29

டில்லி: 4/76, கிருஷ்ணா மார்க்கெட், W. E. A. கரோல்பாக், புது டில்லி - 5

ஜெம்ஷெட்பூர்: ஸ்ரீ D. V. V. சாஸ்திரி வீடு, 'M' ரோடு, ஜெம்ஷெட்பூர்

# B·I



## S. S. ரஜுலா

**சென்னை - நாகப்பட்டினம் - பிளுங்கு - சிங்கப்பூர்**

மேற்படி கப்பல் கீழ்க்கண்ட தேதிவாக்கில் புறப்படும்

| சென்னையிலிருந்து | நாகப்பட்டினத்திலிருந்து |
|---|---|
| **1959 அக்டோபர் 19** | **1959 அக்டோபர் 20** |

பிரயாணத்திற்குரிய தஸ்தாவேஜுகளைக் காண்பித்து வேண்டிய அளவு ஸீக் வசதியுள்ள டிக்கட்டுகளையும், குறிப்பிட்ட அளவு பர்த் வசதியற்ற டிக்கட்டுகளையும் சாப்பாட்டுடனோ அல்லது சாப்பாடின்றியோ எங்கள் கம்பெனியின் ஏஜண்டிடமிருந்து நேரடியாகப் பெற்றுக் கொள்ளலாம்.

பினங், போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்ல, சரக்குகள் ஏற்றுக்கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்

| | |
|---|---|
| பின்னி & கோ., (மதறாஸ்) லிமிடெட் | மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட் |
| 7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1 | முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம் |

ஏஜண்டுகள் : பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்

இப்படி எதுவும் நேர வேண்டாம். நேர்ந்தால் உன் பெற்றோர்களுக்குத் தெரிவிக்க வேண்டியிருக்கும். இதெல்லாம் பாவம் அவர்கள் வரையில் ஏன் போக வேண்டும்? அந்த இளைஞன் உன்னுடைய 'கஸின்' என்று நீ சொல்லப் போகிறாய்! அது உண்மையில்லை என்றால் அவர்களுக்கு எவ்வளவு வருத்தமாக இருக்கும்!" என்றார்.

"அவர் உஷாவைத்தான் 'மீட்' பண்ண வந்திருக்கிறார்!"

"அப்படியா?"

"ஆமாம்; இதை நான் 'ப்ரூவ்' செய்வேன்!"

"அப்படியானால் அவனைத் தேடிக் கொண்டு வந்தவனுடைய ஸ்கூட்டரில் நீ ஏன் ஏறிக் கொண்டாய்?"

ஆம்பலழகிக்கு மூச்சுத் திணறியது.

"சரி; இனி நீ வகுப்புக்குப் போகலாம். இன்னொரு முறை உன்னை இங்கே இதற்காக அழைக்கும்படி வைத்துக் கொள்ள வேண்டாம். அதை இப்போதே எச்சரித்து வைக்கிறேன்!"

ஆம்பலழகிக்குக் கோபம்தான்; ஆனால் அதை யாரிடம் காட்ட முடியும்? சரியான காரணமின்றி அவளுக்கு உஷாவின் மீதுதான் கோபம் கோபமாக வந்தது. அந்த உஷா மட்டும் வீட்டுக்குப் போகாமல் இருந்திருந்தால் அவளை வலுச் சண்டைக்கே இழுத்திருப்பாள். நல்ல காலம்; பங்களாவிலிருந்து வண்டி வந்து, உஷா அதில் ஏறிக் கொண்டு புறப்பட்டுப் போய் விட்டாள்.

## நான்காம் அத்தியாயம்

# காலடியோசை

வண்டியில் ஏறப் போகும்போதுதான் உஷா, டிரைவரைக் கவனித்தாள். குப்பன் இருக்க வேண்டிய இடத்தில் வேறு ஓர் ஆள் உட்கார்ந்திருந்தான். அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"குப்பன் எங்கே?"

"தெரியாது; தேன் கூட்டுக்குப் போன் பண்ணினாங்க, நான் அங்கிருந்து வந்திருக்கேன்."

"இன்னைக்கு மட்டுமா, இல்லே, எப்போதுமே இருக்கவா?"

"தெரியாதுங்களே!"

"தேன்கூட்டிலே எத்தனை நாட்களாக இருக்கிறாய் நீ?"

"நான் சுசீலா அம்மா வீட்டிலே இருந்தவன். அப்புறம் அம்மா அனுப்பி இங்கே வந்திட்டேன்!"

"சுசீலாவா? யார் அது சுசீலா?"

"தெரியாதுங்களா? அதான் நம்ப சின்ன எஜமானுக்கு..." என்று சொல்லிக்கொண்டே வந்தவன், ஏதோ நினைவு வந்தவனாக அவளைத் திரும்பிப் பார்த்தான்.

"சின்ன எஜமான் யார்? சிங்கப்பூர் மைனர் கண்ணபிரான்தானே? அவருக்கு..."

"ஊஹூம், ஒண்ணுமில்லே. அவருக்கு அந்த அம்மா ரொம்ப வேண்டியவங்கன்னு சொல்ல வந்தேன். வண்டிகூட இவருதான் வாங்கிக் கொடுத்திருக்காரு. சம்பளம், பெட்ரோல் எல்லாம் தேன் கூட்டிலேதான் வாங்கிக்கணும்......... தெரியாதுங்களா?"

கண்ணபிரானுக்கு நடத்திய விருந்துபசாரத்தின்போது உஷா நாட்டியத்துக்கான ஏற்பாடுகளில் முனைந்திருந்தாள். அதனால் அவளுக்குச் சுசீலா வந்திருந்தது தெரியாது. விமான நிலையத்தில் முன்பு ஒருநாள் வந்து காத்திருந்தவள் அவள் தான் என்பதும் தெரியாது. அவள் சுசீலாவைப் பார்த்ததேயில்லை. கண்ணபிரானுக்கு இவ்வளவு தூரம் வேண்டிய அந்தச் சுசீலா யார்? என்ன உறவு? என்ன வயது? எங்கே இருப்பவள்?

"அந்த அம்மாள் ரொம்ப வேண்டியவள் என்றுதானே சொன்னாய்? அதாவது என்ன உறவு என்று சொன்னாய்?"

"உறவுன்னு நான் சொல்லலீங்களே! வேண்டியவங்கன்னு சொன்னேன். தினம் இங்கிருக்கிறப்போ இவுரு அங்கே போயிடுவாரு. இல்லாட்டி அது இங்கே வந்திடும்.......கோடம்பாக்கம் என்ன, மகாபலிபுரம் என்ன, அடையாறு பீச் என்ன—எங்கே போனாலும் அவுங்க சேர்ந்துதானே போவாங்க!"

உஷாவுக்கு இதெல்லாம் புதிய செய்திகளாகத்தான் இருந்தன. அவன் வெகுளித்தனமாகப் பேசுகிறானா, விகண்டையாகப் பேசுகிறானா என்று அவளுக்குத் தெரியத்தான் இல்லை. இவன் எப்படிப்பட்டவனானாலும் குப்பனுக்கு இணையாக முடியுமா? அவளுக்கு வண்டியில் ஏறிக் கொள்ளவே பிடிக்கவில்லை. வண்டியில் போவது போலவேயில்லை. பங்களாவில் பொன்னியாவது இருக்கிறாளா, அவளும் இல்லையோ என்பதை எண்ணிய போது அவளுக்குக் கலக்கமாகவே இருந்தது. பொன்னியும் இல்லாமல் போனால் அவள் என்ன செய்வது? இதை அவளால் நினைத்துப் பார்க்கவே முடியா

# சிரிக்காதே!

## இப்படியும் நடக்குமா ?

**ஜட்ஜ் :** கூண்டில் இருக்கும் கைதி குற்றவாளியா ?

**ஜூரி :** அவன் மாத்திரம் என்ன? உலகத்தில் உள்ள நாம் எல்லோரும் குற்றவாளிகளே !

**ஜட்ஜ் :** யாரு ஐயா, அது வேதாந்தி ?

## வெற்றி !

பெரியவர்களைப் பார்க்கப் போனால் நீங்கள் ஒருவர்தான் முகஸ்துதி பிடிக்காதவர், முகஸ்துதிக்கு ஏமாறுவதில்லை என்று சொல்லுங்கள். அவ்வளவுதான்; அந்த முகஸ்துதியே போதும், உங்கள் காரியம் வெற்றியடைவதற்கு !

## உபசாரம் !

சிறு நாடகம், நேரம் காலை ஆறு மணி, கணவன் திரும்பிப் படுத்திருக்கிறான். மனைவி அன்பாகக் கட்டிலின் பக்கம் வந்து. ''என்ன ! உங்களுக்கு உருளைக் கிழங்குக் கறியும் வெங்காய சாம்பாரும் செய்யட்டுமா ?'' என்றாள்.

''பேஷாகச் செய் !''

''மத்தியானம் டிபனுக்கு உங்களுக்காகப் பாதாம் அல்வாவும் மைசூர் போண்டாவும் செய்யலாம்னு இருக்கேன் ! செய்யட்டுமா ?''

**கணவன் :** உம் வெளுத்துக் கட்டு.

**மனைவி :** வேறு ஒன்று சொன்னதும் ஞாபகத்துக்கு வருகிறது. உங்கள் துணிமணிக்குச் சோப் போடட்டுமா ?

''பேஷ் ! பேஷ் ! உன் இஷ்டப்படி எது வேணுமானாலும் செய்.''

''சரி தீபாவளிக்கு எனக்கு இருநூறு ரூபாய்க்கு ஒரு புடவை எடுத்துக் கொடுட்டுமா ?''

கணவன் அலறிக் கொண்டு, ''பாதாம் அல்வா வேண்டாம் ; வெங்காய சாம்பார் வேண்டாம் ! உருளையும் வேண்டாம், கிழங்கும் வேண்டாம் ; துணியும் சோப்பும் அப்படியே இருக்கட்டும்'' என்று கூறினான்.

## ஒன்றுதான் !

வாழ்க்கையில் மூன்று பருவங்கள் :

ஒன்று பால்யம், இரண்டு பால்யமாக இருக்கப் பிரயத்தனப்படுவது, மூன்று பால்யமாக இருப்பதாகவே நினைத்துக் கொண்டிருப்பது.

## கஷ்டமான காரியம் !

**வக்கீல் :** ஆமாம், உன் தொழிலைப் பற்றிக் கேட்ட போது ஏதோ ஒரு கடுமையான வேலையில் நீ இருப்பதாகச் சொன்னாயே அது என்ன ?

**குற்றவாளி :** உங்களுடைய கேள்விகளுக்குப் பதில் சொல்வதுதான் !

வில்லை. பொன்னி இல்லாத பங்களா நரகமாகவே இருக்கும் என்று அவனுக்குத் தோன்றியது. அவள் கையால் போடாத சாப்பாடு நஞ்சாகத்தான் இருக்கும் என்று அவன் அஞ்சினான். அம்மாவும் அப்பாவும் சேர்ந்து அவர்களை வேலையை விட்டு விலக்கியிருந்தால் அவள் அதை எப்படிப் பொறுப்பாள் ? எத்தனை நாட்களுக்குப் பொறுப்பாள் ? அவர்கள் இல்லாத வீட்டில் ஒரு கணம்கூட அவளால் இருக்க முடியாது. அவள் இருக்கப் போவதில்லை. பார்த்து விடலாமே அதையும்தான் !

பங்களா வாசலில் போய் வண்டி நிற்கும்போது அவனுக்கு ஆயாசத்தினால் மூச்சே நின்று விடும் போலிருந்தது. அவன் விடுவிடென்று இறங்கித் தன் அறைக்குச் சென்றான். புத்தகங்களைத் தூக்கி மேஜையின்மீது விட்டெறிந்தான். முகத்தைக் கழுவிக் கொண்டான். அப்பாவும் அம்மாவும் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்திருந்து தன்னுடைய ஒவ்வொரு செய்கையையும் கவனிப்பது போல் பாவித்துக் கொண்டான். அதுவரையில் அந்த வீட்டில் பொன்னி இருப்பதற்கான அறிகுறியே தென்படவில்லை. அவள் இல்லை என்றால் அந்த அதிர்ச்சியை அவனால் தாள முடியாது போலிருந்தது. இரண்டில் ஒன்றை உடனேயே தெரிந்து கொண்டுவிட அவனுக்கு மனம் துணியவில்லை. என்னதான் நடக்கிறது என்று பார்க்கலாமே என்பதுபோல் அவன் சோபாவில் இடிந்துபோன நிலையில் சாய்ந்து கொண்டான்.

நேரம் போய்க் கொண்டிருந்தது. மனம் எண்ணி எண்ணிச் சளைத்துப் போய் விட்டது. காதுகள் இரண்டும் காலடிச் சத்தத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தன.

காலடிச் சத்தம் கேட்டதுபோலிருந்தது. யார் அது, பொன்னியின் காலடியோசையா அது ?

''உஷா !''

அவனால் மூடிய கண்களைத் திறக்க முடியவில்லை ; தன் காதுகளையே நம்ப முடியவில்லை. யார் அது ? பாபுவின் குரலா அது ?

இரண்டாம் முறையாக அழைத்த போதுதான் அவன் கண்களைத் திறந்துபார்த்தான். பாபுதான் வழக்கம்போல் வாசல் நிலையைப் பிடித்துக்கொண்டு நின்றான். (தொடரும்)



# உங்கள் பல் டாக்டர் 'கோலினூஸ்' முறை பற்களின் ஆரோக்கியத்திற்கு உகந்தது எனக் கூறுவார்




## புதிய சேர்க்கை 'கோலினூஸ் சூப்பர் ஒயிட்' பற்பசை அதன் 3 சுத்திகரணிகள் மூலம் பற்களை சுத்தம் செய்வதுடன் அவற்றைப் பாதுகாக்கிறது

இது புதியது! இது சிறந்தது! ஏனெனில், 'கோலினூஸ் சூப்பர் ஒயிட்' பற்பசை அளிக்கும் நுரையில் சாதாரணமாகவுள்ள 2 சுத்திகரணிகளுக்குப் பதில் 3 சுத்திகரணிகள் உள்ளன. இந்த அதிகப்படியான சுத்திகரணியுள்ள பற்பசையினால் பல் துலக்கும்போது பற்களிடையிலிருக்கும் சொத்தைப் பற்கள் ஏற்படுவதற்குக் காரணமான உணவுத் துகள்கள் அகற்றப்படுவதுடன் உங்கள் பற்களை இயற்கையான வெண்மையுடனும் பிரகாசத்துடனும் இருக்கச் செய்கிறது. வேறெந்தப் பற்பசையும் உங்களுக்கு இதைவிட அதிக திருப்தியை அளிக்க முடியாது.

**'கோலினூஸ் முறை' உங்களுக்கு அதிக ஆரோக்கியமான பற்களை அளிக்கும்**

**உங்கள் பல் டாக்டரைக் கேளுங்கள்**

1. ஈரமான பிரஷ்ஷின்மீது அரை அங்குல அளவுமட்டும் 'கோலினூஸ் சூப்பர் ஒயிட்' பற்பசையை உபயோகிக்கவும்.
2. காலையிலும் இரவிலும் இரண்டு நிமிஷங்களுக்கு உங்கள் பற்களின் எல்லா பாகங்களையும் நன்கு கவனித்து துலக்கவும்.
3. இரவில் பல் துலக்குவது மிகவும் அவசியம், ஏனெனில், அது சொத்தைப் பற்களுக்கு முக்கிய காரணமான உணவுத் துணுக்குகள் பற்களிடையில் தங்கவிடாமல் வெளியேற்றுகிறது.
4. உங்கள் பல்டாக்டரிடம் வருடத்திற்கு இருமுறையாகிலும் சென்று பற்களைப் பரிசோதித்துக்கொள்ளுங்கள்.

## கோலினூஸ் ஆரோக்கியமான பற்களை அளிக்கும்

Registered User: GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD.

# நேர்மை

**பிலஹரி**



**கா**லை எட்டு மணி குமாருக்கு, 'ஷெட்'டிலிருந்து வண்டியைக் கிளப்பியவன் நாச்சிமுத்து. பகல் முழுதும் ஓய்ச்சல், ஒழிவின்றி வேலை. ஓட்டம், ஓட்டம்—ஒரே ஓட்ட மயம் தான். இரண்டு நாட்களாக வானம் மப்பும் மந்தாரமுமாக இருக்கின்ற காரணமோ என்னவோ, இரண்டு பர்லாங்கு தூரம் கூடக் காலி வண்டியாகச் செல்லப் பிரமேயமே ஏற்படவில்லை. ஒன்று மாற்றி மற்றொன்று, சவாரி கிடைத்த வண்ணம் இருந்தன. இந்த ஒரு நாளில் சென்னையிலுள்ள அநேக ரஸ்தாக்களைப் பதம் பார்த்து விட்டது வண்டி.

ஓட்டத்தின் பலன், பையில் கனத்துக் கொண்டிருந்தது நோட்டுக்களாக. இன்னும் சற்று நேரத்தில் முதலாளியிடம் கணக்குப் பார்த்து வருமானத்தை ஒப்படைக்கும் போது, அவர் உச்சி குளிரப் போவது உறுதிதான். நாச்சிமுத்துவுக்கே ஒரு வேளை ஒன்றிரண்டு இனாம் கிடைத்தாலும் கிடைக்கலாம்.

**மா**லை நேரம்.

மணி அதிகமாகா விட்டாலும், மழையின் காரணமாக இருள் கவ்வத் தொடங்கி விட்டது. மவுண்ட் ரோட்டுக்கே தனியொரு கவர்ச்சியைக் கொடுக்கும் காந்த விளக்குகள் பளிச்சிடத் தொடங்கின.

மாம்பலத்தில் ஒருவரை இறக்கிவிட்டு, 'ஷெட்'டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தான் நாச்சிமுத்து. அவன் உடம்பின் ஒவ்வொரு பூட்டும் வலித்துக் கொண்டிருந்தது. காலை நீட்டி நடந்தால் தான் வலியா? மணிக்கணக்காக ஆடாமல் அசையாமல் உட்கார்ந்து கொண்டிருப்பது போன்றதொரு நரக வேதனை வேறு எதுவும் கிடையாது.

'வீட்டுக்குப் போனவுடன், முதல் காரியமாக ராசாத்தியிடம் சொல்லி ஒரு தவலை வெந்நீர் போட்டு, ஊற்றிக் கொள்ள வேண்டும். அப்போது தான் உடம்பு, உடம்பாகும்!'

அலுப்பும் ஆயாசமும் 'உடலைத் துளைத்தெடுக்க, உள்ளத்தில் யோசனை புரையோட, மெதுவாக வண்டியை ஓட்டிக் கொண்டிருந்தான் நாச்சிமுத்து. நீண்ட சாலையில் வழுக்கிக் கொண்டு ஓடத் தொடங்கியது வண்டி.

"டேபி!... டாக்ஸி!..."

செவிகளில் அழைப்புப் புகுந்தது தான் தாமதம், கால்கள் தாமாகவே 'பிரேக்' போட்டன. வந்த கிராக்கியை ஏன் விட வேண்டும்?

நடைபாதையில், பஸ்ஸுக்காகக் காத்துக் கொண்டிருந்த அந்த மனிதர், கையில் பெட்டி படுக்கையுடன், வண்டியில் ஏறி உட்கார்ந்து கொண்டார்.

"மீட்டரைப் போடுப்பா!..."

"போட்டாச்சு, சார்!... எங்கே போவணும்?..." என்று நாச்சிமுத்து வினவினான்.

"எக்மோர் ஸ்டேஷனுக்கு!..."

மறு விநாடி, வண்டி ஒரு குலுங்குக் குலுங்கி நகரத் தொடங்கியது.

அரைப் பர்லாங்கு தூரம் சென்றிருக்கும் வண்டி.

"இன்னும் கொஞ்சம் வேகமா விடேம்ப்பா!..." என்றார் வண்டியின் உள்ளேயிருந்தவர்.

நாச்சிமுத்து பதில் கூறவில்லை. ஆனால், காரின் வேகம் மாத்திரம் இலேசாக அதிகரித்தது.

போக வேண்டிய தூரத்தில், கால் பங்கு கடந்தாகி விட்டது.

"என்னப்பா இது!... புதுசா வண்டி விடறியா?... வேகமாத்தான் ஓட்டேன்!..." என்றார் சவாரி செய்பவர். அவர் குரலில் அசாதாரணமான பதற்றமும் அவசரமும் போட்டியிட்டன.

"என்னங்க இது! வழக்கமாப் போகிற வேகத்திலே போறேன், சார்!..." என்றபடியே வேகத்தை இன்னும் கொஞ்சம் அதிகப்படுத்தினான் நாச்சிமுத்து.

பாதி தூரம் கடந்தாகி விட்டது. உள்ளேயிருப்பவர் பொறுமை இழந்துவிட்ட நிலைக்கு வந்து விட்டார்.

"சேச்சே!... போயும் போயும் இந்தக் கட்டை வண்டியிலே ஏறினேனே!...

என்னப்பா இது வேகம்?...'' என்று அவர் அலுத்துக் கொண்டதும், வேகத்தைக் கொஞ்சம் குறைத்துக் கொண்டான் நாச்சிமுத்து.

''என்ன சார்! இப்படிப் பேசறீங்களே!... இதோ, நீங்களே வேகத்தைப் பாருங்க!... இதுக்கு மேலே ஓட்டினால் அபராதம் தட்டிப்புடுவாங்களே!... அதுவும் 'டிராபிக் டைம்' வேறு!... மெயின் ரோட்டிலே இதுக்கு மேலே எப்படிங்க போறது?...''

''எனக்கும் தெரியும்ப்பா அதெல்லாம். இன்னும் ரயில் கிளம்பச் சரியாப் பத்து நிமிஷம் தான் இருக்கு. டிக்கெட் வேறே வாங்கணும்!...''

''அவ்வளவு அவசரப் படறவரு இன்னும் சுருக்கத் தானுங்க கிளம்பியிருக்கணும்!...'' என்றான் நாச்சிமுத்து.

''என்னவோ திடீர்னு தந்தி வந்தது. ஊரிலே சம்சாரத்துக்கு உடம்பு சரியில்லேன்னு!...உடனே கிளம்பிட்டேன்!... அதுதான், மனசு கேட்க மாட்டேங்குது!...''

அவர் பேச்சிலிருந்தே, அவர் உள்ளத்தில் வீசிக் கொண்டிருக்கும் உணர்ச்சிப் புயலின் வேகத்தை அறிந்து கொண்டான் நாச்சிமுத்து.

சுபாவத்திலேயே இளகிய மனசு நாச்சிமுத்துவுக்கு. குழந்தைகளிடம் கூட அதிர்ந்து பேச மாட்டான். உண்மைக்கும் நியாயத்துக்கும் பயந்து நடக்கும் பழைய பண்பைச் சேர்ந்தவன். இப்போது, தான் மனம் வைத்தால் உரிய காலத்தில் உள்ளே யிருப்பவருக்கு ரயிலில் இடம் கிடைக்கும்படி செய்து விடலாம் என்ற எண்ணம் ஏற்பட்டது அவனுக்கு. பாவம், அவர் மனம் படும் பாடு அவருக்குத்தானே தெரியும்?

மறு விநாடி, வண்டி ஓடியது என்று கூற முடியாது. பறந்தது என்றால் தான் பொருந்தும். முன்னே சென்று கொண்டிருந்த வாகனங்களை அலட்சியமாக 'ஓவர்டேக்' செய்தான் நாச்சிமுத்து. இவன் வண்டி வரும் வேகத்தைப் பார்த்ததும், எதிரேயுள்ள வண்டிகள் தாமாகவே கொஞ்சம் ஒதுங்கிக் கொண்டன. தன் ஆயுளில் இம்மாதிரி வண்டி ஓட்டியிருக்கிறானா என்று அவனுக்கே சந்தேகம் தான். நகர எல்லைக்கு அப்பால் கூட ஒரு வண்டி செல்ல அனுமதிக்கப்படாத அசாதாரண வேகத்தில் வண்டி துள்ளிக் குதித்து ஓடியது.

நல்ல வேளை; அவன் செய்த புண்ணியம், வழியில் எந்த 'வெள்ளை உடுப்பும்' தென்படவில்லை.

ஸ்டேஷன் வந்தது. பரபரப்புடன் வெளியே இறங்கினார் சவாரி செய்தவர்.

''ரொம்ப நல்லவன் அப்பா நீ!... எப்படியோ இவ்வளவு சீக்கிரம் என்னைக் கொண்டு வந்து சேர்த்துட்டியே!... எவ்வளவு அப்பா ஆச்சு?...'' என்றார்.

ஆனால், அவன் பதிலுக்குக் காத்திருக்கும் பொறுமைகூட அவருக்கு இல்லை. பையில் கைவிட்டு ஏதோ சில்லறைகளை அவன் கையில் கொட்டினார்.

''அடேடே!... இந்தாங்க, சார்!... கணக்குக்கு மேலே எட்டணா கொடுத்திருக்கீங்களே!...'' என்றபடியே மிகுதிப் பணத்தை நீட்டினான் நாச்சிமுத்து.

''பரவாயில்லே! நீயே வைச்சுக்க, அப்பா!...'' என்றபடியே, ஸ்டேஷன் படி ஏறத் தொடங்கினார் பிரயாணி.

''எட்டணா அதிகங்க!... நாலணா எடுத்துக்கறேன்!... இந்தாங்க, பாக்கி நாலணா!....'' என்றபடியே அவர் கைகளில் ஒரு கால் ரூபாயைத் திணித்து விட்டான் நாச்சிமுத்து.

வண்டியை 'ஷெட்'டில் விட்டு விட்டு, நாச்சிமுத்து வீடு திரும்பும்போது மணி எட்டுக்கு மேலாகி விட்டது.

''ராசாத்தி!...''

இரவு சாப்பாட்டுக்காகச் சோறாக்கிக் கொண்டிருந்த ராசாத்தி திரும்பினாள்.





சிறுவர் சிறுமிகளுக்கு ஓர் அழைப்பு!

# ஸன்லைட்

## வர்ணந் தீட்டும் போட்டி

# ரூ. 25,000

இம் மொத்தத் தொகைக்கு நூற்றுக் கணக்கான
கோலாகலப் பரிசுகள்!

**2 முதல் பரிசுகள்:**
ரொக்கமாக ரூ. 4,000
அல்லது உட்பட்ட அத்தொகை
செலவில் இந்தியாவில்
உல்லாசப் பிரயாணம்!

**4 இரண்டாம் பரிசுகள்:**
ஹெச். எம். வி.
ரேடியோகிராம்!

**6 மூன்றும் பரிசுகள்:**
மர்பி
ஆல் வேவ் ரேடியோவும்
அத்துடன் ஹிந்த்
அம்பாஸடர் சைக்கிளும்!

**2,000 பரிவுப்பரிசுகள்:**
பெயின்டிங் செட்
அல்லது ஒரு
பொம்மை!

3/9A-50 TM

ஸன்லைட் மூலம் நீங்கள் அடையும் நன்மையே நன்மை! இப்போது ஸன்லைட் மேலுறை ஒவ்வொன்றும் உங்கள் குழந்தைகள் ஸன்லைட் வர்ணந் தீட்டும் போட்டியில் கலந்துகொள்ளப் பயன்படுகிறது!

இப்போட்டியில் கலந்துகொள்ளத்தக்கவர்களை வயதுவாரியான இரு வகுப்புக்களாகப் பிரிவு செய்யப்பட்டுள்ளது: (1) 10 வயதுக்கு உட்பட்டவர்கள் (2) 10 முதல் 15 வயது வரை உள்ளவர்கள். இரு வகுப்பினரின் படங்களையும் தனித்தனியே பரிசீலித்துத் தீர்ப்பளிக்கப்படும். ஒரு வகுப்பைப்போலவே மற்ற வகுப்பிற்கும் அதேமாதிரியான முதல், இரண்டாவது, மூன்றாவது மற்றும் பரிவுப் பரிசுகள் வழங்கப்படும்.

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம், ஸன்லைட் விற்கும் உங்கள் கடைக்காரரிடமிருந்து இலவசமாகப் பிரவேச பாரங்களைப் பெற்றுக்கொள்ளவேண்டியது. உங்கள் குழந்தைகள் வர்ணந் தீட்டுவதற்கென, ஒவ்வொரு பாரத்துடனும் ஓர் அழகிய படம் உள்ளது. அவர்கள் விரும்பும் எந்த வர்ணத்தையும் உபயோகித்து வர்ணந்தீட்டலாம்.

**சிறுவர், சிறுமிகளே! கீழ்க்காணும் விதிகளைக் கவனமாகப் படித்தறியுங்கள்:**

(1) உங்கள் பெயர், பிறந்த தேதி, (கொட்டை எழுத்தில்) முழு விலாசம் முதலியவற்றைக் கூப்பனில் தெளிவாக எழுதுங்கள். (2) எத்தனை படங்கள் வேண்டுமானாலும் நீங்கள் அனுப்பலாம். ஆனால் ஒவ்வொரு படத்துடனும் ஸன்லைட் மேலுறை ஒவ்வொன்றை இணைத்து அனுப்பவேண்டும். (3) தொலைந்துபோகும் படங்களுக்கும், தாமதித்தோ, சேதமடைந்தோ வந்துசேரும் படங்களுக்கும் கம்பெனியார் பொறுப்பேற்கமாட்டார்கள். (4) "ஸன்லைட், தபால் பை, 10080, பம்பாய்—1" என்று விலாசமிடப்பட்டு, 1959, நவம்பர் 16-ம் தேதியன்று பகல் 12 மணிக்கு முன்னதாகவே வந்துசேரும்படி எல்லாப் படங்களும் அனுப்பப்படவேண்டும். (5) பிரபல ஓவியர்களும், கலை விமரிசகர்களும் அடங்கிய நீதிபதிக் குழு ஒன்றினால் படங்கள் பரிசீலிக்கப்பட்டுத் தீர்ப்பளிக்கப்படும். அவர்களது தீர்ப்பே முடிவானது, சட்டப்படி கட்டுப்படுத்துவது. இப்போட்டி சம்பந்தமாக யாதொரு கடிதப் போக்குவரத்தும் மேற்கொள்ளப்படமாட்டாது. (6) வயதுவாரியாகவுள்ள இரு வகுப்புக்களில் ஒவ்வொன்றிலும், முதல், இரண்டாவது, மூன்றாவது பரிசுகள் பெறுவோரின் பெயர்கள், ஸன்லைட் வர்ணந் தீட்டும் போட்டி பிரசுரமாகும் எல்லாத் தினப் பத்திரிகைகளிலும் ஏறத்தாழ 1959 டிசம்பர் 31-ம் தேதியளவில் பிரசுரிக்கப்படும். மற்றைய பரிசுகள் பெறுவோருக்குத் தபால் மூலம் தகவல் அறிவிக்கப்படும். (7) இந்துஸ்தான் லீவர் லிமிடெட் கம்பெனியிலும், அதன் விளம்பர ஏஜென்ஸியிலும் பணியாற்றுவோரின் குழந்தைகள் நீங்கலாக, இந்தியாவை இருப்பிடமாகக்கொண்ட சிறுவர், சிறுமிகள் எவரும் இப் போட்டியில் கலந்துகொள்ளலாம்.

இன்றே கலந்து கொள்ளுங்கள்!

முடிவு தேதி:

16-11-1959




**சிறிதளவு ஸன்லைட் ஏராளமான துணிகளை வெளுக்கிறது!**

S/9 B-50 TM

இந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு.

களைப்பே உருவாக உள்ளே நுழைந்து கொண்டிருந்தான் நாச்சிமுத்து.

இவ்வளவு நேரம் தாயின் காலடியைச் சுற்றி வளைய வந்து கொண்டிருந்த குழந்தை தனகோடி, தந்தையின் குரல் காதில் விழுந்தது தான் தாமதம், பரபரப்புடன் தவழ்ந்து வந்து அவன் காலைக் கட்டிக் கொண்டான். பிஞ்சின் ஸ்பரிசம், பெற்றவன் உடம்பிலே ஒரு கிளுகிளுப்பை ஏற்படுத்தியது. பரிவுடன், அலாக்காகக் குழந்தையைத் தூக்கினான் நாச்சிமுத்து. திருமணமாகி ஏழு வருடங்களுக்குப் பிறகு பிறந்த அருமைக் குழந்தை அல்லவா?

"பயலுக்கு இரண்டாவது பொறந்த நாளு எப்போ வருது, ராசாத்தி!..."

"இன்னும் சரியாக ஒரு வாரம்தான் இருக்கு!..."

"அதுக்குள்ளாற பையன் கைக்கு ஒரு காப்பு செய்து போட்டுடணும்!... முக்கால் சவரனிலே செஞ்சால்கூட, அறுபது ரூபாய் வரை இழுத்திடுமே!... அப்படி இப்படீன்னு சேர்த்து நாற்பத்தஞ்சு ரூபாய்வரை முதலாளிகிட்டே கொடுத்து வைச்சிருக்கோம்!... இன்னிக்குக் கூட, ரெண்டு ரூபாய் கொடுத்தாரு, மவராசன்... இன்னி மாதிரி வரும்படி வந்தால், ஏன் கொடுக்க மாட்டாரு?... உம்... இன்னும் ஒரு வாரம் இருக்கே!... அதுக்குள்ளாற, ஏதாவது வழி பிறக்காமலா போயிடும்!... இல்லாட்டி, பாக்கிப் பணத்துக்கு அவருகிட்டேயே சம்பளத்திலே அட்வான்ஸ் வாங்கிக்கிட்டா போவுது!..."

சற்றைக்கெல்லாம் பாயை விரித்துக் கொண்டு, படுத்துக் கொண்டான் நாச்சிமுத்து.

அன்று இரவு படுத்தவன் தான். மூன்று நாட்கள் கண் திறக்கவேயில்லை. கடும் சுரம் வாட்டி வதைத்து விட்டது.

நான்காம் நாள்தான் உடம்பில் கொஞ்சம் தென்பு பிறந்தது. வேலைக்குக் கிளம்பி விட்டான்.

"இன்னும் ரெண்டு நாட்கள் உடம்பைப் பார்த்துக்கிட்டுப் போங்களேன்!" என்றாள் ராசாத்தி.

"இப்போ உடம்புக்கு என்ன?... சரியாயிடுத்து!... ரெண்டு நாளிலே குழந்தைக்குப் பொறந்த நாளு வருதே!.. துண்டு விழுற பணம் கேட்டுப் பார்க்க வேண்டாமா?" என்று கூறியபடியே வெளியேறினான் நாச்சிமுத்து.

"வாப்பா, நாச்சிமுத்து! மூணு நாட்களாக உடம்பு சரியில்லையாமே! இப்போ பரவாயில்லையா? நானும் வண்டியைக் கம்பெனிக்கு அனுப்பிச்சுட்டேன்! சின்ன ரிப்பேர் செய்ய வேண்டியிருந்தது...." என்றபடியே படியேறி வந்தவனை வரவேற்றார் முதலாளி.

பிறகு அப்போதுதான் நினைவு வந்தவர் போல், "ஏம்ப்பா! உங்கிட்டே சொல்லணும்னு நினைச்சேன். தப்புத் தண்டா விவகாரத்துக்கு நீ போகிறவன் இல்லையே! எப்பவுமே ஒழுங்காக வண்டியை ஓட்டறவன், ஏம்ப்பா, அப்படிப் பண்ணினே? நேத்து ஒரு சம்மன் வந்திருக்கிறதே!" என்றார்.

"சம்மனா?"-தூக்கிவாரிப் போட்டது நாச்சிமுத்துவுக்கு.

"வண்டியைக் கண்ணை மூடிக்கிட்டு ஓட்டினியாமே?"

நடந்த விஷயத்தை நாச்சிமுத்து மறைக்கவில்லை; மறைக்கவும் தெரியாது அவனுக்கு.

மறுநாள் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் முன்பு ஆஜரானான் நாச்சிமுத்து.

உள்ளதை உள்ளபடியே கூறினான். இனிமேல் வரம்புக்குட்பட்டே வண்டி விடுவதாக அவன் வாக்குறுதி கூறினான்.

நகர எல்லைக்குள் முக்கியமான சாலையில், போக்குவரத்து நேரத்தில் அபாயகரமான நிலையில் வண்டியைச் செலுத்தியதற்காக இருபது ரூபாய் அபராதம் தீட்டி விட்டார்கள்.

சோகமே உருவாக வெளியே வந்தான் நாச்சிமுத்து.

முதலாளி நல்லவர்தான். சமயசந்தர்ப்பத்துக்கு அஞ்சு பத்து கடன் தருவார். வரும்படி அதிகமாகக் கிடைத்தால் ஒன்றிரண்டு இனாம் தருவார். ஆனால் அவன் செய்த குற்றத்துக்காகத் தம்முடைய கையிலிருந்து அவர் இருபது ரூபாய் கட்டுவாரா?

அவர் வசம் அவன் விட்டுவைத்திருந்த சேமிப்பில் இருபது ரூபாய் கழிந்து விட்டது. அவ்வளவுதான் அவன்-அல்ல, அல்ல; அவன் குழந்தை தனகோடி — கொடுத்து வைத்தது.

மறு நாள் மாலை.

வானம் மிகுபிகுத்துக்கொண்டிருந்தது. அலைபாயும் உள்ளத்துடன் கடற்கரைச் சாலையில் மெதுவாக வண்டி விட்டுக் கொண்டிருந்தான் நாச்சிமுத்து.

"டாக்ஸி!"

சடேரென்று வண்டி நின்றது. குரல் வந்த பின்பக்கத்தைத் திரும்பிப் பார்த்தான். அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

மோட்டார் சைக்கிள் ஒன்றில் வேகமாக வந்து கொண்டிருந்தார் போலீஸ் அதிகாரியொருவர்.

பரபரப்புடன் மீட்டரைப் பார்த்தான். சரியான நிலையில்தான் அது இருந்தது. வேகமும் மிகவும் குறைவு

தான். அப்படியிருக்கும்பொழுது அவர் ஏன் அவனை அழைக்க வேண்டும்?

மோட்டார் அருகே வந்து நின்றார் போலீஸ் அதிகாரி.

"உன் பேரு நாச்சிமுத்துதானே?"

"ஆமாம், சார்!"

"நீதானே போன வாரம் மவுண்ட் ரோட்டிலே வேகமா வண்டி விட்டதுக்கு நேற்று இருபது ரூபாய் கட்டினது?"

மௌனமாகத் தலையசைத்தான் நாச்சிமுத்து. அவர் ஏன் இவ்வளவையும் விசாரிக்க வேண்டும் என்று அவனுக்குப் புரியவில்லை.

அதிகாரியின் முகத்தில் ஓர் அபூர்வ நிம்மதி பரவியது. சட்டைப் பைக்குள் கையை விட்டு இரண்டு பத்து ரூபாய் களை எடுத்து. அவன் மடியில் வைத்தார்.

"இதை வைச்சுக்கப்பா! ஒவ்வொரு மனுஷனும் சட்டத்துக்கு மதிப்புக் கொடுத்துக் கௌரவிக்க வேண்டியது நியாயம்தான். அதிலும் எங்களைப் போல் உள்ளவங்க சட்டத்தைக் காக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். இருந்தாலும் ஒவ்வொரு சமயம் சாதாரண ஆசாமிகளுக்குள்ள ஆசாபாசங்களும், சூழ்நிலையும் எங்களுக்கும் ஏற்படாமலா போகுது? அன்றைக்கு வேகமாக வண்டி விட்டது உன் குற்றமா? உன்னை அப்படி நிர்ப்பந்தம் செய்த அந்த ஆசாமியோட தப்புத் தானே அது?"

விக்கித்துப் போய் உட்கார்ந்திருந்தான் நாச்சிமுத்து. நடப்பதெல்லாம் ஒரு கனவின் நிழலாகத்தான் தோன்றியதே யன்றி, உண்மையாகப்படவில்லை அவனுக்கு.

"ஏம்ப்பா, முழிக்கறே? அன்னிக்கு உன் வண்டியிலே ஏறினபோது 'மப்டி'யிலே இருந்தேன். இப்போ யூனிபாரத்திலே இருக்கேன்! அதுதான் உனக்கு வித்தியாசம் தெரியல்லே! இன்னிக்குத் தான் டியூட்டியிலே சேர்ந்தேன் ஆனால் உன் விஷயம் மாத்திரம் ஒரு வாரமா மனசிலே உறுத்திண்டே இருந்தது. இப்போத்தான் ரோட்டிலே ஓடற வண்டியின் வேகத்தை இருந்த இடத்திலிருந்தே கண்டு பிடிச்சுடறாங்களே! எவன் கண்ணிலேயாவது வண்டி பட்டிருக்காமலா இருக்கும்னு எனக்கே சந்தேகம்தான்! கடைசியிலே நான் நினைச்சது நடந்து போயிடுத்து! நல்லவன் நீ! பணத்தை எடுத்துக்க! நான் வரேன்!"

நாச்சிமுத்துவின் பதிலுக்குக் கூடக் காத்திராமல் படபடவென்று ஒலியை எழுப்பியபடியே கிளம்பி விட்டது மோட்டார் சைக்கிள். அவன் மடியிலே அவர் வைத்துச் சென்ற ரூபாய் நோட்டுக்கள் அவன் இதயத்தைப்போல் படபடத்தன.

## ஆராய்ச்சியின் கதி!












# படித்துப் பாருங்கள்

## உங்கள் கம்பன்

கம்பன் கவி அமுதத்தை எந்த வகையில் எத்தனை பாத்திரங்களில் இட்டு அளித்தாலும் சுவைத்துக் களிக்கக் காத்திருக்கிறார்கள் தமிழ் மக்கள்.

மயிலைத் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் மலர்ந்திருக்கும் இந்த முதல் கம்பன் மலரில் பல தமிழ் அறிஞர்களின் கைவண்ணம் இலங்கக் காண்கிறோம். ஓர் ஆங்கிலக் கட்டுரை உள்பட இருபது கம்பராமாயணக் கட்டுரைகள் இவ்விலக்கிய மலரில் இடம் பெற்றுள்ளன.

கம்பனின் நகைச் சுவை, கம்பனும் அறமும், கம்ப தத்துவம், கம்பரும் ஹோமரும் போன்ற கட்டுரைகள் படிக்கப் படிக்க இனிக்கின்றன. பி.ஸ்ரீ. அவர்கள் முயன்று தொகுத்துள்ள இந்தக் கம்பன் கவியமுதத் தொகுதி தமிழ்ப் பெருமக்களுக்குப் பல்சுவைப் பெரு விருந்து நல்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

ஆசிரியர்கள்: பலர், தொகுப்பாசிரியர்: பிஸ்ரீ; பிஸ்ரீ நூலகம், சென்னை-28, விலை ரூ. 3.

## தீண்டாமை வேண்டாம்

தீண்டாமை கூடாதென்பதை அறிவுறுத்தி ஏழு கவிஞர்கள் பாடிய கவிதைகளைச் சென்னை அரசாங்கச் செய்தித் துறையினர் இந் நூலாகத் தொகுத்து வெளியிட்டுள்ளனர். எல்லாக் கவிதைகளும் தீண்டாமை கூடாதென்பதை நன்கு வற்புறுத்திப் பாடியுள்ளன.

வெளியீடு: சென்னை அரசாங்கச் செய்தித் துறை, விலை 10 காசுகள்.

## முல்லை வாசல்

காதல் கதை போல் ஆரம்பமாகித் துப்பறியும் கதை போல் நடை போட்டு ஓர் எழுத்தாளனின் காதல் துடிப்புகளை வெளியிட்டுச் சினிமாவையும் ஒரு கை பார்த்துவிட்டு முடிந்து போகிறது இந்த நாவல். விறுவிறுப்பாக எழுதியிருந்தாலும் நம்ப முடியாத சம்பவங்கள் இவ்வளவு இருத்தலாகாது. எனினும் ஆசிரியரின் முயற்சி சிந்தித்தற்குரியது.

ஆசிரியர்: பி.ஏ. தாஸ்; அருவி பதிப்பகம், திருவல்லிக்கேணி, சென்னை-5, விலை ரூ.1.50.

## இன்ப மணம்

இரண்டு நெடுங் கதைகள் அடங்கிய புத்தகம் இது. குறுநாவல்கள் என்று வேண்டுமானாலும் சொல்லலாம். கிராமத்தை நிலைக்களனாகக் கொண்ட முதல் நாவலில் கிராமப் பண்புக்கேற்ற பாத்திரங்களும் நடையில்லாத கதைப்போக்கும் அமைந்துள்ளன. வேதையன் செட்டியார் போல் பேராசை பிடித்த மனிதர்களும், சுவாமிநாத பிள்ளை போன்றவர்களும்—கிராமத்தில் இருக்கத்தான் இருப்பார்கள். இரண்டாவது கதையாகிய 'நிராசை' அழகும், நளினமும் நிறைந்து மெல்லிய உணர்ச்சிகளைப் படர விடுகிறது. ரவியின் ஏக்கம்தான் இந்தக் கதையின் அடிப்படை. அதை இறுதிவரையில் சாமர்த்தியமாகச் சித்திரித்து வெற்றி பெற்றிருக்கிறார் ஆசிரியர். படித்துச் சுவைக்க ஏற்ற நல்ல குறுநாவல்கள்.

ஆசிரியர்: ஆர்வி; வானதி பதிப்பகம்; தி.நகர். சென்னை-17. விலை: ரூ. 2-00

## கிரகராணி

ஏற்கெனவே வாரப் பத்திரிகை ஒன்றில் தொடர்கதையாக வெளிவந்த இந்த நாவல் இப்போது புத்தக உருப் பெற்றுள்ளது. 'குடும்ப நாவல்' என்று இதைக் கூறலாம். நுணுக்கமான மன உணர்வுகளைக் கதாபாத்திரங்களோடு சார்த்திக் கூறவிடினும் நாவலைச் சுவையாகப் பின்னியிருக்கிறார் இந்நூலின் ஆசிரியை. உஷா, ரமா இருவரும் கதைக்கு வலுவான பெண் பாத்திரங்களாவர். பொழுது போக்குக்குப் படித்து இன்பமடையக் கூடிய நல்ல நாவல்.

ஆசிரியர்: ஜி. கௌசல்யா; வெளியீடு: அல்லயன்ஸ், மயிலாப்பூர் சென்னை-14. விலை: ரூ. 4-00

## மணமகள் வருகிறாள்

(சிறுகதைத் தொகுப்பு)

அறுபது ஆண்டுகளுக்கு முன், அமெரிக்காவின் சிறந்த கதாசிரியராகப் போற்றப்பட்டவர் ஸ்டீபன் க்ரேன் என்னும் எழுத்தாளர்.

இந்த ஆசிரியர் தம் வாழ் நாளில் மொத்தம் பன்னிரண்டு சிறுகதைகளும் இரண்டே சிறு நாவலும்தான் எழுதினார். இவரது கதைகளின் மதிப்பை ஆரம்பக் காலத்தில் அமெரிக்க மக்கள் சரிவர உணரவில்லை. பிறகு வியப்படைந்து தங்களிடையே ஒப்பற்ற கதாசிரியர் ஒருவர் தோன்றியிருப்பதை அறிந்து அவரைப் பாராட்டத் தொடங்கினர். ஆனால் இந்தப் பாராட்டுதலைப் பெறுமுன், கதாசிரியர் ஸ்டீபன் க்ரேன் இறைவனடியைச் சேர்ந்து விட்டார்.

நோபல் பரிசு பெற்ற நாவலாசிரியர் ஹெமிங்வே அவர்களுக்கு, ஸ்டீபன் க்ரேனின் கதைகள் பெரிதும் வழிகாட்டியாக இருந்தன என்று கூறுவார்கள். ஹென்ரி ஜேம்ஸ், எச். ஜி. வெல்ஸ், ஜோஸப் கான்ராட் ஆகிய ஆசிரியர்கள் இந்த மேதையின் கதைகளை மிகவும் பாராட்டியிருக்கிறார்கள். தமிழ் மக்களுக்கு இத்தகைய எழுத்தாளரின் கதைகளைப் பிரசுரகர்த்தர்கள் அறிமுகம் செய்து வைத்து, நல்லதொரு தொண்டு புரிந்திருக்கிறார்கள் என்றே கூறவேண்டும். மொத்தம் ஒன்பது கதைகள் இந் நூலில் சுருக்கமாக வெளியிடப் பட்டிருக்கின்றன.

நூலின் தமிழாக்கம் நன்கு தடையின்றிச் சரளமாக அமைந்திருக்கிறது.

பிரசுரம்: பேர்ல் பப்ளிகேஷன்ஸ் (பி) லிமிடெட். கிடைக்குமிடம்: 193, மவுண்ட் ரோடு, சென்னை. விலை 75 ந. பை.



ஒரு
ராலேயை
நீங்கள்
சொந்தமாக
வைத்திருப்பதில்
பெருமை
யடைவீர்கள்








# ராலே

SRC 51 TH

---

## பிரகாசிக்க

உங்கள் பித்தளை, செம்பு
சாமான்களை தினசரி

# பிராஸோ

வால் துலக்குங்கள்






PSAE 22






# கைம்மாறு

## பி. வி. ஆர்

மலையாள மழை. எரிந்து எரிந்து அணையும் மின் விளக்கைப் போல விட்டு விட்டுப் பெய்து கொண்டிருந்தது. ஜன்னல் வழியாகப் பார்த்தேன். காவிரியின் ஆடி வெள்ளம் போல் பாரதப் புழை பிரவாகமெடுத்து ஓடிக்கொண்டிருந்தது. அக்கரையெல்லாம் ஒரே தென்னந்தோப்பு. தூரத்தே, காலத்தையெல்லாம் விழுங்கி விழுங்கி மாயாமல் ஓயாமல் கூட்டம் கூட்டமாக மலைகள் பெருகி நின்றன. இரவு முழுதும் வார்டு வார்டாக நடந்து நடந்து வலி கண்ட கால், நாற்காலியில் உட்கார்ந்து, அப்போதும் இப்போதுமாகப் பூனைத் தூக்கம் தூங்கிய தூக்கத்தில், இரத்தம் கட்டி நின்றது. மணியைப் பார்த்தேன். மூன்று. நேரம் தெரியாமல் சூரியன் மலைக் கூட்டத்தில் மறைந்து விட்டானோ என்று தோன்றும்படியாக அந்த மன நேரம்போல் வானம் காட்சியளித்தது. மெல்லென வீசிய குளிர் காற்று தூக்கக் குழந்தைக்குத் தாலாட்டுப் பாட, நான் என்னையும் அறியாமல் கண்ணை மூடினேன்.

எத்தனை நேரம் அப்படித் தூங்கி இருப்பேனோ தெரியாது. அரைமணி நேர ஆழ்ந்த தூக்கம் பலமணித் தூக்கமாகப் பிரமை தட்டுவதுபோல, ஒரு பிரமையில் நான் மூழ்க, அந்தப் பிரமையைத் தகர்த்து எறிந்தாள் பார்க்கவி.

நான் விழித்த விழிப்பில், அருமையான தூக்கம் சிதறிய சிதறலில், பார்க்கவிமீதுகூட எனக்கு ஆத்திரம் வரத்தான் வந்தது.

''இரு ... பார்க்கவி. இரு... கதவைப் பிளந்துவிடாதே...வரேன்...'' எவனுக்கும் ஆத்திரத்திலும் அழுகையிலும் தாய் மொழிதானே வருகிறது?

முல்லைப் பூ சிதறுவதுபோல் பார்க்கவி சிரித்துக்கொண்டு நின்றாள்.

''எந்தா சாமிக்கு இவ்வளவு கோபம்? நல்ல ஒரு உறக்கம் அல்லே!'' என்று சொன்ன அவள் என்னையும் தாண்டிக் கொண்டு கூடத்துக்கு வந்தாள்.

அரையில் வெள்ளை வெளேரென்ற மல்முண்டு. மார்பகத்தை மறைத்தது ஒரு ஜரிகை இழைவிட்ட மாவு முண்டு. செண்பகப் பூ நிற ரவிக்கைக்கு, மாவு முண்டின் தங்கநிற ஜரிகை பாந்தமாகப் பட்டது.

என் தூக்கம் பார்க்கவியின் அழகில் மடிந்து விட்டது.

''பார்க்கவி! . . . எனக்குச் சாயா வேணமல்லோ!''

''சாயா அல்லா... சாயை...'' என்று சிரித்த அவள், ''தண்ணி வந்நில்லே!'' என்று கேட்டாள்.

''இல்லே'' என்றேன். 'தண்ணி' சமையற்காரக் கிழவி.

''இல்லான்னு பறையணும்... நிங்களுக்கு ஈ மலையாள பாஷை வருவில்லா!''

''சரி...சாயை தரின்.''

எப்போது ஆ காரத்தை ஐ காரமாக்குவது, எப்போது ஐ யை ஆ வாகச் சொல்லுவது என்று எனக்கு ஆறு மாதங்களாக மலையாளத்தில் இருந்தும், மூன்று மாதங்களாகப் பார்க்கவியுடன் பழகியும் தெரியவில்லை. சினிமா சினிமை ஆகிறது. இல்லை இல்லாவாகிறது. தமிழா, மலையாளமா?... இரண்டும் கலந்த மூன்றாவது பாஷையா...ஏது எப்படிப் போனால் என்ன! பார்க்கவி எனக்குப் பிடித்திருக்கிறாள்... அழகு, யௌவனம், குணம் எல்லாம் இருக்கிறதே அவளிடம்!

பார்க்கவிக்கு வயது இருபதுக்கு மேலிருக்கும். இன்னும் 'யாரும்' *முண்டு கொடுக்க வரவில்லை. அதுக்குக் காரணம் அவளேதான். அவளுடைய அழகேதான். ஒற்றைப் பாலம் ஆஸ்பத்திரியில் அவளுடைய தகப்பனார் ஒரு 'ஆண்' நர்ஸ். நானூறு பறை நெல் 'பாட்டமும்,' (வருஷத்துக்குச் சுமார் ஆயிரம் ரூபாய் நிகர வருமானம்) ஐந்நூறு தென்னை மரங்களும், இரண்டு வீடுகளும் அவனுக்குச் சொந்தம். ஒரு வீட்டைப் பதினைந்து ரூபாய்க்கு வாடகைக்குக் கொடுத்திருந்தான்.

வாடகை கொடுக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்திருக்கிறது.

'ஆண்' நர்ஸ் குஞ்சிராமமேனனுடைய ஒரே பெண் பார்க்கவி. மனைவியும் பெண்ணுமாகச் சொத்தை ஒரு காக்காயும் கொத்தாமல் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். சம்பளத்தில் வீட்டுச் செலவு ஓடிப்போக, சொத்தின் வருவாய் சொத்தை வளர்த்து வந்தது.

'பெண்' நர்ஸ்களைக் கண்டே பயப்படும் குஞ்சிராம மேனன், மனை

---

* முண்டு கொடுத்தல் - திருமணம்.

வியைக் காண்பதற்கும் பயப்படுவான். இத்தனைக்கும் மாதவி அம்மாள் அப்படி ஒன்றும் ராட்சசி அல்ல. பெரிய இடத்திலிருந்து வந்தவள். பணக்காரக் கம்பீரமும், அவளுடைய அளந்து பேசும் சுபாவமும், தனக்கு யாரும் வேண்டாம் என்ற அலட்சிய மனோபாவமும் குஞ்சிராமமேனனை சதா ஒரு தயக்கத்தில் ஆழ்த்திக் கொண்டே இருக்கும். இப்பேர்ப்பட்ட தம்பதிக்கு ஒரு பெண் பிறந்தால் எப்படியிருக்க வேண்டுமோ, அப்படி இருந்தாள் பார்க்கவி. பணக்காரக் களை. அப்பனைப் போல் இளகிய நெஞ்சம். ஆனால் அம்மாளைப் போன்ற அலட்சியப் பேச்சு. அதுவும் வெட்டி முறித்துச் சாய்ப்பது போல. நல்ல குணத்தோடு, பிடித்தவர்களுடன் பேச ஆரம்பித்து விட்டால் அவ்வளவுதான். மலையாள மழை போலத் தான். அதை எவ்வளவு இன்பமாக ரசிக்கலாமோ, அவ்வளவு பார்க்கவியின் பேச்சையும், குரலையும், சிரிப்பையும், முகபாவ மாற்றங்களையும் ரசிக்கலாம்.

பழகப் பழக, அவள் புடமிட்ட பொன்னைப் பிரகாசித்தாள். பேசப் பேச, நீர் விழ விழ மின்னும் பளிங்காக மின்னினாள். அவளுடைய கூரிய கண்கள் இதயத்தைக் கிழித்துப் பார்க்கையில் தன் இதயத்தின் புகைப் படத்தைக் காட்டுவாள். உணர்ச்சி வேகத்தில் கண்களில் நீர் மல்க நிற்கையில், நீரை விட்டு வெளியே இரு கரு நாவற்பழங்கள் உருளுகின்றனவோ எனத் தோன்றும்.

அழகை எப்படி வேண்டுமென்றாலும் வர்ணித்துக்கொண்டே போகலாம். ஆனால் என்ன பயன்? பார்க்கவியிடம் தெய்வத்துக்குப் பிடித்த அழகை மட்டும்தானா நான் கண்டேன்? மனிதனுக்கு வேண்டிய கவர்ச்சியும் இருக்கிறதே!

இந்தப் பார்க்கவி, ஏன் என் வாழ்க்கைப் பாதையின் ஒரு திருப்பமாக வந்திருக்கிறாள்! இல்லை, நான்தான் நேராகச் செல்லும் பாதையைத் திருப்பி விட்டு, அதில் திரும்பி நடக்கிறேனா?

நான் இவ்வளவு தூரம் நினைக்கிறேனே அவளைப் பற்றி, அவள் என்ன நினைக்கிறாள்? சிரிப்பிலும், களிப்பிலும் எதை ஒளித்து வைத்திருக்கிறாள்? கண்களின் மின்னலில் எதைப் புதைத்திருக்கிறாள்? இதயப் பேழையில் எதைப் பூட்டி வைத்திருக்கிறாள்?—எனக்குத் தெரியவில்லை.

அவளுக்குத் தெரியுமா? — அதுவும் தெரியவில்லை.

* * * *

“ஏந்தா பின்னேயும் உறங்ஙியோ?” சிந்தனையினின்றும் விடுபட்ட நான் தேநீரும் கையுமாகப் பார்க்கவி நிற்கக் கண்டேன். ஒரு மூக்காலியில் அதை வைத்து விட்டு அவள் நின்றாள். தேநீரினின்றும் ஆவி வடிவமில்லா வடிவத்தில் மேலெழுந்து






'' இப்போ மார்க்கெட் இருக்கிற நிலவரத்திலே நான் என் மூளையை யெல்லாம் அரிசி வியாபாரத்திலேதான் உபயோகப்படுத்திக்கிட்டு வர்றேன் !''

'' அப்படிச் சொல்லுங்க! அதான் அரிசியிலே வெறும் களிமண் உருண்டையா கிடக்குது !''

---

வந்தது. அவளுடைய கண்களின் குறுகுறுப்புப் பார்வையும் புன்னகையும் சேரவே நான் என்னை மறந்தேன்.

'' எந்தா ! சாயை வேண்டே....''

நான் என் சுய நினைவுக்குத் திரும்பியவனாய், தம்ளரை எடுத்தேன்.

'' உனக்கு ?''

'' ஹோய்.... வேண்டா..... இப்பத்தன்னே கழிச்ச....'' என்ற அவள் அடுத்த நிமிடம் ''நானும் அம்மையும் பாலக்காட்டிலேய்க்குப் பூவாம் போகுந்நு.....'' என்றாள்.

'' எதற்கு ?''

'' என்டே அம்மாமன் (மாமன்) மதுராசியிலென்னு வந்திட்டுண்டு. காணான்.''

'' எப்போது ?''

''நாளெ வைகும் நேரம்'' (சாயங்காலம்!) என்று சொல்லிவிட்டு அவள் ரேடியோவைத் திருப்ப ஓடினாள்.

**ம**று நாள்.

ஆஸ்பத்திரியிலிருந்து அதிகாலையில் திரும்பிக் கொண்டிருந்தேன். உடலின் அசதியில் பாக்கெட்டில் இருந்த ஸ்டெதாஸ்கோப் கூட, இரும்பாகக் கனத்தது. பொல பொலவென விடியும் வேளை. பாரதப்புழை ஓரமாக நடந்து நான் இருக்கும் வீட்டுக்குத் திரும்ப இருக்கையில்—

திடீரென ஓலம் ஒன்று வானைக் கிழித்து எழுந்தது. அதிகாலையின் அமைதியில், சூரியனும் சந்திரனும் கொஞ்சம் கொஞ்சம் அளித்த இரண்டுங்கெட்டான் ஒளியில் நான் கண்ட காட்சியில் நானே ஒருகணம் பயந்தேன். அந்தக் கணமே ஒரு யுகமாக விரிந்து ஒரு மின்னல் பார்வையிலேயே எல்லாம் விளக்கமாகத் தெரிந்து நான் என்ன செய்ய வேண்டுமென்று நினைத்துத் தீர்மானிப்பதற்குள், நான் செய்ய வேண்டியதைச் செய்துவிட்டேன்.

பாய்ந்து ஓடும் பாரதப்புழையோடு புழையாக ஓடிய பார்க்கவி அரை பர்லாங் தூரத்தில் துவண்டு கிடக்க நான் மூச்சு வாங்க அருகே நின்றேன். என்னுடைய ஈர நிஜாரும் கோட்டும் இரும்பாகக் கனத்தன. நீரின் சக்தியோடு ஒரே மூச்சாகப் போரிட்டு ஒரு மூச்சைக் காப்பாற்றிய என்னால், மேலே எதுவும் செய்ய இயலவில்லை. சில பெண்கள், 'பார்க்கவி' 'பார்க்கவி' என்று அலறிக்கொண்டு எங்களை நோக்கி ஓடி வந்தார்கள். மாதவி அம்மாள் அலமந்து நின்றாள். ''என்டே குட்டிக்கு எந்தாயி...எந்தாயி...'' என்று கதறினாள்.

நான் கோட்டைக் கழற்றித் தரையின்மீது போட்டேன். அப்போதுதான் 'ஸ்டெதாஸ் கோப்' பறி போனது தெரிந்தது. நேரத்தின் நெருக்கடியிலும் அதை மறக்க முடியவில்லையே?

பத்து நிமிஷங்களில் பார்க்கவி கண் விழித்தாள். ஈர ரவிக்கையும் முண்டும் உடலோடு ஒட்டி நிற்க, அவள் சுற்றிலும் இருந்த எல்லாரையும் ஒரு முறை பார்த்தாள்.

அடுத்த நிமிஷமே வாரிச் சுருட்டிக் கொண்டு அவள் எழுந்தாள்.

'' நான் மரிச்சில்லா....பொழைச்சு...நான் எல்லனேயா மரிக்கும்......குருவாயூரப்பன் அல்லே என்டே தெய்வம்...''

'' அவராணை ஆ தெய்வம் !'' சுற்றியிருந்த ஸ்திரீகளில் ஒருத்தி என்னைச் சுட்டிக் காட்டினாள்.

'' அதே....அதே.... !'' என்றாள் மாதவி அம்மாள்.

''அவரோ...என்டே டாக்டர் அல்லே அவர்... குருவாயூரப்பன் அவரே பறஞ்சு அனுப்பி, நான் மரிக்காண்டு இருக்கான் ! (குருவாயூரப்பன் அவரைச் சொல்லி அனுப்பினார், நான் சாகாமல் இருக்க) ''

பார்க்கவிக்கு எப்படித்தான் சிரிப்பு வந்ததோ ! எனக்குக் கோபம் கூட வந்தது.

எல்லாரும் ஒருவாறு கலைந்து சென்றதும், நானும் பார்க்கவியுமாக மாதவி அம்மாள் பின்தொடர நடந்தோம்.

'' டாக்டர்...நிங்ஙள் எனக்கு உசிரு தந்நு. நான் எந்தா தராம் போணுவோ..... அறியில்லா....''

'' நீ ஒன்றும் தரவேண்டாம்...என்கிட்டே எப்போதும் போல இருந்தா போதும்...''

'' இல்லா...நான் தரும்...நான் நிர்ச்சை (நிச்சயமாக) யாகத் தரும்...ச பரந்த லோகத்திலே நிங்ஙளுக்கு எது இஷ்டமோ அது நான் தரும்...குருவாயூரப்பன் அல்லே என்டே கண் கண்ட தெய்வம்....?''

அவள் உணர்ச்சி வேகத்தில் தன்னுடைய நிலையையும் அறியாமல், உணராமல் பேசிக் கொண்டே போனாள் ! எனக்குக் கைம்மாறு செய்யப் போகிறாளாமே ! அதுவும் இந்தப் பரந்த உலகத்தில் எனக்கு எது மிகவும் இஷ்டமோ, அதைத் தரப் போகிறாளாமே !

அது எதுவாயிருக்கும் ?



# ‘கட்டி முடிப்பு’ச் செய்த பாலிசியாக மாற்றுவது உங்களுக்கு நன்மை தருமா

உங்கள் குடும்பம் ஒரு நிதிநிலைப் பாதுகாப்பினை அடைய வகை செய்வதற்காகவே நீங்கள் இன்ஷ்யூர் செய்தீர்கள். உங்கள் பாலிசியைக் ‘கட்டிமுடிப்பு’ச் செய்த பாலிசியாக (Paid-up Policy) மாற்றுவதன்மூலம் நீங்கள் எந்த நோக்கத்தோடு இன்ஷ்யூர் செய்தீர்களோ அந்த நோக்கமே தோல்விகாண நேர்கின்றது. ஆகவே ‘கட்டி முடிப்பு’ச் செய்த பாலிசியாக ஆக்குவது உங்களுக்கு நன்மை பயக்கும் ஒன்று அன்று.

வாழ்க்கை நிலையிலே ஏற்படுகின்ற மாற்றங்களை உங்கள் ஆயுள் இன்ஷ்யூரன்சுத் திட்டத்தினைக்கொண்டு சரிக்கட்டவேண்டி வர நேரிட்டால் அருகாமையில் உள்ள கார்ப்பொரேஷன் கிளை அலுவலகத்தினரோடு கலந்தறிவது உங்களுக்கு நலன் விளைவிப்பதாகும். உங்களுடைய உண்மையான தேவைகளுக்கு ஏற்றவாறு இல்லாமையால் உங்களுடைய தற்பொழுதைய பாலிசியினைக் ‘கட்டிமுடித்த’ பாலிசியாக மாற்றவேண்டுமென்று யாராவது கூறினால் அண்மையில் அமைந்த கிளை அலுவலகத்தினரோடு தொடர்பு கொள்ளுங்கள்.

எமது கிளை அலுவலக மேலாளர் உங்கள் பாலிசியை ஆய்ந்து தெளிந்து உங்களுடைய இன்றைய பாலிசிக்கு மாற்றமைவு தேவையா என்றும், அப்படிச் செய்வது உங்களுடைய நலனுக்கு ஏற்றதுதானா என்றும் அறிவுரை வழங்குவார்.



உங்கள் ஆயுள் இன்ஷ்யூரன்சினை நடைமுறையில் வைத்திருங்கள். தேவையானால் மேலும் நிதிதனைச் சேருங்கள். ‘கட்டி முடிப்பு’ச் செய்த பாலிசியாக மாற்றாதீர். அது உங்களுக்கு நன்மை தருவது அன்று.

**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

PNB/LIC/AS-II TAM.

பிறந்த உடனேயே, அம்மாவை விழுங்கி, வாழ்க்கையின் அதிகாலையிலேயே அப்பாவையும் தோற்று, எத்தனையோ அநாதைகளில் ஓர் அநாதையாகப் போன எனக்கு உலகில் எது அதிக இஷ்டம்? எது எல்லையில்லாத இன்பத்தை அளிக்கும்?

அது கிடைக்குமா?

கைம்மாறு என்ற பெயரில் பார்க்கவி தன்னைத்தானே கொடுக்கப் போகிறுளோ? அப்படியானல் எத்தனை முறை வேண்டுமானலும் நான் ஓடும் பாரதப் புழையில்-ஏன், கொந்தளிக்கும் கடலில் கூடக் குதிக்கலாமே!

முந்தின நாள் வந்தது போலவே, துடுக்குடன் பேசி மிடுக்குடன் என்னிடம் விடை பெற்றுக் கொண்டு பார்க்கவி சென்றுள், பாலக்காட்டுக்கு. கடைசியாக அவள் சொன்ன வார்த்தைகள் என் நெஞ்சை விட்டு அகலவேயில்லை.

"டாக்டர்...! நான் எத்தறையோ பிராவசியம் மரிக்கணும்னு (எத்தனையோ தடவை சாகணும்) விசாரிச்சிட்டுண்டு. இந்நு மரிக்க எந்நும் தீர்ச்சையாக்கி...அப்போழ் நிங்ஙள் வந்நு எனிக்கு உசிர் வெள்ளம் தந்நு....இனி யாண எனிக்கு நல்ல வாழ்வு கிட்டாம் போணு...."

அழகான ஓவியத்திலே புரையோடி நிற்கும் சோகம் போல் பார்க்கவியின் வெளித் தோற்றம் ஏன் இப்போது ஒரு துக்கத்தைப் பிரதிபலித்தது?

இருபது வயது தாண்டியும் இப்படி இருக்கிறேமே என்ற தவிப்பா?

* * *

பத்து நாட்கள் சென்றன. பூமியை அறைந்து அறைந்து களைப்பு ஏற்பட்டு விட்டாற் போல் மழையும் 'பிசு பிசு' வென ஸ்வரத்தைத் தாழ்த்தலாயிற்று.

பார்க்கவி இல்லாதது ஒன்றுமே இல்லாதது போலப் பட்டது.

குஞ்சிராம மேனனை இரண்டொரு தடவை விசாரித்தேன். ஒன்றும்தெரியவில்லை என்றுன். 'இவனை யார் பார்க்கவியைப் பெறச் சொன்னர்கள்?' என்று கூட ஆத்திரம் வந்தது.

இரண்டு வாரம்.

மூன்று வாரம்.

ஒரு மாதமும் ஆகி விட்டது.

பார்க்கவியின் 'மதராசி அம்மாமன்' ஏன் இன்னும் பாலக்காட்டில் பழி கிடக்கிறுன்? ஒரு வழியாக வந்த இடத்துக்கே திரும்பித் தொலையக் கூடாதோ? பார்க்கவியும் திரும்பி வருவாளே!

ஆத்திர எண்ணங்களில் நாட்களை ஓட்டி வருகையில் -

ஒருநாள் திடீரென்று குஞ்சிராமன் செய்தியோடு வந்தான்.

"பார்க்கவியிண்டே விவாகம் தீர்ச்சையாயி!"

விவாகம் நிச்சயமாகிவிட்டதா? என் மனக் கதவை யாரோ உதைத்து உடைத்துவிட்டார்கள். கண்கள் இருண்டன.

"அவள்டே அம்மாமன் அச்சுதன்டே நிரேநிதஞண...கொல்லங்கோடாண ராஜ்யம் நல்ல ஒரு தற்வாடு (குடும்பம்)"



"நீங்க சொன்னபடியே சொறி சிரங்குக்கு அந்தக் களிம்பு தடவினேன். சிரங்கு போய் விட்டது! இப்போது அந்தக் களிம்பு போவதற்கு ஏதாவது வழி சொல்லுங்கள்!"

யாரானல் என்ன? எந்தக் குடும்பமானல் என்ன? நான் மட்டும் அவலம் கெட்ட குடும்பத்தில் பிறந்தேனு?

பார்க்கவி எனும் மலர் என் கண் முன்னே வாடி வதங்கி மறைந்தது. ஆனல் அதன் மணம் மட்டும் அகலாமல் இன்னும் ஒட்டிக் கொண்டிருக்கிறதே?

* * *

மேலும் ஒரு வாரம் சென்றது. மாதவி அம்மாளும் பார்க்கவியும் பாலக்காட்டிலிருந்து திரும்பி நான்கு நாட்களாகிவிட்டன. ஒரு தடவை கூடப் பார்க்கவி வரவில்லை. எப்படி வருவாள்? இன்னும் பத்து நாட்களில் கொல்லங்கோட்டில் ஒரு நல்ல குடும்பத்தில் உதித்த ரத்தினத்தைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறுளே! என்னையா ஞாபகத்துக்கு வரும்? அவள் பாரதப் புழையின் சுழலிலிருந்து தப்பினுள்; ஆனல் நான்? என்னை அவள் காப்பாற்றத் தவறி விட்டாள்!

ஐந்தாம் நாள்.

"டாக்டர்!" சிரிப்பொலி கேட்டது.

"என்ன பார்க்கவி அம்மாளா!"

"இனியும் அம்மை ஆயிட்டில்லா! எந்தா சுகம் தன்னேயோ!"

"ஆமாம்...சுகம்தான்...பரம சுகம். சுகத்துக்கு என்ன கேடு..."

"எந்தா துக்கம்!" என்று ஒரு கணம் என்னைப் பார்த்தாள். என் பார்வையின் அர்த்தம் அவள் பார்வையிலும் பிரதிபலித்தது. அடுத்த கணமே சிரிப்பும் பேச்சும் தடைப்பட்டு நின்றன.

அவள் திரும்பிச் சென்றாள். அவள் முகத்தில் படர்ந்த சோக ரேகைகளின் அர்த்தம் தான் தெரியவில்லை.

பத்து அடி சென்றவள் மீண்டும் திரும்பிப் பார்த்தாள். ஏதோ பேச உதடுகள் துடித்தன. கண்களில் நீர் முட்டி நின்றது.

ஒரு கண நேரத்தில் அவள் தன் முடிவை மாற்ற மாட்டாளா என்று ஏங்கியது என் உள்ளம். விதி என்று ஒன்று இருக்கையில் அவள் எப்படி முடிவை மாற்றுவாள்?

*　　　　*　　　　*

இரண்டு தினங்கள் சென்றன.

இரவு எட்டரை மணி. ஸ்டெதாஸ்கோப்பைத் தோளில் மாட்டிக் கொண்டு, அர்த்தமற்ற விகாரத்தோடு சிதறிக்கிடக்கும் நட்சத்திரங்களை அருவருப்பாகப் பார்த்தவாறு ஆஸ்பத்திரியை நோக்கி நடந்து கொண்டிருந்தேன். தூரத்தே குஞ்சிராமன் மேனனுடைய வீட்டில் விளக்கு பிரகாசமாக எரிந்து கொண்டிருந்தது. ஆனால் நான் நடக்கும் பாதையில் இருட்டுத்தானே?

பார்க்கவி எனும் மலரின் மணம் கமழ, அம்மணத்தில் நான் மயங்கியவனும் நடக்க, நடையின் நடுவே ஏதோ ஒன்று காலைத் தாக்கியது. 'சுரீர்' என்ற ஊசியின் குத்தலையும், அடுத்த விநாடி சரசர வென்று புதருக்குள் மறையும் உருவத்தையும் நான் கண்டேன்.

தினம் தினம் காலுக்குப் பூட்சைப் போட்டுக் கொள்ளும் நான் ஏன் செருப்புடன் இன்று நடக்க வேண்டும்?

விதியின் கட்டளை.

பாதை முடியப் போகிறது.

நான் அதை இன்னும் நீட்ட ஓடினேன். எனக்குப் பாதை வகுத்திருக்கிறதா? இல்லை, நான் அதை வகுத்திருக்கிறேனா?

நான் ஓடின ஓட்டத்தில் ஒரு விநாடியில் குஞ்சிராம மேனன் வீட்டை அடைந்தேன். என்னதான் டாக்டராக இருந்து, பல நோய்களைக் குணப்படுத்தும் வழிகள் தெரிந்திருந்தாலும் அவனவனுக்கு வரும்போதுதானே, அதனதன் பயங்கரம் தெரியும்? பாம்புக் கடி என்றால் என்ன இலேசா?

நல்ல வேளை! மேனன் இருந்தான். சில இங்கிலீஷ் மருந்துப் பெயர்களைச் சொல்லி அவனை ஆஸ்பத்திரிக்கு விரட்டினேன்.

ரேடியோவிலிருந்து அலறிய இந்திப் பாட்டை நிறுத்திவிட்டுப் பார்க்கவி வந்தாள். விஷயத்தை அறிந்ததும், மணிக்கயிறு ஒன்றை எடுத்துக் கடிவாய்க்கு மேலே கட்டலானாள். கடியின் வலியைவிட, கயிற்றின் பிடிப்பு வலித்தது.

"அம்மே...கோவிந்தன் குட்டியை விளிச்சு அம்பது அறுபது கோழி இப்பத்தன்னே வேணம்னு பறையின். நம்மட மடத்திலே எத்தறை விண்டு...இருபது அல்லே?...அதை வினே கொண்டு வரின்."

எனக்குப் புரிந்து விட்டது. கோழி வைத்தியம். இதை நிபுணன்தானே செய்யமுடியும்?

நான் யோசித்துக் கொண்டிருக்கையிலேயே, பச்சைத் தண்ணீரால் கால்களைக் கழுவினாள் பார்க்கவி. சில நிமிடங்களுக்குக் கடிவாய் இருக்குமிடமே தெரியவில்லை. வெகு சிரமப்பட்டுக் கிடைக்கவும், தாயார் வீட்டில் இருந்த இருபது கோழிகளையும் கூடையோடு கொண்டு வந்து வைத்தாள். கோவிந்தன் குட்டிமூலமாகவும் செய்தி பரவவே, ஆள் கூட்டம் சேர்ந்து விட்டது.

பார்க்கவி முதல் கோழியை எடுத்தாள்.

"குருவாயூரப்பா!...நீ தன்னே ரட்சிக்கணும்!" சொல்லி விட்டு, அதைப் பறக்க விட்டாள். பிறகு ஒரு சிறு கத்தியை எடுத்துத் தான் கண்டுபிடித்திருந்த கடிவாயைக் கீறி விட்டாள். இரத்தம் கசியலாயிற்று. *

இரண்டாவது கோழியின் கழுத்தை அழுத்தப் பிடித்து, சிறகுக் கூட்டத்தை ஒதுக்கி ஆசன வாயைக் கடிவாயில் வைத்தாள்.

கோழி துடித்தது.

துடிப்பு முடிவதற்குள் மூன்றாம் கோழி.... அதன் மரண அவஸ்தை தீரும் முன் நான்காம் கோழி.

கோவிந்தன் குட்டி மூலமாக ஐம்பது கோழிகள் வருவதற்குள், பார்க்கவியின் பத்தொன்பதும் விஷ வெறியில் மடிந்து கிடந்தன.

பார்க்கவிக்கு எங்கிருந்துதான் இத்தனை சக்தியோ! 'குருவாயூரப்பா' 'குருவாயூரப்பா' என்று சதா முணுமுணுத்துக் கொண்டிருந்த அவள் உதடுகள், நடு நடுவே, "வேகம்.... ஆகட்டே-...எவ்விடையா கோழி...." என்பது போன்ற சில கட்டளைகளைக் கத்தியதே தவிர வேறு எதையும் லட்சியம் செய்யவில்லை.

நாற்பத்தெட்டாவது கோழி. என்ன செய்தும் இறக்கவில்லை. வேறு ஒரு கோழியை வைத்தாள். அதுவும் பிழைத்தது.

"அம்மே....நல்ல சாயை கொடுக்கின்... டாக்டர் சாயிக்கு!"

மடிந்து கிடந்த கோழிக் குவியலை, எல்லாரும் சேர்ந்து அப்புறப்படுத்தினார்கள். ஒரு மனித உயிர் பிழைக்க எத்தனை கோழிகள் தியாகம் செய்து விட்டன!

*　　　　*　　　　*

எல்லோரும் திரும்பி விட்டார்கள். அசதி உடலைத் தள்ளியது. கட்டிலில் சாய்ந்து விட்டேன். நடந்ததெல்லாம் கனவாகப் பிரமை தட்டியது.

பார்க்கவி கட்டில் அருகே உட்கார்ந்தாள்.

அவளைப் பார்த்துக் கொண்டே இருந்தேன். என் உயிரை அவளல்லவா மீட்டுக் கொடுத்தாள். நான் என்னையே காப்பாற்றிக் கொள்ளத்தானே அவளைக் காப்பாற்றினேன்!

அவள் பார்த்தாள். பார்வையில், எளிதில் கிடைக்காத வெற்றி அளிக்கக் கூடிய மகிழ்ச்சியும், திருப்தியும் அழுந்திக் கிடந்தன.

'ஈ பரந்த லோகத்திலே நிங்ஙளுக்கு எது இஷ்டமோ அது நான் தரும். குருவாயூரப்பன் அல்லே என்டே கண் கண்ட தெய்வம்?'

அவள் அன்று அதிகாலையில் கூறிய வார்த்தைகள் இப்போதும் ரீங்காரம் செய்தன.

---

* இப்போதும் கதையில் வரும் வைத்தியம் மலையாளத்தில் நடந்து வருகிறது. கோழியின் ஆசன வாய் விஷத்தை மட்டும் இழுத்துக் கொள்ளும் சக்தி பெற்றது. கோழி இறந்து விடுகிறது. கோழி பிழைத்தால் விஷம் இல்லை என்று அர்த்தம்.

---

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs. Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk Madras-10
Managing Editor, T. Sadasivam.

